உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# மயூரகிரிபுராணம்.

மதுரையைச்சார்ந்த சிவகங்கையில்வசித்த

வித்துவான்

## வேதாந்தசுப்பிரமணியபிள்ளை

அவர்களியற்றியது.

—:*:—

இது,

காரைக்குடியைச்சார்ந்த முத்துப்பட்டணம்

## பெரி. நா. சொக்கலிங்கசெட்டியாரும்

மேற்படியூர்

## நா. மு. கு. ராம. சொக்கலிங்கசெட்டியாரும்

கேட்டுக்கொண்டபடி,

யாழ்ப்பாணத்து நல்லூர்

## ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலரவர்கள்

மருகரும், மாணாக்கருமாகிய

## ந. ச. பொன்னம்பலபிள்ளையால்

பொழிப்புரைசெய்து,

யாழ்ப்பாணம் வண்ணார்பண்ணைச்

## சைவப்பிரகாசயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

பார்த்திபஹு ஆவணிமீ.

1885.

# விஞ்ஞாபனம்.

மயூரகிரி என்பது பாண்டிநாட்டிலே தேவாரம்பெற்ற சிவஸ்தலங்களுள் ஒன்றாகிய திருப்புத்தூருக்குச் சமீபத்திலுள்ள சுப்பிரமணியக்கடவுளுக்குரிய ஒரு முக்கியஸ்தலம்; இதனை இக்காலத்திலே குன்றக்குடியென ஒரு பெயரிட்டு வழங்குவார்கள்.

இம்மயூரகிரிபுராணம் ஏறக்குறைய நூறுவருடத்திற்குமுன் மதுரையைச்சார்ந்த சிவகங்கையில்வசித்த வித்துவான் வேதாந்த சுப்பிரமணியபிள்ளை என்பவரால் வடமொழி மயூரகிரி மான்மியத்தினின்று மொழிபெயர்த்துப் பதின்மூன்றுசருக்கங்களையுடையதாகச் செய்யுள்நடையாயியற்றப்பட்டது. இந்நூல் கலியுகவரதராகிய சுப்பிரமணியப்பெருமானது மகிமையையும் அவர், தம்மை மெய்யன்போடு வழிபட்ட அன்பர்களுக்கு வேண்டியவற்றை வேண்டியாங்கு ஈந்தருளியதன்மையையும் தெள்ளிதிற் புலப்படுத்துகின்றது. இம்மையில் வேண்டியபயன்களையும் மறுமையில் முத்தியின்பத்தையும் அடைய விரும்புவோர் இதனைச் சுப்பிரமணியாலயங்கடோறும் மெய்யன்போடு ஓதல் கேட்டல் செய்வார்களாயின் அவர்கள் அப்பயன்களை ஒரு தடையின்றிப் பெறுவார்களென்பது நிச்சயம்.

இப்புராணத்திற்கு, சிறுவரும் எளிதிலுணரத்தக்க நடையுள்ள பொழிப்புரையொன்று எழுதி அச்சிடுவித்துத் தரல்வேண்டுமென்று, காரைக்குடியைச்சார்ந்த முத்துப்பட்டணம் பெரி. நா. சொக்கலிங்கசெட்டியாரும், மேற்படியூர் ரா. ம. கு. ராம. சொக்கலிங்கசெட்டியாரும் கேட்டுக்கொண்டபடி உரைசெய்து அச்சிடுவித்தேன்.

சிலர் இப்புராணத்திலே தெய்வநாயகி திருமணச்சருக்கம் என ஒன்று ஈற்றிலுளதன்றோ அதனை யொழித்துவிட்ட தென்னை என்பாராயின், அது வடமொழி மயூரகிரி மான்மியத்தில் இல்லாமையினாலும், யாழ்ப்பாணத்தைச்சார்ந்த அராலியில்வசித்த

ஒரு பிராமணராற் புதிதாய்ப்பாடிச் சேர்க்கப்பட்டமை சந்தேகமின்றித் தெரிந்தமையினாலும், வடதேயத்திலுள்ள ஏட்டுப்பிரதிகளில் தவிர்க்கப்பட்டமையினாலும், ஸ்ரீலஸ்ரீ சற்குருநாதசுவாமிகளாகிய நாவலரவர்கள் வில்லிபுத்தூராழ்வார் பாரதத்தைத் திருத்தி அச்சிட்டபொழுது அவ்வாழ்வாராற் பாடப்படாது வேறொருவராற் புதிதாய்ப்பாடி ஈற்றிற்சேர்த்த முடிசூட்டுச்சருக்கத்தை யொழித்துவிட்டமையினாலும், ஏனைப்புலவர்களும் பெரியபுராணம் திருவிளையாடற்புராணம் கம்பராமாயணம் முதலியவற்றைத் திருத்தி அச்சுவித்தபொழுது அவற்றிற் புதிதாய்ப்பாடிப் பிறர் சேர்த்த செய்யுட்களை யொழித்துவிட்டமையினாலும் யானும் அச்சருக்கத்தை இதனிற்சேர்த்தல் தவறென் றொழித்துவிட்டேன் என அறிக. இதனை விவேகிகளுணர்ந்து தெய்வநாயகி திருமணச்சருக்கத்தை யொழித்துவிட்டது தவறென்று என்மீது குற்றமேற்றாதிருப்பார்களென்று நம்புகின்றேன்.

இங்ஙனம்,

ந. ச. பொன்னம்பலபிள்ளை.

உ

கணபதி துணை.



திருச்சிற்றம்பலம்.

# மயூரகிரிபுராணம்.



## காப்பு.

பூமேவுதிருமணக்கும்பூவைமலர்நிகர்மேனிப்
புனிதப்புத்தே
ணாமேவுசெல்விபுணர்நான்முகனிந்திரன்முதலோர்
நயந்துபோற்றுந்
தேமேவுகொன்றைபுனைதோகையடிக்கணபதிதாள்
சென்னிசேர்த்திப்
பாமேவுசெந்தமிழான்மயூரகிரிபுராணமது
பகர்தலுற்றாம்.

இதன்பொருள். செந்தாமரையாசனத்தில் வீற்றிருக்கின்ற இலக்குமியைமணஞ்செய்த காசைப்பூவையொத்த திருமேனியையுடைய பரிசுத்தராகிய விட்டுணு, நாவில்வீற்றிருக்குஞ் சரசுவதியைப்புணருகின்ற பிரமா, இந்திரன் முதலானோர் விரும்பித்துதிக்கும் தேன்பொருந்திய கொன்றைப்பூமாலையையணிந்த தோகையடிவிநாயகருடைய பாதங்களைச் சிரமேற்கொண்டு செந்தமிழிற்பொருந்திய பாக்களால் யாம் மயூரகிரிபுராணத்தைப் பாடுவாம். என்றவாறு.

தோகையடிக்கணபதி - மயூரகிரியிலெழுந்தருளியிருக்கும் விநாயகர். செந்தமிழ்மேவுபாவினால் எனக்கூட்டுக. யாம் - தோன்றா எழுவாய். திருமணக்கும் - ஐயுருபுதொக்கது. திருமணக்கும் என்பதில் மணக்கும் என்பதற்கு விளங்குமெனப்பொருள்கொண்டு, திருவை எழுவாயாக்கினு மமையும். இப்பொருட்கு மணக்கும் என்னும் பெயரெச்சம் மேனியென்னும் பெயர்கொண்டதாக்குக. மயூரகிரிபுராணம் - வடநூன்முடிபு. இந்நூலிடையூறின்றி யினிது முடியுமாறு விநாயகவணக்கங்கூறியவாறு.

# பாயிரம்.

## கடவுள் வாழ்த்து.

—:*:—

### விநாயகக்கடவுள்.

சீர்கொண்டதாதையைப்போன்மதன்றனுவைப்பார்ப்பளவிற்சிதையநூறு
நீர்கொண்டநால்வாயன்கரிமுகன்வெண்கோட்டினன்செந்நிறத்தன்வாய்ந்த
ஏர்கொண்டகொன்றைபுனைசெஞ்சடையோனன்பர்மனத்திருக்குங்கடம்ப
தார்கொண்டதிறன்முருகன்றன்முன்னோனிருசரணந்தலைமேற்கொள்வாம்

இ-ள். சிறப்பைப்பொருந்திய பிதாவாகிய சிவபிரானைப்போல மன்மதனுடைய தனுவினைப்பார்க்குமளவிற் சிதையும்படிகெடுக்கின்ற நீர்செறிந்த நான்றவாயையுடையரும், யானைமுகத்தினையுடையரும், வெண்மையாகிய கோட்டையுடையரும், சிவந்த நிறத்தையுடையரும், சிறந்தவழகைக் கொண்ட கொன்றைமாலையைச்சூடுஞ் சிவந்த சடையையுடையரும், அடியார்மனத்திற் குடியிருக்குங் கடப்பமாலையையணிந்த வலிமையையுடைய குமாரசுவாமியினது தமையனும் ஆகிய விக்கினேச்சுரப்பெருமானுடைய இருபாதங்களை யாம் சிரமேற்கொள்வாம். எ-று. சிதையநூறுநீர்கொண்ட என்பதற்குச் சிதையும்படி நூறு நீர்மைகொண்ட எனினும் பொருந்தும். மதன்றனுவை என்பதற்குச் சிவபெருமானுக்கியையப் பொருள்கொள்ளுங்கால், மன்மதனுடைய சரீரத்தையெனவும், விநாயகருக்கியையப் பொருள்கொள்ளுங்கால், மன்மதனுடைய வில்லாகிய கரும்பை எனவுங்கொள்க.

### சிவபெருமான்.

அருளாரும்பிரிதயமதிலான்மாக்கண்மலமதனையகற்றவேண்டிப்
பெருகியதத்துவங்கூட்டிக்கன்மமெலாம்புசிப்பித்துப்பெயர்த்துப்பின்னை
திருமலஞ்செய்திணையடிக்கீழ்நிறுத்திவிளையாட்டயருநிமலஞானப்
பரமசிவன்றிருவடிகள்புத்தியுஞ்சென்னியும்வைத்துப்பரவுவாமே.

இ-ள். திருவுள்ளத்திலருளுண்டாய், ஆன்மாக்களுடைய மலத்தை நீக்கவேண்டி மிகுந்த தநுகரணங்களைக்கூட்டிப் (புவனங்களில் அவ்வான்மாக்கள் செய்த) கன்மங்களனைத்தையும் நுகருவித்துத் தொலைத்துப் பின் மலமறச்செய்து, தமது இருபாதங்களின் கீழிருத்தித் திருவிளையாடலைச்செய்யு நிருமலஞானத்தையுடைய சிவபெருமானது பாதங்களை மனத்திலுஞ் சிரத்திலுமிருத்தி யாம் ஸ்தோத்திரஞ்செய்வாம். எ-று. (௨)

### உமாதேவியார்.

மருவலுறுதன்னையுந்தோற்றுவிருளாய்மறைத்துப்பின்கருணைமல்கிக்
குருவடிவாய்வந்துமலந்தனையகற்றித்தனைச்சிவனைக்குறிப்பிற்காட்டிப்
பெருகியமுத்தியையுயிர்க்குக்கொடுத்தருளுமெந்தாயெம்பெருமான்வாமத்
தருகிருக்குமங்கையற்கணுமையவடன்சரணமலரகத்துள்வைப்பாம்.

இ-ள். பொருந்துகின்ற திரோதானமாகிய தன்னையுந் தோற்றுத விருளாய் நின்று மறைந்து, பின் கிருபைபாலித்துத் தேசிகமூர்த்தமாயெழுந்தருளிவந்து ஆணவமுதலிய மும்மலங்களைக்கெடுத்து, பின் பரையாகிய தன்னையுஞ் சிவத்தையுங் குறிப்பாற்றரிசிப்பித்து, நிறைந்தமுத்தியை ஆன்மாக்களுக்குக் கொடுத்தருளு மெமதன்னையாகிய எம்பெருமானுடைய வாமபாகத்தில்வீற்றிருக்கும் அழகிய கயல்போலுங் கண்களையுடைய உமாதேவியாரது பாததாமரைகளை யாம் சிந்திப்பாம். எ-று. எந்தாய் உமையவள் எனவியையும். (௧)

## சுப்பிரமணியக்கடவுள்.

பிரணவந்தாரகப்பிரமங்குடிலையெனுமோரெழுத்தின்பொருளைப்பேசென்
றரியதிருவடிவணங்காதஞ்சலிசெய்மலரயனைச்சிறையில்வைத்தே[ன்
யுருகியவன்பொடுவணங்குங்குறுமுனிவற்கப்பொருளுமுரைக்கும்வைவே
முருகன்மலரடிமனத்திலுறவணங்கியறிபொருள்களைமுழுதுந்தேர்வாம்.

இ-ள். அருமையாகிய (தம்முடைய) திருவடிகளை நமஸ்கரியாமற் கைகூப்பிவணங்கிய பிரமனைப் பிரணவம் தாரகப்பிரமம் குடிலை என்று சொல்லப்படும் ஏகாக்ஷரத்தின்பொருளைச் சொல்லுக என்று பணித்து, (விடைகூறாமையாற்) சிறையிலேவைத்து, மனமுருகு மன்பிலேவணங்குகின்ற வகத்தியமுனிவருக் கெல்லாப்பொருளையுந் திருவாய்மலர்ந்தருளிய கூரியவேற்படையையுடைய முருகக்கடவுளது செந்தாமரைமலர்போலுந் திருவடிகளை மனத்திற்பொருந்த நமஸ்கரித்து அறியவேண்டிய பொருள்களையெல்லாம் யாம் அறிந்துகொள்ளுவாம். எ-று. (௨)

வேறு.

திருப்பரங்குன்றுநற்செந்திமாநக
ரருட்டிருவேரகமாவினன்குடி.
பருப்பதப்பன்மைகள் பழம்பெய்சோலையம்
பொருப்பினுமுறைபவன்சரணம்போற்றுவாம்.

இ-ள். திருப்பரங்குன்றிலும், நல்ல பெரிய திருச்செந்திப்பதியிலும், அருளையுடைய திருவேரகத்திலும், திருவாவினன்குடியிலும், பலமலைகளிலும், பழமுதிர்சோலைமலையிலும் எழுந்தருளியிருக்கின்ற குமாரசுவாமியினது திருவடிகளை யாம் தோத்திரஞ்செய்வாம். எ-று. (௩)

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

அம்பிகைதன்முலைப்பாலிலறிவுகுழைத்துண்டபிரானழகார்சோம
விம்பமெனுமலர்முகத்தான்றிருமருகல்வணிகப்பெண்விடந்தீர்த்தாண்
ணம்புகின்றசைவரெலாமீடேறச்சமணர்கழுநண்ணச்செய்த [போ
வம்பர்பிரான்றிருஞானசம்பந்தனிணையடிகளுளத்துவைப்பாம்.

இ-ள். உமாதேவியாருடைய திருமுலைப்பாலோடு சிவஞானத்தைக்குழைத்துண்ட தலைவரும், அழகுநிறைந்த வட்டமாகிய சந்திரன்போலும் அலர்ந்த திருமுகத்தையுடையவரும், திருமருகலிலே வணிகப்பெண்ணை விடந்தீர்த்தாண்டவரும், (தம்மை) நம்புகின்ற சைவர்யாருங் கடைத்தேறும்பொ

ருட்டிச் சமணரைக் கழுவேறச்செய்த சிவபெருமானது திருநீற்றையுடையவரும் ஆகிய திருஞானசம்பந்தமூர்த்திநாயனாருடைய உபயபாதங்களை யாம் மனத்துள்வைப்பாம். எ-று. நன்னர்ச்செய்த நீற்றுனெனவியையும். (௬)

## திருநாவுக்கரசுநாயனார்.

மணிவயிற்றிற்சூலைதவிர்த் தங்கையினிற்புனைசூலவன்றோட்டமட்டி
யணிதிகழ்தன்றிருப்பாதஞ்சிரஞ்சூட்டிச்சிவனருமப்பனெம்மான்
பணிவிடையிலுயர்வுற்றோன்வேளாளர்குலம்விளக்கும்பரிதிபோல்வான்
றணிவில்புகழ்த்திருநாவுக்கரையனிருசரணமலர்தலைமேற்கொள்வாம்.

இ-ள். அழகிய வயிற்றிலுள்ள சூலைநோயைமாற்றித் திருக்கரத்திலேந்துஞ் சூலத்தைச் (சிவபூதத்தைக்கொண்டு) வலியபுயத்தில் எழுதுவித்து, அழகுவிளங்குந் தமது திருவடியைச் சிரத்திற்சூட்டி, சிவபெருமான் ஆண்ட அப்பரென்னுந் திருநாமத்தையுடையரும், அப்பெருமானுடைய திருத்தொண்டாண்மிக்கவரும், வேளாளர்குலத்தை விளங்கச்செய்யுஞ் சூரியன்போல்வாரும் ஆகிய குறைவற்ற கீர்த்தியையுடைய திருநாவுக்கரசுநாயனாருடைய இருபாததாமரைகளை யாம் சிரமேற்கொள்வாம். எ-று. (எ)

## சுந்தரமூர்த்திநாயனார்.

நம்பினவன்முனிவினும்பிரிந்தாலுந்தடுத்தாள்வர்நாயன்மாரென்
றம்புவியெலாமறியச்சிவபெருமான்றடுத்தடியனாக்கியையந் [தா
செம்பதுமம்வருந்தநடந்தெடுத்திட்டும்பரவையிடைச்சேர்த்துந்தூ
மெம்பர்மிசையாளவந்தசுந்தரன்றன்பாதமெனதிதயத்தாமே.

இ-ள். (தம்மை) நம்பியிருந்தவன் கோபத்தாற்பிரிந்தாலுந் தடுத்தாட்கொள்வர் யசமானரென்று அழகிய உலகமெல்லாமறிய, சிவபெருமான் தடுத்தாட்கொண்டு, செந்தாமரைமலர்போன்ற திருவடிகள்வருந்த நடந்து பிச்சையையேற்றுக்கொடுத்தும், தூதுசென்றமையாற் பரவையாரிடத்திற் சேர்த்தியும், இவ்வாறிவ்வுலகத்தே யாட்கொள்ளுமாறு திருவவதாரஞ்செய்த சுந்தரமூர்த்திநாயனாருடைய திருவடிகள் அடியேன்மனத்துவவாம். எ-று.

## மாணிக்கவாசகசுவாமிகள்.

கன்னலின்சாறடுபாகுதன்னின்முறித்தெடுத்திடுமக்காரம்போலப்
பன்னியிடுமாரியத்திற்றென்மொழியின்புளதுநற்பாடுகென்ன
வந்நிலையேகோவைதிருவாசகத்தானரன்றன்னையன்பிற்பாடுந்
தன்னிகரின்மாணிக்கவாசகனார்திருவடியெந்தலைமேற்கொள்வாம்.

இ-ள். கருப்பஞ்சாற்றைக்காய்ச்சினமையாலாய பாணியினின்று முறித்தெடுக்கும் வெல்லக்கட்டிபோல, சொல்லப்படுகின்ற ஆரியத்தினுந் தமிழ்மொழிசிறந்ததாகலின், அத்தமிழ்மொழியாற் பாடுகவென்று சிவபெருமான் திருவாய்மலர்ந்தருள, அப்படியே திருக்கோவையாராலும் திருவாசகத்தாலும் அச்சிவபெருமானை அன்பினாற்பாடிய தமக்கு நிகராவார் பிறரில்லாத மாணிக்கவாசகசுவாமிகளுடைய திருவடிகளை நம் சிரமேற்சூடுவாம். எ-று.

## திருநந்திதேவர்முதலியோர்.

காற்றெனினுங்கரந்தேகாக்காவல்புரிதிருநந்திகழல்கள்போற்றி
மாற்றருஞ்சீர்க்கண்ணப்பர்சிறுத்தொண்டரியற்பகையார்மலர்த்தாள்வாழ்
கூற்றையகண்மார்க்கண்டர்சண்டேசரடிதலைமேற்கொண்டுநாளு [த்திக்
மேற்றினமர்சிவனடியார்யாவரவர்மலர்ப்பதமும்மிறைஞ்சுவாமே.

இ-ள். (அருவமாகிய) காற்றாயினும் மறைந்துசெல்லாமற் காவல்செய்யும் திருநந்திதேவருடைய திருவடிகளைத் தோத்திரஞ்செய்து, நீக்கற்கரிய சிறப்பினையுடைய கண்ணப்பநாயனார் சிறுத்தொண்டநாயனார் இயற்பகைநாயனார் ஆகிய இவர்களுடைய தாமரைமலர்போன்ற திருவடிகளைத்துதித்து, யமனைவென்ற மார்க்கண்டேயமுனிவர் சண்டேசுரநாயனார் ஆகிய இவர்களுடைய திருவடிகளைச் சிரமேற்சூடி, இடபவாகனத்தில்வீற்றிருக்குஞ் சிவபெருமானுடைய அடியார்கள் எவர்களோ அவர்களுடைய தாமரைமலர்போன்ற திருவடிகளையும் நாடோறும் யாம் வணங்குவாம். எ-று. ()

## சரசுவதி.

சேவுயர்கொடியோன்புள்ளரசுயர்த்தோனன்னவாகனத்தினன்றேவ
காவலன்வசிட்டன்முதலியமுனிவர்காசினியோர்கள்கீழுலகின் [ர்
மேவினரெவருமூமராகாமேவிளங்குறுதொழிலெலாநடப்ப
நாவுறைகலைமாமடந்தைதன்சரணநளினமாமலர்வணங்குதுமே.

இ-ள். இடபத்தை உயரச்செய்த கொடியையுடைய உருத்திரர், கருடனை (வாகனமாகக்கொண்டமையால்) உயரச்செய்த விட்டுணு, அன்னத்தை வாகனமாகக்கொண்ட பிரமா, இந்திரன், வசிட்டர்முதலிய இருடிகள், பூமியிலுள்ளவர்கள், பாதலவுலகத்திலிருக்கின்றவர்கள் ஆகிய எவர்களும் ஊமர்களாகாமல், விளங்குகின்ற எல்லாத்தொழில்களும் நடைபெற நாவிற்குடிகொண்டிருக்கும் மேன்மைபொருந்திய சரசுவதியினுடைய பாதமாகிய தாமரைமலர்களை யாம் வணங்குவாம். எ-று. புள்ளரசுயர்த்தோன் என்பதற்குக் கருடக்கொடியோன் எனினும்பொருந்தும். (கக)

## வாழ்த்து.

அரசர்தஞ்செங்கோல்வாழ்கவந்தணர்வேள்வியார்க
பெருநிலம்வளங்களீண்டமாதமும்மழைகள்பெய்க
மருவுசைவவாய்மைமன்னுகவுலகிற்றன்ம
மிரவியுள்ளளவும்பார்மேலிருக்குகயாஞ்செய்நூலே.

இ-ள். அரசருடைய செங்கோல்வாழ்க; பிராமணர்களுடைய யாகங்கள்நிறைக; பெரியபூமி வளங்கள்நிறைக; மாதங்கடோறு மும்மழைபெய்க; சைவசமயத்தின் உண்மைபொருந்துக; உலகத்திற் றருமநிலைபெறுக; யாஞ்செய்யுமிந்த மயூரகிரிபுராணம் பூமியின்மேற் சூரியனுள்ளவரையுமிருக்குக. எ-று. (கஉ)

## அவையடக்கம்.

ஐயிரண்டுகலந்தழுவியக்குற்றமகற்றிமதமேழுமாக்கிச்
செய்யுமியற்புலவோர்கள் கவிபுனையுஞ்செவ்வேயென்சிறியசொல்லு
மெய்யிலணிந்திடுவர்கங்கைப்பெருக்கிருக்குஞ்சிவன்சென்னிமிசையேயன்பர்
கையினிடையெடுத்தாட்டுங்குளப்புனலுமவனியின்கட்களிகொள்வாரே.

இ-ள். சிவபெருமான் கங்கைப்பெருக்கிருக்குந் தமது திருமுடியின் மேல் பூமியின்கண் அடியவர்கள் கையாலெடுத்தபிஷேகஞ்செய்யுங் குள நீரையும் மகிழ்வர். ஆகலின், (சுருங்கச்சொல்லன்முதலிய) பத்தழகையுந் தழுவி, (குன்றக்கூறன்முதலிய) பத்துக்குற்றங்களையுநீக்கி, (உடன்படன் முதலிய) எழுவகைமதங்களையும் நிறுவி, (பாக்களை அணிபெறச்)செய்கின்ற இயற்றமிழ்ப்புலவர்களுடைய பாமாலையைத்தரித்தருளும் முருகக்கடவுளா னவர் எளியேனுடைய புன்சொல்லாலாய பாமாலையையுந் திருமேனியிலே தரித்தருள்வர். எ-று. (௧௰)

வேறு.

செம்பினிற்செறியுங்களிம்பினையமலஞ்
செய்திடுங்குளிகைபோலியானை
கம்பமால்களிற்றினரசர்வந்தெதிர்கொள்
கவிமதச்செருக்குறும்புலவீர்
தும்பிமாமுகத்தோன்றுணைவன்வாழ்மயூரத்
தொல்கிரிபுராணமதிசைத்தே
னம்புவியுவப்பமறுவிலாவணிசெய்
தன்புடன்கொள்கநன்றெனவே.

இ-ள். செம்பிற்பொதிந்தகளிம்பைச் சுத்தமாக்கும் ரசகுளிகையைப் போலுந் தூணொடுக்கும் மதமயக்கம்பொருந்திய யானையையுடைய அர சர்களும் வந்தெதிர்கொள்ளுங் கவிமதச்செருக்கையுடைய புலவீர்காள்! யானைமுகத்தையுடைய விக்கினேச்சுரனுடைய தம்பியாகிய முருகக்கட வுள் எழுந்தருளியிருக்கும் பழைய மயூரகிரிபுராணத்தை யான் பாடினேன்; பூமியிலுள்ளார் மகிழுமாறு குற்றமில்லாத அலங்காரத்தைச்செய்து அன் போடு நன்மையையுடைத்தென்று கைக்கொள்ளக்கடவீர்கள். எ-று. அனையபுலவீர் எனக் கூட்டுக. (௧௧)

வேறு.

வாதராயணன்சூதனுமுனிவற்குவழங்கச்
சூதமாமுனிவனத்துறைமுனிவர்க்குச்சொன்ன
வாதியாகியபுராணமூவாறினுட்சிவனை
யோதுதொல்கதைபத்தெனமொழிவர்நன்குணர்ந்தோர்.

இ-ள். வேதவியாசமுனிவர் சூதமுனிவருக்குபதேசிக்க, சூதமகாமு னிவர் நைமிசாரணியத்தில்வசிக்கின்ற முனிவர்களுக்குபதேசித்த முதன் மையவாகிய பதினெண்புராணங்களுட் சிவபுராணங்கள் பத்தென்று கூறு வர்பெரியோர். எ-று. (௧௨)

அன்னபத்தினுளதிகமாஞ்சைவமாங்கதனிற்
பின்னராயகூறுருத்திரசங்கிதைபேசும்
வன்னமாமயிற்கிரியதுமகிமையைவடநூல்
சொன்னவாறியான்றமிழினாற்சொல்லுதலுற்றேன்.

இ-ள். அச்சிவபுராணங்கள் பத்தினுள், சைவபுராணம் விசேடமுடைத்தாம். அப்புராணத்திற் பிற்பகுதியாகிய உருத்திரசங்கிதை அழகிய பெரிய மயூரகிரியின் பெருமையைக்கூறும். (அதனை) வடமொழியிற் கூறப்பட்டபடி. எளியேன் தமிழ்மொழியாற் பாடத்தொடங்கினேன். எ-று. (கரு)

பாயிரமுற்றிற்று.

---

முதலாவது

## மயூரகிரியின் வரலாறுரைத்தசருக்கம்.

பரிதியனையதிகிரியொன்றுபதுமன்செலுத்துமதனாலே
பெரியவுலகநைமிசமென்றொருபேர்பேசுமவ்வனத்தின்
முருகுகமழுமலர்க்கொன்றைமுதல்வனருளான்முழுதுணர்ந்த
திருகுசினவெம்பகைகடந்ததெய்வச்சூதன்சென்றடைந்தான்.

இ-ள். சூரியன்போலும் ஓர்சக்கரத்தைப் பிரமா உருட்டுங்காரணத்தால் மேன்மையையுடைய உலகம் நைமிசமென்றொரு பெயரைச்சொல்லும் அந்த ஆரணியத்தில், வாசனைகமழுங் கொன்றைமலராலாகிய மாலையையணிந்த சிவபெருமானுடைய திருவருளால் முழுதையுமறிந்த மாறுபடுங்கோபமாகிய கொடியபகையைவென்ற தெய்வத்தன்மைபொருந்திய சூதமகாமுனிவர்போய்ச்சேர்ந்தார். எ-று. (க)

அறமோருருவமெடுத்தனையசூதன்வரலுமாங்கிருந்த
துறவோரெல்லாமெதிர்கொண்டுதொழுதுபிரியக்கடற்படிந்து
மறையோய்வருகவெனவழைத்துத்தவிசினிருத்திமற்றவற்குக்
குறையாவுபசாரங்கொடுத்துப்பின்னர்வணங்கிக்கூறுவரால்.

இ-ள். தருமமே ஓர்வடிவத்தையெடுத்தாற்போன்ற சூதமகாமுனிவர் சேருதலும், ஆண்டிருந்த முனிவரனைவரும் எதிர்கொண்டு அஞ்சலித்து, அன்பாகிய கடலிற்படிந்து, முனிவரரே ஈண்டுவருக என்றழைத்து ஆசனத்திலிருத்தி, அவருக்குக் குறைவில்லாத உபசாரங்களைச்செய்து, பின்பு நமஸ்கரித்து விண்ணப்பஞ்செய்வார்கள். எ-று. (உ)

சிவன்வாய்ப்பிறந்தசொல்லமுதஞ்சேருமிடமேயாங்கள்செயுந்
தவமேதாவர்த்துறுபலமேதளராநல்லகுணக்குவையே
யவமேபொழுதுகழித்தேமையரன்றன்கதையாமமுதருத்திக்
கவலைச்சுகந்தந்தளிக்கவருங்கருணைக்கடலேபோற்றியென.

இ-ள். சிவபெருமானுடைய திருவாயினின்றுந்தோன்றிய திருவாக்காகிய அமுதஞ்சேருமிருப்பிடமே, யாங்கள்செய்ததவங் கூடிவந்தடைந்த பிரயோசனமே, தளர்ச்சியில்லாத நல்ல குணமலையே, வீணாய்க் காலத்தைக் கழித்த வெம்மைச் சிவபெருமானுடைய சரித்திரமாகிய அமுதத்தை உண்பித்துத் துன்பமற்ற சுகத்தைத்தந்து காக்கவந்த கிருபாசமுத்திரமே காத்தருளுகவென்று விண்ணப்பஞ்செய்து, எ-று. (௫)

பின்னுங்குகன்றன்கதைகேட்கநயந்தோமெனப்பின்னுசான்றசைவ
மன்னும்புகழ்சேருருத்திரசங்கிதையின்மயின்மாமலைப்பெருமை
பன்னுமதனைவீணைமுனிபங்கேருகத்தோன்றனைக்கேட்பச்
சொன்னபடியான்சொல்வனெனச்சொல்வான்முனிவர்க்குயர்சூதன்

இ-ள். பின்னரும் முருகக்கடவுளுடைய சரித்திரத்தைக்கேட்க விரும்பினோமென்று நைமிசாரணியமுனிவர்கள் விண்ணப்பஞ்செய்ய, உயர்ச்சி பொருந்திய சூதமகாமுனிவர், சிவபெருமானுடைய சைவபுராணத்திலே பொருந்துங் கீர்த்தியையுடைய உருத்திரசங்கிதையிலே மயூரகிரியின்பெருமை சொல்லப்படும். அதனை நாரதமுனிவர் பிரமாவைக்கேட்க, அவர் அந்நாரத முனிவருக் குபதேசித்தபடியே யான் சொல்வேனென்று அம்முனிவர்களுக்குக் கூறுவார். எ-று. பின்னரும் விண்ணப்பஞ்செய்யவென்றிசையும்.

வேறு.

திருநிறையுலகுக்கெல்லாஞ்சிரமணியாகியவரும்
பொருவில்சத்தியலோகத்திற்புரந்தரன்முதலவானோ
ரருமைசால்வசிட்டனாதிமுனிவராதிகள்போற்றிப்
பரவவீற்றிருந்தானெல்லாவுலகமும்படைத்தமேலோன்.

இ-ள். வளம்நிறைந்த சகல உலகங்களுக்குஞ் சிரோரத்தினமாயிருக்கும் உவமையில்லாத சத்தியலோகத்தில், சகல உலகங்களையும்படைத்த பிரமா, இந்திராதிதேவர்களும் அருமைமிகுந்த வசிட்டர்முதலிய முனிசிரேட்டர்களும் பாதங்களைவணங்கித் தோத்திரஞ்செய்ய வீற்றிருந்தார். எ-று. ()

அத்திருவவையின்வைகுமகதியாழ்வல்லோனான
வித்தகனெழுந்துநின்றுவிளம்புவான்குமரவேண்மேற்
பத்தியையுடையோர்தம்மின்முதல்வபாரதிமணாள
புத்திமுத்தியினையன்புபுரிபவர்க்கருளுமெந்தாய்.

இ-ள். அந்த அழகியசபையிலிருக்கும் மகதியாழில் வல்லராகிய சாதுரியத்தையுடைய நாரதமுனிவர் எழுந்துநின்று கூறுவார்: குமாரசுவாமியின்மீது அன்பையுடையவர்களுள்ளே தலைவரே, சரசுவதிக்கு நாயகரே, போகமோக்ஷங்களை அன்புசெய்பவர்களுக்குக்கொடுக்கும் எம்பெருமானே, எ-று. மகதியாழ் - நாரதமுனிவருடைய யாழ். (௭)

நல்லனகுணங்கட்கெல்லாமுறையுளாநாதவெல்லாம்
வல்லவபரமானந்தவாரியேமணமார்தெய்வக்
குல்லையந்தாரான்மைந்தகுறைவில்பல்லுயிரும்பெற்றோ
யெல்லையில்புகழோயென்றேவத்தினன்பின்னுங்கூறும்.

இ-ள். நற்குணங்கட்கெல்லா மிருப்பிடமாந்தலைவரே, எல்லாவற்றினும் வல்லவரே, சிவானந்தசாகரமே, மணநிறைந்த தெய்வத்தன்மைபொருந்திய துழாய்மாலையையணிந்த விட்டுணுமூர்த்தியுடைய புதல்வரே, குறைதலில்லாத பல ஆன்மாக்களையும் பெற்றவரே, அளவிறந்த கீர்த்தியையுடையவரே என்று துதித்துப் பின்னருங் கூறுவார். எ-று. (எ)

மேருவின்கீழ்பாலைம்பான்கோடியாமேற்குமற்றே
பாரின்யோசனையாமீதிற்பராரைநன்னாவற்றீவே
சேருநன்னிலமாமீதுங்கண்டமொன்பதுவாய்ச்செப்பு
மோருமிவ்வருடந்தன்னினுயர்நிலம்பரதகண்டம்.

இ-ள். பூமியின்யோசனை மேருமலைக்குக்கிழக்கே ஐம்பதுகோடியாம். மேற்கினும் ஐம்பதுகோடியாம். இதில் சம்புத்தீவே இயைந்த விசேடத்தானமாம். இச்சம்புத்தீவும் நவகண்டங்களாகச் சொல்லப்படும். ஆராயப்படும் இந் நவகண்டங்களுள் விசேடத்தானம் பரதகண்டமாம். எ-று. வருடம் - கண்டம். (அ)

பாரதகண்டமொன்பான்பாகமாமதனினல்ல
வேர்கெழுகருமபூமியதிகமாமெவ்வாறென்னிற்
கூறிருவினையுமிங்ஙன்செய்துபின்பலன்கூட்டுண்ப
தியாருமற்றிடங்களென்பவறிந்திசினோர்கண்டன்றே.

இ-ள். பரதகண்டம் ஒன்பதுபகுதியதாம். அவ்வொன்பதுபகுதிகளுள் நல்ல அழகுவிளங்குகின்ற குமரிகண்டம் விசேடமுடைத்தாம். எங்ஙனமெனின், யாவரும் சொல்லப்படு மிருவினைகளையும் இங்கேசெய்து, பின் (அவற்றின்) பயன்களாகிய இன்பத்துன்பங்களை அநுபவிப்பது ஏனையிடங்களில் என்று அறிந்தோர்சொல்லுவர் ஆகலான். எ-று. (௯)

ஆயதோர்கருமபூமியமர்ந்தபல்கிரிகடம்மிற்
றூயமாமயூரவெற்பிற்சுப்பிரமணியமூர்த்தி
மேயதென்மேவற்கேதுவென்கொலோவிரும்பியங்கட்
டாயனான்விளையாட்டென்கொல்சார்தருவனப்பேர்யாதோ.

இ-ள். அந்தக் குமரிகண்டத்திலேயிருக்கின்ற பலமலைகளுள்ளே பரிசுத்தமாகிய பெரிய மயூரகிரியில் சுப்பிரமணியப்பெருமான் எழுந்தருளியிருப்பதென்னை? அங்ஙனமெழுந்தருளியிருப்பதற்குக் காரணமென்னை? மாதரைவட்போனு மவர் அவ்விடத்தில் விரும்பிச் (செய்யுந்) திருவிளையாடலென்னை? (அம்மயூரகிரி) சார்ந்தவனத்தின் பெயரென்னை? எ-று. (௧௦)

குடைந்தவர்பாவம்போக்கிக்கோதறுகதியினுய்க்கக்
கிடந்துளதருமதீர்த்தமெத்துணைகிளிபோன்மென்சொன்
மடந்தையரிருவரோடுமற்றவன்றனைப்பூசித்து
நெடுந்தயாவுடனேபேறுபெற்றிடுநிமலர்யாரே.

இ-ள். ஸ்நானஞ்செய்தவர்களுடைய பாவங்களைக்கெடுத்துக் குற்ற மற்றகதிகளிற் செலுத்தும்படி இருக்கின்ற தருமத்தையுடைய தீர்த்தங்க ளெத்தனை? கிளிபோலு மிருதுவாகிய சொற்களையுடைய (தெய்வயானையம் மையார் வள்ளிநாயகியார் என்னு) மிருசத்திகளோடும் அந்தச் சுப்பிரமணி யப்பெருமானை அருச்சித்து மிக்க ஆசையோடு பேற்றைப்பெற்ற பரிசுத் தர்கள்யாவர்? எ-று. (௧௧)

இங்கிவையனைத்துமெந்தாய்விரித்திசைத்திடுதியென்னத்
தங்குமுக்குறும்புசாய்த்துத்தவத்தினைநிரப்பியுற்ற
பொங்குசீர்மகதிவீணைநாரதன்புகலக்கேட்டுப்
பங்கயமலரின்வாழும்பரமனுமகிழ்ச்சிகூர்ந்தான்.

இ-ள். இவைகளெல்லாவற்றையும் எம்பெருமானே விரித்துக்கூறியரு ளுகவென்று பொருந்திய (காமம் வெகுளி மயக்கம்) என்னு முக்குற்றங்க ளைக்கெடுத்துத் தவத்தைமுடித்திருந்த மிக்க சிறப்புப்பொருந்திய மகதி யாழையுடைய நாரதமுனிவர் விண்ணப்பஞ்செய்ய, செந்தாமரைமலரில் இருக்கின்ற பிரமாவும் (அதனைக்) கேட்டுச் சந்தோஷமுற்றார். எ-று. (௧௨)

ஏடலர்கமலமன்னமுகமிருமூன்றுங்கண்ணும்
பீடுறுகரமீராறும்பிறங்கியபடையுந்தாளுங்
கோடிமன்மதருமெண்ணில்கோடிசூரியருமொவ்வா
நீடெழிலுருவமாகநெஞ்சினிலிருத்திச்சொல்வான்.

இ-ள். இதழ் விண்டலர்ந்த செந்தாமரைமலர்போலும் ஆறு திருமுக ங்களும், (பன்னிரண்டு) திருக்கண்களும், பெருமைபொருந்திய பன்னிர ண்டு திருக்கரங்களும், விளங்கிய படைக்கலங்களும், (உபய) பாதங்களும் (பொருந்தும்) கோடிமன்மதரும், அளவில்லாத கோடிசூரியரும் நிகராகாத பேரழகையுடைய திருவுருவமாக மனத்திற் றியானித்துச்சொல்வார். எ-று. தாளும் பொருந்தும் நீடெழிலுருவம் எனக் கூட்டுக. (௧௩)

வஞ்சமிலுளத்தராயம்மயின்மலைமகிமைகேட்டோர்க்
கஞ்சபாதகமுநீங்குமையமதில்லையைய
வெஞ்சலிலுலகமுய்யவினிதுநீகேட்டியென்றுக்
கஞ்சநாண்மலரின்மேயகடவுண்மேலருளிச்செய்வான்.

இ-ள். வஞ்சகமில்லாதமனத்தினராய் அம்மயூரகிரியின்பெருமையைக் கேட்டவர்களுக்குப் பஞ்சபாதகங்களு நீங்கும். அதற்குச் சந்தேகமில்லை. புதல்வனே! நீ குறைவில்லாத உலகமுய்யுமாறு செவ்விதிற் கேட்பாயாக வென்று, அன்றலருந் தாமரைமலரில் இருக்கின்ற பிரமாவானவர் பின் கூறியருளுவார். எ-று. (௧௪)

வேறு.

உலகயோசனைக்களவுகோல்போன்றுநீண்டுளது
வலியுளோர்களாலழிவிலாவான்பதம்பெற்ற
அலகில்பல்கிரிக்கரசெனலாயதுபால்போல்
விலகிவில்லுமிழ்கின்றதுவெள்ளியங்கிரியே.

இ-ள். கயிலையங்கிரியானது உலகத்தினது யோசனைதூரத்திற்கு அளவு கோலைப்போல நீண்டுள்ளது; வலிமை உடையவர்களாலும் அழிதலில்லாத பெரிய நிலைமையை உடையது; அளவிறந்த பலமலைகளுக் கரசென்று சொல்லுதற்கியைந்தது; பாலைப்போல விட்டுவிட்டு ஒளியைக்காலுந் தன்மையது. எ-று. (கரு)

புவனம்யாவும்வந்தடி தனிலிறைஞ்சலாற்புகுந்தோர்
பவமகற்றலாலூழிதோறழிவிலாப்பண்பாற்
றவமிருந்தமானம்புலிபணிதரித்திடலாற்
சிவனெனத்திகழ்கின்றதுவெள்ளியஞ்சிலம்பே.

இ-ள். வெள்ளியங்கிரியானது சகலபுவனங்களும்வந்து அடியில்வணங்கலாலும், அடைந்தோர்களுடைய பாவங்களை நீக்கலாலும், ஊழிக்காலங்கள்தோறும் அழிவில்லாததன்மையாலும், தவத்தாலிருந்த மான் அழகியபுலி சர்ப்பம் ஆகிய இவற்றைத்தரித்தலாலும், சிவபெருமானைப்போல் விளங்குகின்றது. எ-று. இனிச் சிவபெருமானுக்கியையப் பொருள்கொள்ளுங்கால் அடி என்பதைப் பாதமாகவும், அம்புலி என்பதைச் சந்திரனாகவுங் கொள்க. (கசு)

சீர்கொடும்புருநரப்பிசையோசையுந்தேவ
பாரதுந்துபிமுழக்கமுமன்பர்கள்பரிவா
லாரவாரமோடரவெனுஞ்சும்மையுங்கடலிற்
சாருமோதைபோனிறைவதுவெள்ளியஞ்சயிலம்.

இ-ள். வெள்ளியங்கிரியானது சிறப்பைக்கொண்ட தும்புருவினால் வாசிக்கப்படும் யாழினோசையும், பாரமாகிய தேவதுந்துபியினோசையும், அடியார்கள் அன்பினாலே கிளர்ச்சியோடு ஹர ஹரவென்று சொல்லும் ஓசையும், சமுத்திரத்தில் எழும் ஒலிபோல நிறையப்பெறுவது. எ-று. (கஎ)

ஆயயாபெருங்கயிலையிலரதனத்தாலுந்
தூயபொன்னினுஞ்சிற்பநூல்சொன்னவாறிழைத்த
கோயில்வைகியமணியணிப்பீடமேற்கொண்ட
சீயவாசனந்தனிற்சுகாசனமதாய்ச்சிறந்தே.

இ-ள். இவ்வாறாகிய பெரிய கயிலையங்கிரியில் இரத்தினங்களாலும், மாற்றுயர்ந்த பொன்னாலும், சிற்பசாத்திரங் கூறியவாறு சமைக்கப்பட்ட கோயிலிற்பொருந்திய அழகிய இரத்தினதாபிதமாகிய பீடத்தைத் தன் மேற்கொண்ட சிங்காசனத்தில் சுகாசனமாய்ச்சிறப்புற்று, எ-று. சுகாசனம்-நன்றாயிருத்தல். (கஅ)

ஐந்துமாமுகமையிருசெங்கரமுக்க
ணிந்துசேகரங்கறைபுனைகண்டமோரிருதாள்
கந்தமேவியகுழலுமையொருபுறங்கவின
வெந்தையாகியசிவபிரானினிதுவீற்றிருந்தான்.

இ-ள். பெருமைபொருந்திய ஐந்து திருமுகங்களையும், சிவந்த பத்துத் திருக்கரங்களையும், மூன்று திருக்கண்களையும், இளம்பிறையைத்தரித்த திரு

முடியினையும், நஞ்சை அணிந்த திருமிடற்றையும், இரண்டு திருவடிகளையும் உடைய எமது பிதாவாகிய சிவபெருமான், (இயற்கை) மணஞ்செறிந்த கூந்தலையுடைய உமாதேவியார் வாமபாகத்தே விளங்க இனிதாக வீற்றிருந்தருளினார். எ-று. ஓரிருநாள் எந்தையாகிய சிவபிரான் எனக் கூட்டுக. (௧௯)

எண்ணில்சூரியரொருங்குசேர்ந்திளவெயில்பரப்பும்
வண்ணமென்னவும்படிகமாநன்மலையெனவு
நண்ணுமீசனைமுன்னமோர்கற்பத்தினயந்து
வெண்ணிலாநகையுடையவள்வியப்புடனிறைஞ்சா.

இ-ள். வெண்மையாகிய நிலாவைவீசுந் தந்தவரிசைகளையுடைய உமாதேவியார், முன்னொரு கற்பகாலத்திலே, அளவிறந்த சூரியர்கள் ஒருங்கே திரண்டு இளங்கிரணங்களைப்பரப்புந் தன்மைபோலவும், பெரிய நல்ல பளிங்குமலைபோலவும் வீற்றிருக்குஞ் சிவபெருமானை விரும்பி வியப்போடுவணங்கி, எ-று. (௨௦)

ஆதிமத்தியமந்தமுமிலாதவவனிக்
கோதுதேசிகதோற்றுவித்தளித்தொழித்தருளு
நீதமுக்குணங்கடந்தவநிமலவானந்த
போதபூதங்களுயகபோற்றியென்றுரைப்பாள்.

இ-ள். தோற்றநிலையிறுதியென்னு மூன்றுமில்லாதவரே, உலகத்துள்ளோர்களுக்குபதேசிக்கு மாசாரியரே, சிருட்டிப்பித்துத் திதிப்பித்துச் சங்கரித்து அருள்செய்கின்ற நீதியையுடையவரே, (சத்துவமுதலிய) முக்குணாதீதரே, நிருமலரே, நித்தியானந்தரே, இயற்கையறிவுடையவரே, பூதங்களுக்குத்தலைவரே, காத்தருளுகவென்று விண்ணப்பஞ்செய்வார். எ-று. ()

சீவகோடிகண்மலமெனுஞ்செறியிருட்பட்டுத்
தாவுசேர்ந்தனசிருட்டிசெய்தளிப்பதெத்தகைமை
யாவதென்றனுமவடனையிரண்டுகூறாக்கித்
தேவியாகவோர்பங்கினைவாமத்திற்சேர்த்தான்.

இ-ள். ஆன்மகோடிகள் மலமென்னும் நெருங்கிய இருளில் அழுந்தி வருந்தமுற்றன. (ஆதலால்,) சிருட்டித்துத் திதிப்பது எத்தகைமையாகுமென்று விண்ணப்பஞ்செய்தலும், அவ்வுமாதேவியாரை இரண்டுபாகமாக்கி ஒருபாகத்தைத் தேவியாராக இடப்பக்கத்தில்வைத்தருளினார். எ-று. ()

ஓங்குமற்றையோர்பங்கினையொருமுகமிருகை
தாங்குதாளிரண்டாகியமகவெனச்சமைப்ப
வீங்குகாரிருள்விழுங்குவெங்கதிரொருகோடி
யாங்குமேவிநின்றிமைத்தல்போலொளிர்ந்ததையன்றே.

இ-ள். உயர்ந்த மற்றைப்பாகத்தை ஒரு திருமுகமும், இரண்டு திருக் கைகளும், தாங்குகின்ற இரண்டு திருவடிகளும் பொருந்திய குழந்தையாகப் படைத்தருள, (அவ்வடிவம்) நிறைந்த கரிய இருளைப்பருகுகின்ற உட்

டனைகிரணங்களையுடைய கோடிசூரியர்கள் அவ்விடத்திற் பொருந்திநின்று பிரகாசித்தல்போல விளங்கியது. எ-று. (௨௩)

வியந்துநோக்கியேபுதல்வனைத்தழீஇக்கொடுவிமல
னுயர்ந்ததன்மடிமீதில்வைத்துச்சியைமோந்து
நயந்தஞானமாஞ்சத்தியைநன்மனத்திருத்தி
யியைந்தவிச்சையைக்கிரியையைப்படையதாவீந்தே.

இ-ள். நிருமலராகிய சிவபெருமான், புதல்வரையதிசயித்துத் திருவருணோக்கஞ்செய்து தழுவிக்கொண்டு, உயர்ச்சிபொருந்திய தம்முடைய மடித்தலத்தின்மீதுவைத்து, உச்சிமோந்து, சிறந்த ஞானசத்தியை (அப்புதல்வருடைய) நல்ல இருதயத்திற்பதித்து, இயைந்த இச்சாசத்தியையுங் கிரியாசத்தியையும் படைக்கலங்களாகக்கொடுத்து, எ-று. (௨௪)

வேறு.

இலங்கியஞானசத்திதரன்குகன்விசாகனென்று
நலந்திகழ்நாமஞ்சாற்றிநவில்கிரியிடப்பாலாகத்
துலங்கியவிருக்கைசெய்துதுன்னுதியென்னவோதி
வலம்படுதொழில்களைந்தும்புரிகெனவழங்கினானே.

இ-ள். விளங்குகின்ற ஞானசத்திதரன் குகன் விசாகன் என்று நன்மைவிளங்குந் திருநாமங்களைத் திருவாய்மலர்ந்தருளி, (எவராலும் விதந்து) பேசப்படும் கயிலையங்கிரியி னிடப்பக்கத்தில் விளங்கிய கோயிலையுண்டாக்கி, (அவ்விடத்தில்) இருப்பாயாகவென்று அருளிச்செய்து, வெற்றியுண்டாகும் பஞ்சகிருத்தியங்களையும் செய்கவென்று (அதிகாரம்) கொடுத்தருளினார். எ-று. (௨௫)

எழுகடலுலகமெல்லாமொருகணத்தேகிமீளும்
விழுமியதெந்தநாளுமழிவின்றிவிறல்சேர்ந்துள்ள
தொழுகெழின்மயிலொன்றீந்துசயந்தனேமுதலாயுற்ற
பழுதறுகணமாமட்டவித்தையீசரையும்பாரா.

இ-ள். சத்தசமுத்திரங்களாற்சூழப்பட்ட சகல உலகங்களினும் ஒருகணப்பொழுதினுள்ளேசென்று திரும்பும் சிறப்பையுடையதும், எக்காலமு மழிதலின்றி வலிமைபொருந்தி யுள்ளதுமாகிய (கனிந்து) ஒழுகுகின்ற அழகையுடைய ஒருமயிலை (வாகனமாகக்) கொடுத்தருளி, சயந்தன்முதலாகவிருந்த குற்றமற்ற கணங்களாகிய அட்டவித்தியேசுரர்களையும் பார்த்தருளி, எ-று. சுப்பிரமணியப்பெருமானுடைய அட்டவித்தியேசுரர்: சயந்தன், அக்கினிசிகன், கிருத்திகாபுத்திரன், பூதபதி, சேநானி, குகன், கேமசூலன், விசாலாக்ஷன். (௨௬)

இளையவன்றன்னோடேகுமென்றனுமவர்வந்தெய்த
வளையவருடனையன்குரவர்தமடியிற்றாழ்ந்து
புனைமயின்மீதிலேறிப்போந்துதன்னிருக்கைசேர்ந்து
மனவலிமயூரந்தன்னைவாயிலினிருத்தினானே.

இ-ள். இப்புதல்வரோடு செல்லுங்களென்று பணித்தலும், அச்சயந்த னதியர்கள் வந்தடைய, அவர்களுடனே சுப்பிரமணியக்கடவுள் இருமுது குரவர்களுடைய பாதங்களில் நமஸ்கரித்து, பன்னிறந்திய மயில்வாக னத்தின்மீதேறிச்சென்று தம்முடைய கோயிலை அடைந்து, மனவலிமை யுடைய மயில்வாகனத்தை வாயிலில் நிறுத்தியருளினார். எ-று. (உஎ)

கண்டவர்மனமுங்கண்ணுங்கவர்ந்திடவழகுவாய்ந்த
வெண்டிருநீற்றின்மேனிவிசாகனுமகம்புக்காங்கோர்
மண்டபமதனிற்சார்ந்தமடங்கலாசனத்தின்வைகிப்
பண்டையவுயிர்கட்கிம்மைபடைத்தனன்லவருநாளில்.

இ-ள். தரிசித்தவர்களுடைய மனத்தையும் கண்களையும் கவரும்படி அழகுவாய்ந்த வெண்மையாகிய விபூதியைத்தரித்த திருமேனியையுடைய சுப்பிரமணியக்கடவுளும், கோயிலிற்பிரவேசித்து, அங்கேயொரு மண்டபத் திற்பொருந்திய சிங்காசனத்தின்மீது வீற்றிருந்து, பழைய வான்மாக்களைச் சிருட்டித்துக்கொண்டிருக்குங்காலத்தில், எ-று. (உஅ)

வேறு.

பணிலமுமுத்துந்தவழ்தரநிறைந்தபடுதிரைப்பாற்கடலுடுத்த,
தணிவிலாவாயுட்டிருவுழுபவனுடர்சார்வுறுசாகத்தீவினிலே, பிணையி லாவரசுபுரிபவன்காமத்திருஞ்செருக்ககன்றவனென்னோர், றனைபட ப்பொருது வாகைவேய்ந்துடையோன் சூரனென்றொருபெயர் தரித் தோன்.

இ-ள். சங்கங்களும் முத்துக்களுந் தவழும்படி நிறைந்த உண்டாகி ன்ற திரைபொருந்திய பாற்கடலினாற்சூழப்பட்ட குறைவில்லாத (பதினாயிர வருடம்வரைக்குமிருக்கும்) வாழ்நாட்செல்வத்தைப்பொருந்தும் மனிதரிரு க்கின்ற சாகத்தீவில் உவமையில்லாத அரசுரிமையை நடாத்துபவன், காம த்தினது பெரியகளிப்பை நீங்கினவன், பகைவர்கள் துன்படைமாகப்போர் செய்து வாகைமாலையைச்சூடினவன், சூரனென்று ஓர் பெயரைப்பெற்ற வன், எ-று. பாற்கடலுடுத்த சாகத்தீவு எனக் கூட்டுக. (உகூ)

தாரகன்பதுமன்சிங்கனென்றுரைக்குந்தம்பியர்தம்மொடுஞ்செ ங்கோ,லாருநன்குவப்பச்செலுத்திநற்போகமைம்புலன்றெவிட்டவு ண்டதம்பி, னேரினுண்டனவேயுண்டனமல்லாலொன்றொருபயனு மின்றென்னப், பாருறுபோகத்தாசையையருக்கிக்குகன்றன்மேற்ப த்திமைசெய்தான்.

இ-ள். தாரகன் பதுமன் சிங்கன் என்று சொல்லப்படுகின்ற தம்பியர் களோடும் செங்கோலை எவர்களும் நன்றாய்மகிழ நடாத்தி, நல்ல போகங் களை ஐம்புலன்களும் ஆர அநுபவித்தபின்னர், ஆராயின் அநுபவித்தவை களேயே அநுபவித்தனமன்றி வேறொருபிரயோசனமு மின்றென்று பூமி யிற்பொருந்தும் போகங்களில் விருப்பைக்குறைத்து, சுப்பிரமணியப்பெரு மான்மீது அன்புசெய்தான். எ-று. (௩0)

காலமேமலர்ந்தகமலமொத்தலர்ந்தகவின்கசிந்தொழுகுமாமுகமுங்
கோலநீள்விழியுங்கரங்களும்பதமுங்கொண்டதோர்குகனுருவியற்றி
சாலநாளருச்சித்தவனருள்சிறிதுதங்கிநல்லறிவுவந்தெழலுஞ் [ச்
சீலமாமுயர்ந்தபதம்பெறவேண்டிச்சிறந்ததன்றீவினையகன்றான்.

இ-ள். உதயகாலத்திலேமலர்ந்த செந்தாமரைமலர்போல விரிந்த அழகுகசிந்தொழுகுகின்ற பெருமைபொருந்திய திருமுகத்தையும், நீண்ட அழகிய திருக்கண்களையும், திருக்கரங்களையும், திருப்பாதங்களையுங்கொண்ட முருகக்கடவுளுடைய திருவுருவத்தை உண்டாக்கி, நெடுங்காலம் பூசனைசெய்து, அவருடையகிருபை சிறிது தங்குதலினால் நல்லறிவுதலைப்படுதலும், குணம்பொருந்திய உயர்ந்த நிலையைப்பெறவேண்டி, மிகுந்த தனது தீவினையைநீங்கினான். எ-று. (௧௧)

அன்றியின்பெயர்க்கிவருங்குசமுயர்ந்தசான்மலிபிலக்கமுமகன்று
வன்றுயரகற்றுநாவலந்தீவிற்குமரபூமியின்மிசைவந்தே
யென்றெவர்தொழினுங்கேட்டவையுதவுமெம்பிரான்காஞ்சிமாநகரே
நன்றுநற்றவஞ்செய்பவர்க்கெனவுலகோர்நவில்வதுகேட்டுளமகிழ்ந்தான்.

இ-ள். கிரவுஞ்சத்தீவையும், அரிய குசத்தீவையும், உயர்ச்சிபொருந்திய சான்மலித்தீவையும், பிலக்ஷத்தீவையும் நீங்கி, வலிய துன்பத்தைநீக்குகின்ற நாவலந்தீவிற் குமரிகண்டத்தில்வந்து, எக்காலத் தெவர்வணங்கினும் கேட்டவற்றைக்கொடுக்கும் எகாம்பரநாதசுவாமி யெழுந்தருளியிருக்கின்ற காஞ்சிமாநகரமே நல்ல தவங்களைச்செய்பவர்களுக்கு நற்றானமென உயர்ந்தோர் கூறுவதைக்கேட்டு மனமகிழ்ந்தான். எ-று. (௧௨)

சங்கொடுதிகிரித்தடக்கையானகராஞ்சதுர்முகனகரமாம்புணரி
பொங்கியஞான்றுமழிவிலாநகராம்பொன்னவன்முதலகோளனைத்து
மங்குநேர்செலவுக்கஞ்சியேவலமாயகறலாலன்னதற்கொருபேர்
மங்கலிறிசையின்மயக்கமாநகராமற்றதன்பெருமையார்வகுப்பார்.

இ-ள். அந்தக்காஞ்சிநகருக்கு (ஒருபெயர்,) பாஞ்சசன்னியமென்னுஞ் சங்கோடு (சுதரிசனமென்னுஞ்) சக்கரத்தை ஏந்திய விசாலித்த கையையுடைய விட்டுணு (வந்து சிவலிங்கப்பெருமானைப்பூசித்து,பிரமாவிற்கு அருள்செய்தமையால்) விண்டுபுரமாம். (ஒருபெயர்,) பிரமா பூசித்தமையாற் பிரமபுரமாம். (ஒருபெயர்,) சமுத்திரம் பெருக்கெடுக்கு மூழிக்காலத்து மழியாமையாற் பிரளயசித்தாம். ஒருபெயர், வியாழன்முதலிய கிரகங்கள் நாடோறுமங்கே நேராகச்செல்லும் செலவிற்கஞ்சிப் பிரதக்ஷிணமாகச் செல்லுதலால், கெடுதலில்லாத திசைமயக்கபுரமாம். ஆகலின், அதன்பெருமையை யார் அளவிடுவார். எ-று. ஒருபெயர் என்பதை எனையிடத்துங்கூட்டுக. ()

அந்திருநகரினுசரோடைந்திட்டம்புயமுன்னொருநாளி
னித்தலுமலருந்தடத்திடைப்படிந்துநிமலன்வாழ்கோயிலிற்புகுந்து
பத்தியாலுமையாண்மூலவனைத்தழும்புபடக்குழைந்திட்டதோர்மூல
வித்தகனேகாம்பரன்முனமிறைஞ்சிமெய்ம்மயிர்பொடிப்பநின்றேத்தா.

இ-ள். அந்த அழகினையுடைய காஞ்சீபுரத்தில் (சூரனென்பவன்) தன் தம்பியரோடுசென்று, மூன்று தாமரைமலர் ஒருநாளத்தில் நாடோறும் அலர்கின்ற தடாகத்திலே ஸ்நானஞ்செய்து, நிருமலராகிய சிவபெருமானெழுந்தருளியிருக்குங் கோயிலிற்பிரவேசித்து, அன்பினால் காமாட்சியம்மையாருடைய மூலைத்தழும்பும் வளைத்தழும்பும்படக் குழைந்தருளிய ஒப்பற்ற மூலகாரணராகிய ஏகாம்பரநாதசுவாமியினுடைய சந்நிதானத்தில்வணங்கிச் சரீரம் உரோமாஞ்சங்கொள்ள நின்று துதித்து, எ-று. (நச)

முக்கணனருள்பெற்றுயிடையகன்று முனிவர்வாழ்தபோவனநணுகி
பொக்கமிலுளத்திற்குகன்றனையிருத்திப்புனிதநின்வாகனமாக [ப்
மிக்கதோர்வரந்தந்தருளெனநினைந்துவிழைவினாலருந்தவம்புரிந்தா
னிக்கதையிருப்பக்குகனதுதிருமுன்பெய்தியகருமமதிசைப்பாம்.

இ-ள். சிவபெருமானுடைய திருவருளைப்பெற்று அவ்விடத்தினின்று நீங்கி முனிவர்கள்வசிக்கின்ற தவவனத்தையடைந்து, பொய்யில்லாதமனத்திலே சுப்பிரமணியப்பெருமானை இருத்தி, பரிசுத்தரே தேவரீருடைய வாகனமாக (அடியேனுக்கு) மேலாகிய ஒருவரத்தைத் தந்தருளுக என்று சிந்தித்து, விருப்பத்தினால் அரியதவத்தைச்செய்தான். இச்சரித்திரம் இவ்வளவில்நிற்க; முருகக்கடவுளுடைய சந்நிதானத்தில் நடந்தகாரியத்தைச்சொல்வாம். எ-று. (நரு)

மந்தரகிரியாற்பாற்கடல்கலக்கிவருமமுதமரருக்களித்த
செந்திருமணாளனைமுதலமரர்சித்திகள்பெறும்பொருட்டெண்ணிச்
சந்தனங்கமழுந்தண்டலைச்சாரற்கயிலையம்பொருப்பினிற்சார்ந்து
பைந்தொடியுமையாள்கணவனைப்பணிந்துபாங்குறுகுகாலயமடைந்தோம்

இ-ள். மந்தரமலையினாற் பாற்கடலைக்கடைந்து அதினின்றுவந்த அமுதத்தைத் தேவர்களுக்குக்கொடுத்த செம்மையாகிய இலக்குமிக்குநாயகராகிய விட்டுணுவும், என்னைமுதலாகிய தேவர்களும், இட்டசித்திகளைப் பெறும்படி நினைந்து, நறுமணங்கமழுஞ் சந்தனச்சோலைபொருந்திய சாரலையுடைய அழகிய கயிலையங்கிரியிற்சேர்ந்து, பசுமையாகிய வளையலையணிந்த உமாதேவியாருடைய நாயகராகிய சிவபெருமானைவணங்கி, அதன்பக்கத்திலுள்ள சுப்பிரமணியாலயத்தை அடைந்தேம். எ-று. (நசு)

விடம்பொழியெயிற்றுவெவ்வராவெருவவீசுவெஞ்சீற்றமாமயி
ன்முன், னடந்துநம்வரவையுரைத்தியென்றிரப்பநவின்றதுகுகன்முன்
போயன்றோன், றொடர்ந்தபேரண்டாற்றருகெனவருளிச்சொல்லுமு
ன்றூண்டலும்வாயில், கடந்துபோய்க்கருணைக்கொருபெருங்கடலா
ங்கடவுளைமுறையினில்வணங்கா.

இ-ள். (யாம்) நஞ்சைசக்குகின்ற தந்தங்களையுடைய வெவ்விய பாம்புகளஞ்சச் (சிறையை) வீசுகின்ற கொடிய கோபத்தையுடைய நீலமயிலின் முன்னரேசென்று நம்முடையவரவைச் சுப்பிரமணியப்பெருமானுக்கு விண்ணப்பஞ்செய்தருள்கவென்று குறையிரக்க அது சுப்பிரமணியப்

பெருமானுக்கு முன்னேபோய் எங்களுடைய வரவை விண்ணப்பஞ்செய்தது. அவர் (எங்களிடத்திற்)பொருந்திய பேரன்பினாலே இங்கே அழைத்து வரக்கடவையென்று திருவாய்மலர்ந்தருளிச்செய்தற்கு முன்னரே அது வெளியே வந்து எங்களை உள்ளேவிடுதலும், யாங்கள் வாயிலைக்கடந்து சென்று ஒப்பற்ற பெரிய கிருபாசமுத்திரமாகிய அவரை முறைப்படி நமஸ்கரித்து, எ-று. (கஎ)

அருவமோர்நான்காயுருவமோர்நான்காயருவுருவொன்றதாய்நின்ற
பிரமமேமலத்தின்பேரிருள்கிழித்துப்பெரியவீடுயிர்க்கருள்செய்ய
வருமரும்பெரியஞானசூரியன்போல்வந்தருள்வடிவமேயெம்மைப்
பரிவொடுநினதுபார்வைவைத்தருளிப்பாதுகாத்திடுகவென்றிரந்தோம்.

இ-ள். அருவத்திருமேனி நான்காயும், உருவத்திருமேனி நான்காயும், அருவுருவத்திருமேனி ஒன்றாயும் நின்றருளிய பரப்பிரமமே, மலமாகிய பெரிய இருளைக்கெடுத்து மேலாகிய முத்தியை ஆன்மாக்களுக்குக்கொடுத்தருள உதிக்கின்ற அரிய பெரிய ஞானசூரியனைப்போல வருகின்ற (தேசிக) மூர்த்தமே, அடியேங்களை அன்போடு தேவரீருடைய கிருபாநோக்கத்தை வைத்தருளிப் பாதுகாத்தருளுகவென்று குறையிரந்தேம். எ-று. (கஅ)

அன்னதுபுரிதுமென்றனன்விடைபெற்றாயிடையகன்றகன்கடையின்
மன்னியமயிலின்முன்னர்வந்துனதுவான்பதம்பெறுவதற்குன்னித்
துன்னலருதிரங்குடித்திடும்வடிவேற்சூரனுஞ்சாகத்தீவரசன்
பன்னரும்வளஞ்சேர்காஞ்சிமாநகரிற்பத்தியிற்றவம்புரிகின்றான்.

இ-ள். (சுப்பிரமணியப்பெருமான்) அதனைச்செய்வேமென்று திருவாய் மலர்ந்தருளினார். (அப்பொழுது யாமெல்லேமும்) விடைபெற்று, அவ்விடத்தினின்று நீங்கி, அகன்ற வாயிலிற்பொருந்திய மயிலுக்கு முன்னரே வந்து, (மயிற்பெருமானே,) உனது பெருமையாகிய நிலையைப்பெறக்கருதி, பகைவர்களுடைய இரத்தத்தைக்குடிக்குங் கூரிய வேற்படையையுடைய சூரனாகிய சாகத்தீவிற்கு இராசன், சொல்லுதற்கரிய வளங்கள்பொருந்திய பெருமையையுடைய காஞ்சிநகரத்தில் அன்பினாலே தவஞ்செய்கின்றான். எ-று. (க௯)

மயிலினுக்கரசநின்னதுகுணமும்வணக்கமுங்கண்டனமதனாற் [யிற்
பயிலுநின்பதமுமிழக்குமோவென்னப் பகர்ந்தனமென்றுபாம்பணை
றுயில்புரிபவனேயாதியாமியாங்கடுன்னினமெங்கடம்பதியிற்
றயிரின்மத்தெறிந்தாலொத்துநன்னெஞ்சந்தளர்ந்ததுமயிலினுக்கரசே.

இ-ள். மயிலுக்கரசனே, உன்னுடைய நற்குணத்தையும் பணிவையுங்கண்டேம். அதனாலே (நெடுநாட்)பயின்ற நின்னுடையநிலையுந் தவறுமோவென அறிவித்தேமென்று கூறி, அனந்தனாகிய சயனத்தில் அறிதுயில் செய்யும் விட்டுணுமூர்த்திமுதலிய யாமெல்லேமும் எங்களுடைய பதவிகளிற்சேர்ந்தேம். (அதனைக்கேட்ட) மயிலரசு தயிரில் மத்திட்டுக்கடைந்தாற்போல நல்ல மனந்தளர்ந்தது. எ-று. (உ0)

வேறு.

தீங்குசெய்பவர்க்குநன்மைசெய்வதுத்தமமதாகுந்
தீங்குசெய்பவர்க்குத்தானுஞ்செயாமைமத்திமமதாகுந்
தீங்குசெய்பவர்க்குத்தானுஞ்செய்தலேயதமமாகுந்
தீங்குசெய்வோர்க்குமுண்டோநற்கதிசெப்புங்காலே.

இ-ள். (ஒருவன்) தீமையைச்செய்கின்றவர்களுக்குத் (தானும்) நன்மையைச்செய்வது உத்தமகுணமாம். தீமையைச்செய்கின்றவர்களுக்குத் தானும் (அதனைச்) செய்யாதிருத்தல் மத்திமகுணமாம். தீமையைச்செய்பவர்களுக்குத் தானும் (அதனைச்) செய்வதே அதமகுணமாம். சொல்லும் பொழுது தீமையைச்செய்பவர்களுக்கும் நற்கதியுண்டாமோ? எ-று. (கக)

இருந்ததம்பதிக்குத்தீங்கையெவரிழைத்தார்களேனுந்
திருந்தமற்றவர்க்குத்தீங்குசெயாதவர்திறமிலோராம்
வருந்தியிந்திரனுமிக்கபரிமகம்வதைத்தான்மண்மேற்
பரிந்துதம்பதம்போமென்றுபுண்ணியம்பார்த்திலானே.

இ-ள். இருந்த தங்களுடையபதத்திற்குத் தீமையை யாவர்செய்தார்களாயினும், திருந்தமுற அவர்களுக்குத் தீமையைச்செய்யாதவர்கள் வலியில்லாதவர்களாம். இந்திரனுந் தன்னுடையபதவி கெடுமென்று வருந்தி இரங்கிப் புண்ணியத்தைப்பாராதவனாய்ப் பூமியின்மீது அநேக அசுவமேதயாகங்களை அழித்தான். எ-று. (கஉ)

ஆதலாற்றீங்குசெய்யேன்பதத்தழிவணுகவொட்டேன்
தீதிலாவழியாயொன்றுசெய்குவனிங்ஙனென்னா
வேதமில்சாமீபந்தானன்னவரெய்தல்வேண்டுஞ்
சோதியேகுகனேயென்னாத்தியானித்துத்தொழுதனன்றே.

இ-ள். ஆதலினால் (யான் அவர்களுக்குத்) தீமையைச்செய்யேன்; (என்னுடைய) நிலைக்கழிவு பொருந்தவும்விடேன்; தீமையில்லாதவழியாக இப்பொழுதே ஒன்றைச்செய்வேனென்று, குற்றமில்லாத சாமீபத்தை அவர்களடைதல்வேண்டும் சோதிசொரூபரே, இரகசியப்பொருளானவரே என்று (அவரைத்) தியானித்து வணங்கியது. எ-று. ஆதலாற் பதத்தழிவணுகவொட்டேன் எனக் கூட்டு. குகன் என்பதற்கு இரக்ஷிப்பவர் எனினும் பொருந்தும். (கங)

வனப்பினின்மிகுந்தசெவ்வேள்வாகனமதனுன்மஞ்ஞை
நினைக்குமுன்மானத்தோடுங்காஞ்சியிற்கணங்கணேர்ந்து
தினைத்துணையெனினுந்தாழாதிதனிடைச்சேறிரென்னப்
பனைக்கரக்களிறுபோல்வார்தங்களிற்பகருகின்றார்.

இ-ள். மயில் அழகில்மிக்க சுப்பிரமணியக்கடவுளுடைய வாகனமானவின் (இவ்வாறு) எண்ணுதற்கு முன்னரே பூதகணங்கள் தேவவிமானத்தோடு காஞ்சிபுரத்தையடைந்து (அவரைநோக்கித்) தினைப்பொழுதாயி

னுங் காலந்தாழ்க்காது இவ்விமானத்தின்மீதேறிச் செல்லுதிர் என்று கூற, பனைபோலுந் துதிக்கையையுடைய யானையைநிகர்த்த சூரன்முதலியோர் தம்முட்பேசுவார்கள். எ-று. (சச)

ஒன்றுநாநினைப்பத்தெய்வமொன்றினைநினைத்ததெம்பா
னன்றிதுநன்றிதென்றுநவின்றுபின்விமானமேறிச்
சென்றனர்வானமாருயுத்தரதிசைக்கணேகிக்
குன்றினுக்கரசாய்வாழுங்குகன்மலைநண்ணினாரே.

இ-ள். யாமொன்றெண்ண எம்மிடத்துத் தெய்வமொன்றெண்ணியது; இது (மிக) நன்றாஎன்றென்றுகூறி, பின்னர்த் தேவவிமானத்தின்மீதேறி ஆகாயவழிக்கொண்டு சென்று வடதிசைக்கண்ணேபோய், மலைகளுக்குத் தலைமையாக இருக்குங் கந்தமலையை அடைந்தார்கள். எ-று. (சரு)

அவ்வியமகன்றநெஞ்சத்தன்னவர்கணத்தோடொன்றாய்த்
திவ்வியவடிவமாகிச்சேர்ந்தனர்சேர்தல்கேளா
வெவ்வமதகன்றுமஞ்ஞையினிதுவீற்றிருந்ததம்ம
தெவ்வுறவாழும்வாழ்க்கைதேவர்க்குமரிதாமன்றே.

இ-ள். அழுக்காறுநீங்கிய மனத்தினையுடைய அந்தச் சூரனாதியோர், பூதகணங்களோடொன்றாய்ப் பரிசுத்தமாகிய வடிவைப்பொருந்தி இருந்தார்கள். (அவ்வாறு) இருந்தமையை மயில் கேள்வியுற்றுத் துன்பநீங்கி மகிழ்ச்சியுடன் வீற்றிருந்தது. பகைபொருந்தவாழும் வாழ்க்கை தேவர்களுக்கும் அரிதாகும். எ-று. (சசு)

புண்டரமிலங்குநீற்றுப்புண்ணியன்பொலம்பூண்மார்ப
னண்டவாபரணனென்னுமண்ணறனருகுசூர்போய்க்
கண்டுழிமயிலின்பாற்போய்நுந்தவக்கருத்தையெல்லாம்
விண்டனரயன்மாலென்னவிளம்பினனிகழ்ந்தவெல்லாம்.

இ-ள். திரிபுண்டரமாய் விளங்குகின்ற விபூதியையுடைய புண்ணியரும், பொன்னாற்செய்த ஆபரணங்களையணிந்த மார்பினையுடையரும் ஆகிய அண்டவாபரணரென்னும் பூதப்படைத்தலைவருக்கருகே சூரன்போய்க்கண்டபொழுது, (அவர் அவனைநோக்கிப்) பிரமவிட்டுணுக்கள் மயிலிடந்துச் சென்று உங்களுடைய தவத்தின்கருத்தையெல்லாங் கூறினார்களென்று நிகழ்ந்தவற்றையெல்லாஞ் சொன்னார். எ-று. (சஎ)

பொள்ளெனப்புறத்தில்வேர்ப்பர்புன்மையோர்காலம்பார்த்தே
யுள்ளினில்வேர்ப்பரொள்ளியோரெனுமுரையைச்சூழ்ந்து
கள்ளவானவரைபின்னேகாய்ந்திடவலியிலேமென்
றெள்ளருந்திறத்துச்சூரனிருந்தனன்சமயம்பார்த்தே.

இ-ள். இகழ்தற்கரிய வலிமையையுடைய சூரன், புல்லறிவினோர் விரைந்து வெளியே கோபஞ்செய்வர்; அறிவினோர் (தாம் வெல்லுதற்குரிய) காலத்

ஷைதப்பார்த்து மனத்துட் கோபஞ்செய்வர் என்றும் (ஆன்றோர்) வாக்கை
யோசித்து, வஞ்சகத்தையுடைய தேவர்களை இப்பொழுதே கோபித்தற்கு
வலிமையில்லேயென்று (வெல்லுதற்குரிய) சமயம்பார்த்திருந்தான். எ-று.

இவ்வணநிகழுங்காலத்தென்னையேமுதலாந்தேவர்
பவ்வவெண்டிரையிற்றுஞ்சும்பரிதியந்திகிரியோனு
நவ்வியுமழுவுமேந்துநம்பன்வாழ்கைலைநண்ணிச்
செவ்விகொள்விசாகன்வாழுஞ்சினகரஞ்சேர்ந்தோமால்.

இ-ள். இவ்வாறுநிகழுங்காலத்தில் என்னைமுதலாவுள்ள தேவர்களும்,
வெள்ளிய திரைபொருந்திய பாற்கடலில் அறிதுயில்செய்யும் சூரியனைப்
போலும் அழகிய சக்கரப்படையையுடைய விட்டுணுவும், மானையும் மழு
வையுந்தாங்கிய சிவபெருமான்வீற்றிருக்குங் கைலையங்கிரியிற்சென்று, அழ
கையுடைய சுப்பிரமணியக்கடவுள் வீற்றிருக்குங் கோயிலை அடைந்தோம்.
எ-று. (௯௯)

சீர்புனைநெடியவாயிற்சேர்ந்துளமயிலின்முன்போ
யூர்திகளனைத்துமவைத்தேயனையதுத்தரத்தாலுள்போய்
நீரணிசடையோன்பெற்றதிருமலனறிவாய்நின்றோ
னேர்பெறுசரணம்போற்றியிருந்தனமிருக்குமெல்லை.

இ-ள். சிறப்பினையுடைய நெடியவாயிலிற் பொருந்தியிருக்கும் மயிலு
க்குமுன்னரேசென்று, (எம்முடைய) வாகனங்களையெல்லாம்நிறுத்தி அம்
மயிலினுடைய அநுஞ்ஞையினால் உள்ளேசென்று, கங்கையைத்தரித்த
சடையினையுடைய சிவபெருமான் பெற்றருளிய திருமலரும், ஞானமயமா
ய்நின்றவரும் ஆகிய சுப்பிரமணியப்பெருமானது அழகுபொருந்திய திருவடி
யைத் துதித்து இருந்தோம். இருக்குஞ்சமயத்தில், எ-று. (௱)

வேறு.

துன்னலர்தமுடலுதிரங்குடித்துமிழுநெட்டிலைவேற்சூரனென்
பா, னன்னபொழுதயலனடிபணிவதற்காய்வந்தனனாங்கடைந்தயாங்
கண், முன்னமியற்றியதவற்றுக் கெதிர்புரிவானினைந்துமயின் முன்
னேபோந்து, சென்னிநிலமுறவீழ்ந்துபணிந்தெழுந்துவஞ்சமொழி
செப்புகின்றான்.

இ-ள். பகைவர்களுடைய உடலிற்பொருந்திய இரத்தத்தைக்குடித்து
க் கக்குகின்ற நெடிய இலைத்தொழிலமைந்த வேற்படையினையுடைய சூர
னென்பவன், அந்தச்சமயத்தில் திருமலராகிய சுப்பிரமணியப்பெருமானு
டைய திருவடிகளை வணங்குதற்காய் வந்தான். (அவன்,) அங்கே சென்ற
நாங்கள் முன்னரேசெய்த தவற்றிற்கு எதிராகிய (தவற்றைத்) செய்தற்கு
நினைந்து மயிலுக்கு முன்னரேசென்று, சிரம் நிலத்திற்றோய விழுந்து நமஸ்
கரித்துஎழுந்து பொய்வசனங்களைக்கூறுகின்றான். எ-று. (௱௧)

நிறையுலகுக்காதாரவடிவாகுநிராதாரநிமலைற்றாங்கும்
பறவையரசேமயிலின்குலம்விளக்கவந்துதித்தபரிதிபோல்வா
யிறையுமுனக்கிணையின்றெவ்விடத்துமிலைதெரிவாரெவருமிவ்வா
றுறையுமுனதருகிருந்துகருடனெனக்கெதிரிலையென்றுரைத்ததம்மா.

இ-ள்: நிறைந்த உலகங்களுக்கெல்லாம் ஆதாரவடிவமாகுந் (தமக்கு) ஓராதாரமில்லாத நிருமலராகிய சுப்பிரமணியக்கடவுளைச் சுமக்கின்ற பட்சி கட்கிறையே, மயிற்சாதியை விளக்கும்படி வந்துதித்த சூரியனைப்போன்ற பெருமானே, தேவரீருக்கு எந்த இடங்களிலும் இறையளவேனும் ஒப்பி ல்லை; இதனை யாவருமறிவார்கள். இப்படி வீற்றிருக்குந் தேவரீருடைய பக் கத்திலிருந்து எனக் கெதிரில்லையென்று கருடன்சொல்லிற்று. எ-று. (ருஉ)

வெருவுயர்வாகனமுமின்வகையேயிளம்பிறறுன்மேமேலோயம்பொற்
றிருமயிலாய்நின்றனைக்கருடற்கதும்பாரெனவுனையான் சிந்தைசெய்தே
சாதமிதுவெனவுரைத்துத்தம்பிரானடிபணியச்சார்ந்தானாக [ன்
மாதவன்றெய்யமயிற்காசமிகச்சீறிநெட்டுயிர்த்துமலர்க்கண்சேந்தே.

இ-ள். பிரமா ஏறுகின்ற அன்னவாகனமும் இவ்வாறேசொல்லிற்று. மயிற்பெருமானே, மாற்றுயர்ந்தபொன்னாலாய குளிர்ச்சிபொருந்த சலஞ்சிறை ற்கருடக் கதும்பாரென்று தேவரீரை யான் கருதினேன். இது உண்மை யென்றுசொல்லிச் சுப்பிரமணியக்கடவுளுடைய திருவடிகளை நமஸ்கரிக்கச் சென்றதாக, பெரிய தவத்தைச்செய்த மயிலரசு மிகக்கோபித்துப் பெரு மூச்சுவிட்டு நீலமலர்போலுங் கண்கள்சிவந்து, எ-று. (ருக)

எம்பிரானருள்பெறுதற்கெனையிரந்துபோமமரரிவர்வான்கொ
ண்ட, வெம்பறவையெனைச்சற்றுநினையாமைவிளம்பியதுவிழுமிதம்
மா, வம்புயனுமாலுமினிக்காக்கவெனவோடி யன்னத்தோடுங்,
கொம்பருக்கினிடத்தணுகவவையிரண்டுந்திகைத்தெதிர்ந்து செயிர்த்
துநோக்கா.

இ-ள். எம்பெருமானாகிய சுப்பிரமணியக்கடவுளுடைய அனுக்கிரகத் தைப்பெறுதற்கு என்னை யாசித்துச்செல்லுந் தேவர்கள் ஏறும்படி (வாகன மாகக்) கொண்ட வெவ்வியபறவைகள் என்னைச் சற்றேனும் நன்குமதியா மற்பேசியது சிறந்தது! இனி (அவற்றின் யசமானராகிய) பிரமாவும் விட் டுணுவும் (இடையூறுவாராமற்) காக்கவென்று சொல்லி ஓடி, அன்னத் தோடு கருடனிடத்துநெருங்க, அப்பறவைகளிரண்டுந் திகைத்தெதிர்த்துக் கோபித்துப்பார்த்து, எ-று. (ருச)

முன்னடப்பவொருகாற்றன்சிறகாற்றாக்கியிடமுளரிச்சேக்கை [க்
யன்னமும்வெங்கலுழனுஞ்சிறகைக்கொடியின்றாக்கவதிர்ந்துசீறி
கொண்ணுனையலகள்வாயாற்கொத்துதலுவான்பறப்பக்கூடிச்சென்று
வண்ணமயில்போர்புரியவவையிரண்டுந்தமதுமொய்ம்பின்மலைந்தவன்றே.

இ-ள். முன்னேவர, மயில் தன்னுடைய சிறகுகளினாலே அடிக்க, தாமரைமலராகிய படுக்கையையுடைய அன்னமும் கொடிய கருடனும் தங்களுடைய சிறகுகளைக்கொண்டு பின்னர்த்தாக்க, (அம்மயில்) ஆரவாரித்துக் கோபித்து, கொல்லுகின்ற நுதியையுடைய கூரியவாயினாற்கொத்துதலும், (அப்பறவைகளிரண்டும் அஞ்சி) ஆகாயத்திற்பறக்க அழகிய மயிலும் (அவற்றோடு) கூடிச்சென்று, போரைச்செய்ய, அப்பறவைகளிரண்டும் தங்கள் வலிமையாற் போர்செய்தன. எ-று. மேகாரம் எனவும் பாடம். (௫௫)

இன்னவகைபோர்புரியக்கண்டிவானோர்முதலோரிரியல்போனார்
பன்னகமோரெட்டுமட்டபருப்பதமுமெண்கரியும்பணிப்புக்கொண்ட
வன்னபொழுதழிவிறன்மயிலினுக்கவ்விருபறவையாற்றலோயத்
தன்னகல்வாயினிற்கவர்ந்துவிழுங்கிமுதனிலையதனிற்சார்ந்ததன்றே

இ-ள். இவ்வாறு போர்செய்ய (அதனைப்) பார்க்கின்ற தேவர்முதலாயினோர் ஓட்டமெடுத்தார்கள். அட்டநாகங்களும் அட்டபருவதங்களும் அட்டகசங்களும் நடுங்கின. அச்சமயத்தில், கெடுதலில்லாத வலிமையையுடைய மயிலுக்கு அந்த இரண்டுபறவைகளும் வலிமை ஓய்ந்துவிட, (அது) தன்னுடைய அகன்றவாயினாற் பற்றிவிழுங்கிப் முதற்கடைவாயிலேச் சேர்ந்தது. எ-று. (௫௬)

காயாவுங்கருமுகிலுங்கடலுநிகராமென்றுகருதுமேனி
மாயோனுமன்னமிசைவருமயனுமிந்திரனுமற்றுளோருந்
சாயாதபுகழுடையவிசாகனருள்பெற்றுவெளிசார்ந்தேமங்கண்
மாயூரந்தனைக்கண்டேமெம்முடைவாகனங்காணேமறுகினோமால்.

இ-ள். காசைப்பூவும் சூற்கொண்டமுகிலும் கடலும் நிகரென்று சிந்திக்கின்ற (கரிய) திருமேனியையுடைய விட்டுணுவும், அன்னவாகனத்தின் மீதுவருகின்ற யானும், இந்திரனும், ஏனையோர்களும், கெடாத கீர்த்தியையுடைய முருகக்கடவுளது கிருபையைப்பெற்று வெளியில்வந்து அவ்விடத்தில் மயிலைக்கண்டு, எம்முடைய வாகனங்களாகிய அன்னத்தையும் கருடனையும் கண்டிலேமாய் வருந்தினோம். எ-று. (௫௭)

ஞானவிழியாலங்கணடந்ததறிந்தேகுகனைநணுகியையா
தேனொழுகுமலர்த்தாரோயெக்குறையுநினைக்கண்டுதீர்ந்தேமிங்கு
ஞான்றொருகுறையுளதாற்கருடனையுமனத்தினையுமழகார்மஞ்ஞை
தானெடுத்துவிழுங்கியதுதரப்பணித்தியெனவிரந்துசாற்றினேமால்.

இ-ள். யாங்கள், ஞானக்கண்ணினால் அவ்விடத்து நிகழ்ந்தவைகளையறிந்து சுப்பிரமணியப்பெருமானை அடைந்து, சுவாமீ, தேனொழுகுகின்ற மலர்மாலையையுடையவரே, எல்லாக்குறைகளையும் தேவரீரைத் தரிசித்து நீங்கினோம்; (ஆயினும்,) இங்கே நிகழ்ந்த ஓர்குறையுளது: கருடனையும் அன்னத்தையும் அழகுநிறைந்த மயில் எடுத்துவிழுங்கிற்று, (அவைகளை, அது) தரும்படி பணித்தருளுக என்று யாசித்து விண்ணப்பஞ்செய்தேம். எ-று. ()

இ-ள். வெற்றிவிளங்கும் மயிலே, நீ அகங்காரத்தாற் கண்ணோட்டமின்றிக் கடினமனமாய்ப் பயநீங்கிப் பிழைசெய்தனை. அதனைப் பொறுத்தலரிது. அந்தப் பாவநீங்குமாறு கருமபூமியிலே மலையாய்க்கிடந்து (அதனை) நீங்குதியென்று திருவாய்மலர்ந்தருளினர். மேலாக உயர்ந்தபதவியைப்பெற்றவர்கள் இகழத்தகுஞ் செய்கைகளைச்செய்தாற்றாழ்வடைதல் சத்தியமாம். எ-று. (௬௨)

செம்பவளவாய்திறந்துசெப்புமொழிசெவிப்படலுஞ்சிந்தைசமாழ்கிக், கம்பமுடனுடல்வியர்ப்பமொழிகுளறியினையவுரைகழறுமைய, வம்புசெறிமலர்த்தொடையாயுயிர்களுக்கோர்களைகணாய் வந்த மேலோய், தும்பைமலர் புனைசடிலப் பெருமான்றன் மனமுவப்பத் தோன்றுந்தொல்லோய்.

இ-ள். (சுப்பிரமணியப்பெருமான்) சிவந்த பவளம்போலுந் திருவாய்மலர்ந்து சொல்லியருளும் வசனங் காதிற்புகுதலும், (அதனைக்கேட்ட மயில்) மனம்வருந்தி நடுக்கத்தோடு சரீரம்வியர்க்க உரைதடுமாறி இந்தவசனங்களை விண்ணப்பஞ்செய்யும்: சுவாமீ, வாசனைபொருந்திய மலர்மாலையையுடையவரே, ஆன்மாக்களுக்கு ஒரு புகலிடமாய்வந்த மேலவரே, தும்பைமலரையணிந்த சடாமுடியையுடைய சிவபெருமானது திருவுள்ளமகிழத் தோன்றிய பழையவரே, எ-று. (௬௩)

புறமலருக்ககமலர்போலறிவினுக்கோரறிவாகும்பொருளேபத்தித்
திறமதிலனாதலினஞ்ஞானத்தாலடியேன்செய்தகுற்றம்
வறிதெனநோனாதுசபித்தனைபாலியந்தன்னின்மகார்செய்குற்றம்
பெறுமவர்கள்பொறுத்தருளாதகற்றியிடிலியாரவரைப்பேணல்செய் [வார்.

இ-ள். புறவிதழுக்கு அகவிதழ்போல அறிவிற்கோரறிவாகின்ற மெய்ப்பொருளானவரே, பத்திமார்க்கஞ் சிறிதுமில்லேனாதலின், அஞ்ஞானத்தால் அடியேன்செய்தகுற்றஞ் சிறிதாம்; அதனைப் பொறுத்தருளாது சபித்தருளினீர். பாலியதசையிலே பிள்ளைகள் செய்தகுற்றத்தைப் பெற்ற தாய் தந்தையர்கள் பொறுத்தருள்செய்யாது நீக்கிவிடில் யாவர் அவர்களைக்காக்கவல்லார். எ-று. (௬௪)

தொலைவறுபேரின்பமருளுநின்னுடையசாமீபந்துன்னினோர்க்கு
மலைவுவருமோநினதுபதமகன்றோர்கணமேனுமமர்வன்கொல்லோ
பலமணிப்பூணணிமார்பவிக்குற்றம்பொறுத்தியெனப்பதம்வீழ்ந்தேத்தக்
கலபமயில்வாகனத்தின்முகநோக்கியருள்சுரந்துகழறுகின்றான்.

இ-ள். அழிவில்லாத பேரின்பத்தையருளும் தேவரீருடைய சாமீபத்தையடைந்தோர்க்கும் அலைவுவருமா! (நாயினேன்) தேவரீருடைய திருவடிகளைநீங்கி ஓர் கணப்பொழுதாயினும் வாழ்வேனோ! பல இரத்தினங்கள் அழுத்திய ஆபரணங்களை அணிந்த மார்பையுடையவரே, இந்தக்குற்றத்தைப் பொறுத்தருள்கவென்று பாதங்களில் நமஸ்கரித்துத் துதிக்க, (சுப்பிரமணி

யப்பெருமான்) தோகையையுடைய மயில்வாகனத்தின்முகத்தைப் பார்த்தருளிக் கிருபைபாலித்துத் திருவாய்மலர்ந்தருளுகின்றனர். எ-று. (கரு)

சிறப்புடையகருமதலந்தன்னின்மகமேருவினைச்செண்டால்வீசிக், கறுத்ததிறற்பெருவழுதிதிருநாட்டில்வைகியதோர்கடுக்கைக்கானை, மறுத்தவிருமதலுப்பண்வளஞ்சிறக்குந்திருப்புத்தூர்வதிந்ததாங்கே, நறைக்கரியகுழலுமைதன்பாங்கிருப்பச்சிவபெருமானண்ணல்செய்தான்.

இ-ள். சிறப்பைப்பொருந்திய குமரிகண்டத்தில், மகாமேருமலையைச் செண்டால் அடித்துக் கோபித்த வலிமைபொருந்திய பெருமையையுடைய பாண்டியனது அழகியநாட்டிலே, கொன்றைவனமொன் றிருக்கின்றது. குற்றநீங்கிய அதினடுவே வளஞ்சிறந்த திருப்புத்தூர் என்னும் க்ஷேத்திரமிருக்கின்றது. அவ்விடத்திலே, வாசனைபொருந்திய கரிய கூந்தலையுடைய உமாதேவியார் தமது வாமபாகத்திலிருக்கச் சிவபெருமான் வீற்றிருந்தருளினார். எ-று. (கசு)

தேன்றுளிக்குநறுங்கொன்றைவனத்திருக்குமச்சிவனைத்திருமுன்வேண்டி, யான்றதொருதடங்கண்டுகுடைந்தெழுந்துவிதிமுறையாலருச்சித்தங்கண், வான்றவழுமதிமுடிவிடையிவர்ந்துவந்துவரம்வழங்கப்பெற்று, மூன்றுலகுமேக்கறுசீர்முகுந்தனதுபதம்பெற்றாண்முளரிவந்தாள்.

இ-ள். செந்தாமரையாசனியாகிய இலக்குமி, தேனைச்சொரிகின்ற வாசனைபொருந்திய கொன்றைவனத்தில் வீற்றிருக்கும் அந்தச் சிவபெருமானைச் சந்நிதியில் நின்று வேண்டுதல்செய்து, அகன்ற ஒரு தடாகத்தையுண்டாக்கி, (அதில்) ஸ்நானஞ்செய்தெழுந்து, (ஆகம)விதிப்படி பூசித்து, அவ்விடத்தில் ஆகாயத்திற்றவழ்கின்ற சந்திரனைச்சூடிய சிவபெருமான் இடபாரூடராய்வந்து வரங்களைக்கொடுக்கப் பெற்று, திரிலோகங்களும் ஆசையாற்சூழ்ந்துதிக்கின்ற சிறப்பினையுடைய விட்டுணுவினது பதத்தைப்பெற்றாள். எ-று. திருமை எழுவாயாகின், முன் என்பதற்கு முற்காலம் எனப் பொருள்கொண்டு, முளரிவந்தாள் என்பதைச் சுட்டுப்பொருளாக்குக. (கஎ)

ஈதிவள்கண்டதனாற்றிருத்தளியென்றுரைப்பாரந்தத்தீர்த்தந்தன்னைக்
காதோடுங்குவளைவிழியன்னவள்பூசித்ததனாற்கங்கைசூடு
மாதேவர்தமையுமுயர்திருத்தளியாரென்பரந்தவளங்கொடானம்
வேதாவின்பிராயத்துமழிவின்றியிருக்குமுண்மைவிளம்பினேமால்

இ-ள். இலக்குமி உண்டாக்கிய காரணத்தால் அந்தத் தீர்த்தத்தைத் திருத்தளியென்றுகூறுவர். காதளவோடுகின்ற கருங்குவளைமலர்போலுங் கண்களையுடைய அவள் பூசித்தகாரணத்தால், கங்கையைத்தரித்த சிவபெருமானையும் உயர்ந்த திருத்தளீசுரரென்பர். அந்தவளஞ்செறிந்த இடம் பிரமகற்பத்து மழிவில்லாமலிருக்கும்; உண்மையையே சொன்னோம். எ-று. ()

அத்தருமதலத்தினுக்குக்கீழ்சாராயோசனையோரத்தந்தன்னிற்
சித்தர்களுமுனிவர்களும்வாசமுறுமரசவனஞ்சேர்ந்ததாங்கே
பத்தியொடுநன்மலையாயிருத்திசரவணத்துதித்துன்பால்வந்துற்று
முத்திவழங்குதுமென்றான்மூவருக்கும்யாவருக்கும்முதல்வனம்மா.

இ-ள். அந்தத் தருமத்தையுடைய க்ஷேத்திரத்திற்குக் கிழக்குப்பக்கமாகப் பாதியோசனைதூரத்திற் சித்தர்களும் முனிவர்களும் வசிக்கின்ற அரசவனம்பொருந்தியது. அவ்விடத்தே அன்போடு நல்லமலையாய்க்கிடக்குதி; யாம் சரவணப்பொய்கையிற்றோன்றி உன்னிடத்தில்வந்துசேர்ந்து, மோக்ஷத்தைத் தருவேமென்று மும்மூர்த்திகளுக்கும் எவர்களுக்குந் தலைவராகிய சுப்பிரமணியப்பெருமான், திருவாய் மலர்ந்தருளினார். எ-று. (௬௯)

வேறு.

அந்தவுரைகேளாவமலனடிசூழ்ந்திறைஞ்சி
விந்தைசெறிதோளானைநீங்காவிடைகொண்டே
யெந்தையுனையகன்றுயெங்ஙனுய்வனெனச்
சிந்தைமிகவருந்திப்பையப்பையச்சென்றதுவே.

இ-ள். (மயிலானது) அந்தத் திருவாக்கைக்கேட்டு, மலரகிதராகிய சுப்பிரமணியப்பெருமானுடைய பாதங்களைப் பிரதக்ஷிணஞ்செய்து வணங்கி, வீரலக்குமி குடிகொண்டிருக்கின்ற திருப்புயங்களையுடைய அவரை விடைபெற்றுக்கொண்டு நீங்கி, எம்பெருமானே, தேவரீரைப்பிரிந்தும் எவ்வாறு அடியேன் உய்வேனென்று, மனம் மிகவருந்தி மெல்லமெல்லச் சென்றது. எ-று. (௭௦)

ஈசனுடன்யானுமிணையானேனெனக்கையினாற்
பேசுகின்றகற்சாபம்பெற்றேனெனநினைந்து
வாசமுறுவெள்ளிமலைகடந்துசென்றெய்தித்
தேசுபெறுமிமையஞ்சேர்ந்தகன்றுபோயதுவே.

இ-ள். எம்பெருமானால் அருளிச்செய்யப்படுங் கற்சாபத்தைப் பெற்றேன்; (ஆதலினால்,) சிவபெருமானுடன் யானும் ஒப்பாயினேன் என்று சிந்தித்து, (சிவபெருமான்) வீற்றிருக்கின்ற கைலையங்கிரியைக் கடந்துசென்று, ஒளிபொருந்திய இமையமலையையடைந்து, (அதினின்று) நீங்கிச்சென்றது. எ-று. சிவபெருமானுக்கிணையப்பொருள்கொள்ளுங்கால், கற்சாபமென்பதைக் கல்வில்லெனக்கொள்க. (௭௧)

நாதாவெனக்கிதுவோநண்ணியதென்றேவருந்திக்
கேதாரத்தெய்தியதையகன்றுகேடில்லாப்
பாதாளவாகினியாங்கங்கைநதிநீர்படிந்து
கோதாவிரியிற்குடைந்துதென்பாற்புக்கதுவே.

இ-ள். தலைவரே, எனக்கிதுவோ வந்தடைந்ததென்று வருந்தி, திருக்கேதாரத்தை அடைந்து அதனைநீங்கி, கெடுதலில்லாத பாதாளத்தினின்

றும் வந்து கங்கைநீரில் ஸ்நானஞ்செய்து, (பின்னர்க்) கோதாவிரிதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, தென்றிசையை அடைந்தது. எ-று. (எஉ)

நான்பெரியனென்றகங்கொண்டிருவருமுயர்நாரணனும்
வான்பறந்துங்கீழிடந்துங்காணாதுவாட்டமுறக்
கூனமதியஞ்சூடுங்குழகனழலாகிநின்ற
தேன்மாறாஞ்சோலையருணகிரிசென்றதுவே.

இ-ள். நானே பரம்பொருளென்று அகங்காரத்தைப்பொருந்திய நானும், உயர்ச்சிபொருந்திய விட்டுணுவும், (முறையே அன்னவடிவைக்கொண்டு) ஆகாயத்திற் பறந்துசென்றும், (பன்றிவடிவைக்கொண்டு) பூமியைக் கிழித்துச்சென்றும், (முடியையு மடியையுங்) காணாமல் வாட்டத்தைப் பொருந்த, வளைந்த இளம்பிறையையணிந்த சிவபெருமான் அக்கினிமலையாய்நின்ற வண்டுகளொலிக்கின்ற சோலையையுடைய அருணசலத்திற்சென்றது. எ-று. (எ௩)

வம்பலருங்கொன்றைமணங்கமழும்வார்கூந்தற்
கொம்பனையாளுள்ளங்குளிர்ந்திடவானோர்முனிவர்
சம்புசிவசங்கரவென்றேத்தக்களிநடஞ்செ
யம்பலத்திற்புக்கிருபதம்பணிந்துபோற்றியதே.

இ-ள். வாசனைவிரியுங் கொன்றைப்பூவின் மணங்கமழ்கின்ற நீண்ட அளகத்தையுடைய பூங்கொம்புபோலுஞ் சிவகாமியம்மையார் மனங்குளிர, தேவர்களும் முனிவர்களுஞ் சம்புவே சிவனே சங்கரனேயென்று துதிக்க, (சிவபெருமான்) ஒப்பற்ற திருநிருத்தத்தைச்செய்தருளும் பொன்னம்பலத்திற்சென்று, (அவருடைய) உபயபாதங்களை நமஸ்கரித்துத்துதித்தது. எ-று. (எச)

அங்கணகன்றுசிவபெருமானன்பினுறையுந்
தங்குதிருப்பதிகள்பற்பலவுஞ்சார்ந்தேத்திப்
பொங்குபுவிமகட்கோர்பொற்பின்முகமாய்த்திசைக
ளெங்கும்பரவுபாண்டிநாட்டெய்தியதே.

இ-ள். அவ்விடத்தினின்று நீங்கி, சிவபெருமான் அன்போடு வீற்றிருக்கும் பலபல புண்ணியக்ஷேத்திரங்களிலுஞ் சென்று துதித்து, பொலிவாகிய பூமிதேவிக்கு ஒப்பற்ற அழகியமுகமாய் எத்திசையும் புகழும்படி பொருந்தும் பாண்டிநாட்டையடைந்தது. எ-று. (எ௫)

வேறு.

கூடல்பூவணஞ்சுழியல்தென்பரங்குன்றுகொடுங்குன்
றேடகமிராமேச்சரங்கானைநெல்வேலி
தேமொப்பனூர்திருப்புத்தூர்முதலப்பலவா
மீடிலாச்சிவபதிகணாட்டகத்திருக்கும்.

இ-ள். மதுரை, திருப்பூவணம், திருச்சுழியல், அழகிய திருப்பரங்குன்றம், திருக்கொடுங்குன்றம், திருவேடகம், திருவிராமேச்சரம், திருக்கா

னப்பேர், திருநெல்வேலி, (எவரும்) ஆராயுந் திருவாப்பனூர், திருப்புத்தூர்முதலாகிய பற்பலவான உவமையில்லாத சிவஸ்தலங்கள் பாண்டிநாட்டிலிருக்கும். எ-று. கொடுங்குன்றம்-பிரான்மலை. கானப்பேர்-காளையார் கோயில். (எசு)

மருநிறைந்தபன்மலரகில்சந்துமாமணியுந்
திரைவளைக்கையாற்கரைமிசைச்சென்றிடச்சிதறி
வரைவிலாதுறும்வயல்குளம்வளம்படவுதவிப்
பொருநைமாநதிதவழ்ந்துபோயுவரியிற்புகுமால்.

இ-ள். பெரிய பொருநையாறு, வாசனைநிறைந்த பலமலர்களையும் அகிலமரங்களையுஞ் சந்தனமரங்களையும் பெருமைபொருந்திய இரத்தினங்களையும் சங்குபொருந்திய திரைகளாகிய கையினாலே கரையின்மீதுசெல்லச் சிதறி, எல்லையில்லாதிருக்கின்ற வயல்களுங்குளங்களும் வளத்தைப்பொருந்த (நீரைக்) கொடுத்துத் தவழ்ந்துசென்று கடலிற்பாயும். எ-று. (எஎ)

ஓவில்செல்வவேந்துறையுறுமொருவன்பாற்செல்வ
மேவிலன்பினர்க்குதவியெஞ்சியதண்டேல்வேந்தும்
சேவதென்னவேவயல்குளக்கீந்துவிஞ்சியதேற்
றுவிலாக்கடனீர்புகுந்தண்டுறைவைகை.

இ-ள். ஒழியாதசெல்வத்தையுடைய அரசன்மாட்டிருக்கு மொருவனிடத்தே செல்வம்வந்தால், (அவன் அதனைத் தன்னிடத்து) அன்புடையோர்க்குக் கொடுத்து, சேஷமுளதாயின், அவ்வரசனுக்குக் கொடுத்தல்போல, குளிர்ந்த துறைகளையுடைய வைகையாறு, வயல்களுக்குங் குளங்களுக்கும் (நீரைக்) கொடுத்து, சேஷமுளதாயிற் கெடுதலில்லாத கடனீரோடுகலக்கும். எ-று. (எஅ)

மாறிலாப்புனன்மாநதியொழுகலான்மள்ளர்
நாறுசெய்குவதோர்புறநடவுமாங்கதுவே
மீறுநெற்கதிர்கொய்தவைவேறுவைத்தடித்துப்
பேறுகொண்டடன்பின்னருழுவதோர்புறமே.

இ-ள். ஒப்பில்லாத நீரையுடைய பெருமைபொருந்திய நதிகள்பாய்தலால், மள்ளர்கள் நாற்றிடுவதோர்பக்கமாம். (அந்நாற்றை) நடுவதும் அவ்வாறே ஓர்பக்கமாம். வளருகின்ற நெற்கதிர்களை அரிந்து அவற்றை வேறாக வைத்து அடித்துப் பிரயோசனத்தைக்கொண்டு உடனே பின்னுமுழுவதோர்பக்கமாம். எ-று. (எகூ)

மூன்றுபோகமிவ்வகையினுன்முயன்றுறுபலங்கொண்
டேன்றசாமையேமுதலதூயப்பயனெடுத்தே
யான்றபேரன்பினரனுக்குமவனடியார்க்குஞ்
சான்றவேதியர்தமக்குமீந்தெஞ்சியதுண்பார்.

கூட்டங்களை இடறி, பலாப்பழங்களை மிதித்து, ஒப்பில்லாத நீண்ட கரும்புகளை உழக்கி, வீட்டின்கட்செல்லும். எ-று. (௨௪)

ஈசனெங்கணுமிருத்தலாலியாவருமிறைஞ்சி
யாசகன்றிடுசரியையேமுதலியவடைந்து
தேசுபெற்றநான்முத்தியுஞ்சேர்குவரன்றிப்
பாசமங்கைகொளியமன்வாழ்நாட்டகம்படரார்.

இ-ள். சிவபெருமான் (அந்நாட்டின்) எவ்விடத்திலும் எழுந்தருளியிருத்தலால் அனைவரும் (அவரை) வணங்கி, குற்றமில்லாத சரியைமுதலிய நாற்பாதங்களையடைந்து, ஒளியைப்பெற்ற நால்வகைப்பட்ட முத்திகளையும் அடைவார்கள்; அஃதன்றி, பாசத்தை அழகிய கையிற்கொண்ட யமன்வாழும் உலகத்தை அடையார். எ-று. (௨௫)

வேறு.

இன்னனவளத்திறோங்கியிலங்கியபாண்டிநாட்டின்
முன்னவன்மறையுமின்னுங்காணுதற்கரியமூர்த்தி
பொன்னெனமிளிருங்கொன்றைப்புரிசடையுடையபெம்மான்
றன்னுடைவிழைவால்வைகுந்திருப்புத்தூரெல்லைசாரா.

இ-ள். இவைபோன்ற வளங்களாலுயர்ந்து விளங்கிய பாண்டிநாட்டில், (எவர்க்கும்) முன்னவரும் வேதங்களும் இன்னுங் காண்டற்கரிய தலைவரும் ஆகிய பொன்னைப்போலப்பிரகாசிக்குங் கொன்றைப்பூமாலிகையையணிந்த முறுகிய சடையையுடைய சிவபெருமான் சுயேச்சையினால் வீற்றிருக்கின்ற திருப்புத்தூரினெல்லையை அடைந்து, எ-று. பாண்டிநாட்டில் திருப்புத்தூரெனக்கூட்டுக. (௨௬)

சங்குசூலுளைந்துபெற்றமுத்தமுஞ்சாலிமுத்தும்
வெங்கழைவெடித்தமுத்துமீர்ஞ்சுவைவேழமுத்தும்
பைங்கயலுடன்செல்வாய்க்கால்பலகடந்தேகியோங்கு
திங்களையுரிஞ்சிநீண்டபொங்கர்வாய்ச்சென்றதன்றே.

இ-ள். சங்குகள் சூற்றுளைந்தீன்ற முத்தும், நெல்லீன்ற முத்தும், விரும்பப்படும் மூங்கிலீன்ற முத்தும், குளிர்ந்த இனிய சுவையையுடைய கரும்பீன்ற முத்தும், பசிய கயல்மீனுடன் செல்கின்ற பல வாய்க்கால்களைக்கடந்துபோய், மேலாகிய சந்திரனை உரோஞ்சி உயர்ந்த சோலையின்கட்சென்றது. எ-று. (௨௭)

தண்டலையகன்றுசீர்சாறபனியமலர்க்கொம்பன்ன
வொண்டொடிமடவார்கண்ணேயொளிர்தருமுகமேயென்ன
முண்டகங்குவளைபூத்ததிருத்தலிவாவிமூழ்கி
யண்டர்கோன்றனதுமெய்யாமைஞ்செழுத்திணையுமோதி.

இ-ள். சோலையைநீங்கிச் சிறப்புமிக்க பொற்பூங் கொம்பையொத்த ஒள்ளியவளையலையுடைய பெண்களின் கண்ணையும் பிரகாசத்தையுடைய

முகத்தையும்போலச் செந்தாமரைமலரையுங் கருங்குவளைமலரையும் பூத்த இருந்தளியென்னும் வாவியிலே ஸ்நானஞ்செய்து, சிவபிரானது திருமேனியாகிய பஞ்சாக்கரத்தையும் உச்சரித்து, எ-று. (அஅ)

கூவிளந்தும்பைமத்தங்கடுக்கைகங்கைநீரின்
மேவலாற்கொன்றைவாசமெலிந்ததென்னவோர்ந்தே
யாவலினமர்ந்தாரென்னவண்ணல்வாழ்தருவியவாசப்
பூவலர்கடுக்கைக்கானம்புகுந்ததுபஞ்ஞைமாதோ.

இ-ள். சிவபெருமான், (தாமணியுங்) கொன்றைமலரானது வில்வம் தும்பை ஊமத்தம் ஆகிய இவற்றைப் பொருந்துதலாலும், கங்கையின் கணுள்ள நீரிற்பொருந்துதலாலும், வாசனைகுறைந்ததென்று கருதி, (அதற்கு வாசனையேற்ற) விருப்போடு வீற்றிருந்தார் என்று சொல்லும்படி வாழுகின்ற நறுமணம்பொருந்தும் பூவை அலருகின்ற கொன்றையங்கானை மயில் அடைந்தது. எ-று. (அகூ)

ஓட்டறுபசும்பொன்றீசேருலைவிட்டெடுத்தாலன்ன
தோட்டவிழ்தழிக்கானநடுவைத்தோயுந்தோகை
நாட்டமூன்றுடையோன்கோயிலண்ணியேதிருமுன்வீழ்ந்து
தாட்டுணைபணிந்துமேலாமன்பொடிதனைச்சாற்றும்.

இ-ள். ஓட்டைத்த பசும்பொன்னை அக்கினிபொருந்திய உலைமுகத்திலிட்டு எடுத்தாற்போன்ற இதழ்விரிந்த பூவையுடைய கொன்றையங்கானத்தில் நடுவிற்பொருந்திய சந்திரன் சூரியன் அக்கினி ஆகிய மூன்று கண்களையுடைய சிவபிரானது கோயிலை அடைந்து, சந்நிதியில்வீழ்ந்து (அவருடைய) உபயபாதங்களை வணங்கி, பேரன்போடும் இதனைச்சொல்லும். எ-று. தோகையுங்கோயிலைக் கூட்டுக. ஓட்டறல் என்பது எச்சறல் என்பதுபோல ஒருசொல். (கூ0)

படைப்பதற்கயனையாகிப்பல்லுயிரனைத்துங்காக்க
வடக்கருந்திறத்தகூர்வாயாழியஞ்செல்வனாகித்
துடைப்பதற்கரனையாகித்தோன்றிமுத்தொழிலுஞ்செய்யு
மிடத்திருப்புத்தூர்மேவும்விமலனேபோற்றிபோற்றி.

இ-ள். சிருட்டிப்பதற்குப் பிரமாவாகியும், பல உயிர்களனைத்தையுங் காத்தற்கு அடக்கற்கரிய வலிய கூரியநுதியையுடைய சக்கரத்தைத்தாங்கிய விட்டுணுவாகியும், சங்கரித்தற்கு உருத்திரனுமாகியுந்தோன்றி, முத்தொழில்களையுஞ்செய்கின்ற திருப்புத்தூரில்வீற்றிருக்கும் வரம்பிலாற்றலையுடைய மலரகிதனே காத்தருளுக காத்தருளுக. எ-று. (கூக)

ஒருமலர்க்குறிவினுள்ளேயுணர்வதாயுணர்வைமீந்து
பிருமலர்க்கேற்றிமேனியெதிர்ந்திருணீக்கஞ்செய்தும்
பொருவின்மும்மலருக்கன்றோர்போலவந்தினைத்தந்து
மருவுருப்புத்தூர்மேவுமமலனேபோற்றிபோற்றி.

இ-ள். விஞ்ஞானகலருக்கு (அவர்) அறிவினுள்ளே அறிவாய்நின்று தத்துவஞானத்தைக்கொடுத்தும், பிரளயாகலருக்கு இடபவாகனத்தினேறி வந்து தத்துவஞானத்தைக்கொடுத்தும், சகலருக்கு அவரைப்போல (மானுடச்சட்டை சாத்தி) வந்து தத்துவஞானத்தைக்கொடுத்தும், அருள்புரியும் நிகரில்லாத திருப்புத்தூரில்வீற்றிருக்கின்ற மலரகிதரே காத்தருளுக காத்தருளுக. எ-று. பொருவில் திருப்புத்தூர் எனக் கூட்டுக. (௯௨)

நறைகமழ்கமலையெனநல்லுருவொழித்துநாத
னுறைதரவெஃகிவேண்டவுதவியுமுமையாள்வேண்ட
விறைவிமுன்னடனஞ்செய்துமிருந்தவபரமானந்த
நிறைதிருப்புத்தூர்மேவுநிமலனேபோற்றிபோற்றி.

இ-ள். நறுமணங்கமழுஞ் செந்தாமரையாசனியாகிய இலக்குமி, (தன்) நாயகராகிய விட்டுணு, பன்றியினது நல்ல வடிவத்தைத் தவிர்ந்திருக்கும்படி விரும்பி வேண்டுதல்செய்ய, (அவனுக்கு அவ்வரத்தைக்) கொடுத்தும், பார்ப்பதியார் வேண்டுதல்செய்ய, அவருக்குமுன் திருநடனத்தைப்புரிந்துமிருந்தவரே, வரம்பிலின்பமுடையவரே, (பலவளங்கள்) நிறைந்த திருப்புத்தூரில் எழுந்தருளியிருக்கும் மலரகிதரே, காத்தருளுக காத்தருளுக. எ-று. (௯௩)

என்னநின்றேத்துமஞ்ஞைக்கின்னருள்சுரந்துயார்க்கு
முன்னவன்காயவாக்கான்மொழியுமிந்நகரிற்கீழ்பாற்
சொன்னபிப்பலக்கானத்தனிற்றுன்னுதியுவப்பினுன்பாற்
கன்னியந்துயரன்றேன்றியளிக்குவன்கவலேலென்றான்.

இ-ள். என்று நின்றுதுதிக்கின்ற மயிலுக்கு, எவர்க்கும் முதல்வராகிய சிவபிரான் இனிய கிருபைசுரந்து, அசரீரிவாக்கால் (எவரும்) புகழும் இந்நகரத்திற்குக் கிழ்த்திசையில் (உளதென்று) சொல்லப்பட்ட அரசவனத்தில் அடைதி; பேரழகினையுடைய நமது குமாரனானவன் மகிழ்வோடு உன்னிடத்துவந்து இரக்ஷிப்பன் வருந்தற்க என்று திருவாய்மலர்ந்தருளினார். எ-று. (௯௪)

உரையுணர்விறந்துகாணுமொருபரனன்பாலோது
மருமைநன்மொழியைக்கேளாவகமகிழ்ந்தனுக்கைபெற்றவ்
விருள்படப்பொதுளுங்கானத்தெய்தியதிஃதுநிற்கப்
பெரியவச்சுவத்தக்கானின்வளமையைப்பேசலுற்றாம்.

இ-ள். சொல்லும்மனமு மிறந்துதரிசிக்கின்ற ஏகராகிய சிவபெருமான் அன்பினாலே யருளிச்செய்கின்ற அருமையாகிய நல்ல திருவாக்கைக்கேட்டு, மனமகிழ்ந்து விடைபெற்று, அந்த இருளுண்டாகநெருங்கும் அரசவனத்தை (மயில்) அடைந்தது. இதுநிற்க, (இனிப்) பெரிய அரசவனத்தின்பெருமையை யாம் சொல்வோமாயினோம். எ-று. (௯௫)

வேறு.

மருவுறுநால்வேதம்வாயின்விளங்குதலானு
மருமையுறுதவமுனிவரநேகர்தமைப்பெறலானு
முரியமணஞ்செறிநறும்பூவுயிர்த்துவளர்த்திடலானும்
பெருமைபெறுமரசவனமெமைநிகர்க்கும்பெற்றிமைத்தால்.

இ-ள். பொருந்துகின்ற நான்குவேதங்களுந் தன்னிடத்தில் விளங்குதலினாலும், அருமையாகிய தவத்தையுடைய முனிவர் அநேகரை (இருக்கும்படி.) பெறுதலினாலும், உரிமையாகிய மணஞ்செறிந்த நல்லபுட்பங்களைத் தோற்றி வளர்த்தலினாலும், பெருமையைப்பொருந்தும் அரசவனம் நம்மையொக்குந் தன்மையையுடையது. எ-று. பிரமாவிற்கியையப் பொருள்கொள்ளுங்கால், நாலுவேதங்களும் வாயிற்றோன்றுதலினாலும், முனிவரநேகரைப்புதல்வராகப் பெறுதலினாலும், நறிய உந்திக்கமலந்தோற்றுவித்து வளர்த்தலினாலும் எனக்கொள்க. உரிமையாகிய கூட்டமான நல்ல உலகைச்சிருட்டித்து வளர்த்தலால் எனினும்பொருந்தும். (௧௬)

வானுறநீண்டதனானும்வன்கோடுபெறலானுந்
தேனிமிருநறுந்துளவத்தெரியலான்றனைமானு
மீனமிலாக்களகண்டமெய்தியழிவற்றிடலாற்
பான்மதியக்கொழுந்தணியும்பரமனையுநிகராமே.

இ-ள். ஆகாயத்தைப்பொருந்த நீண்டிருப்பதினாலும், வலிய கொம்பைப்பெறுதலினாலும், வண்டுகள்மொய்க்கின்ற நறுமணம்பொருந்தும் துழாய் மாலையினையுடைய விட்டுணுவைப்போலும். குற்றமில்லாத குயிலைப்பொருந்தி யழிவின்றியிருத்தலால், வெண்மையாகிய இளம்பிறையையணியும் சிவபெருமானையும்போலும். எ-று. விட்டுணுவிற்கியையப் பொருள்கொள்ளுங்கால், நெடிய வடிவைப்பொருந்தலானும், வலிய பாஞ்சசன்னியமென்னுஞ் சங்கைப்பெறலானும் எனவும்; சிவபெருமானுக்கியையப் பொருள் கொள்ளுங்கால், கரிய கண்டத்தைப்பொருந்தி அழிவற்றிருத்தலால் எனவும் கொள்க. (௧௭)

இரசதவெற்பினைநிகர்ப்பவெல்லையில்சேணுயர்ந்திடலாற்
பிரசமரைமலரலர்த்தும்பெருமானேமுதற்கோள்கள்
பரியதுகடவாதுசூழ்போவர்பகருங்கா
லரசமரங்கடக்கும்வலியாவருக்குமரிதாமே.

இ-ள். வெள்ளிமலையாகிய கைலையங்கிரியைப்போல அளவற்ற தூரம் உயருதலினால், தேனையுடைய தாமரைமலரை அலர்த்துகின்ற சூரியன் முதலாகிய கிரகங்கள் புகழ்ந்து அவ்வனத்தைக்கடவாமற் சூழ்ந்துபோவர்கள். சொல்லுமிடத்து அரசமரத்தைக்கடக்கும் வலிமை எவர்க்கும் அரிதாம். எ-று. அரசமரங்கடக்கும் வலி யாவருக்குமரிதாம் என்பது, அரசன் போரை வெல்லும்வலிமை எவர்க்குமரிதாமென வேறுமொருபொருடோன்றுகின்றது. (௧௮)

மல்லனெடுந்திரள்கோட்டவண்டளிர்தானிழல்பரப்பு
நல்லவனந்தனின்முனிவர்நாளுமகம்புரிவதனாற்
செல்லியற்றிண்புகைவெளியிற்சேர்ந்துபரந்தனவன்றே
வெல்லையிலாவாகாயத்தெய்தியிடுங்கறுப்பாமே.

இ-ள். பெருமையாகிய நெடிய திரண்ட கோட்டின்களுள்ள வளவிய தளிர்களால் நிழலைப்பரப்புகின்ற நல்ல ஆசவனத்திலே, இருடிகள் நாடோறும் யாகத்தைச்செய்தலினால், செல்லு மியல்பினையுடைய திணிந்தபுகை ஆகாயத்திற்பொருந்திப் பரந்தனவன்றோ வரம்பிகந்த (அந்த) ஆகாயத்திற் பொருந்துங் கறுப்பாகும். எ-று. (௯௯)

அடைந்ததவப்பெருமுனிவராச்சிரமந்தொறுமிருந்து
மடந்தையர்கள்புனல்படிவானிடைதுவளவாறெறுக்கி
நடந்தநடைக்குளநாணிநளினமலர்பிசைச்சேருந்
தடந்தவளத்தரசவனந்தழைத்தவளத்தாசவனம்.

இ-ள். தவத்தைப்பொருந்திய பெருமையாகிய இருடிகளின் ஆச்சிரமங்கள்தோறுமிருந்து (அவர்களுடைய) பெண்கள் நீரின்மூழ்கும்படி இடை நுடங்க வருதலைப்பார்த்துத் (தாங்கள்) நடந்தநடைக்கு மனம் நாணமடைந்து தாமரைமலரிற்புக்கொளுங்கும் வெண்மையையுடைய அரசவன்னங்கள் மிகுத்த தடாகங்களின் வளத்தையுடைத்து (அந்த) ஆசவனம். எ-று. வளத்தது-வளத்து என விகாரமாயிற்று. (௧௦௦)

இத்தகையபெருவளத்தினாசவனத்திடைநுழைந்து
மொய்த்தமலர்ப்புனற்றடத்தின்மூழ்கிவிளையாடிப்பின்
சித்தர்முனிவரர்கடமைத்தெரிசித்தங்கவர்மொழியாற்
புத்தியுடன்பாடாணம்போல்கையுநன்கெனவுணர்ந்தே.

இ-ள். இத்தகைமையையுடைய பெரிய வளஞ்செறிந்த ஆசவனத்தின்கண் (மயில்) நுழைந்து, நெருங்கிய பூவையுடைய நீர்பொருந்திய தடாகத்தில் முழுகி விளையாடி, பின்னர் (ஆண்டுள்ள) சித்தர் முனிவர்களைத் தரிசித்து, அவர் வாக்கால் கல்லுப்போல்கையும் நன்றென்று புத்தியினுலறிந்து, எ-று. அவர்வாக்காலறிந்தெனக்கூட்டுக. (௧௦௧)

எத்திசையுந்தனியுலவியெய்திவனநணந்தலைவா
யத்தனிணையலரடியைநினையாமனினைந்தங்க
ணுத்தரத்தின்றிசைநோக்கியோங்கலெனவுருப்புனைந்து
சத்துமாத்திரமாகச்சார்ந்ததுநன்மயின்மாதோ.

இ-ள். எத்திக்கினுந் தனியேயுலாவி, ஆசவனத்தின் நடுவிற்போய், சிவபெருமானுடைய உபய பாதாரவிந்தங்களைப் (பின்) இளைப்பறநினைந்து, அவ்விடத்தில் உத்தரதிசையைப்பார்த்து மலையைப்போலவடிவெடுத்து, உண்மைமயமாய் நல்ல மயில் இருந்தது. எ-று. (௧௦௨)

பகுப்புடைய பூமியில்வந்து அதனுடைய சாபத்தைநீக்கி, அம்மலையிலெ ழுந்தருளியிருந்தமையைச் சொல்லியருளுகவென்று (நாரதமுனிவர்) கூற, வள்ளிமணாளராகிய சுப்பிரமணியப்பெருமானைத் தியானித்து, சரசுவதிம ணாளராகிய பிரமா இவற்றைச்சொல்வார். எ-று. (௧)

துங்கமிகுபசுந்தோகைதன்சரிதமீதிப்பாற்சூரர்தம்மை
யங்கழைத்துச்சிறிதுமுனிந்தம்பவளவாயதனாலறைவாரீவி
ரிங்கெமதுமயிற்கிடையூறியற்றினீரிப்பிழையாலிங்ஙனீங்கி [றுன்.
வெங்கொலைசெய்தறுகணுடையசுரர்களாய்ப்பிறந்துநிலமேவுமென்

இ-ள். உயர்ச்சிமிக்க பசியமயிலின் சரித்திரமிது. இதன்பின் (முருக க்கடவுள்) வீரராகிய சூரனாதியரை அவ்விடத்திலழைத்துச் சற்றேகோபி த்து, அழகிய பவளம்போலும் திருவாயினால் அருளிச்செய்வார்: நீங்கள் இங்கே நமது மயில்வாகனத்திற்கு இடையூறுசெய்தீர்கள்; இத்தவற்றினால் இவ்விடத்தைநீங்கிக் கொடியகொலையைப்புரியும் தறுகண்மையையுடைய அசுரர்களாய் அவதரித்துப் பூமியில் இருங்கள் என்றார். எ-று. (௨)

ஆயவுரைசெவிப்புகலுமுடல்பனிப்பநெட்டுயிர்த்துள்ளச்சத்தோடுந்
தாயனையாய்சிவகுமரவெழில்பொருந்திப்பாற்கடல்சூழ்சாகத்தீவின்
மேயினநற்றிருவினொடுநின்னழிவில்பதமதனைவிரும்பியந்தத்
தூயபெருந்திருவிழந்துதண்டலைசூழ்வயற்காஞ்சிதுன்னினோமால்.

இ-ள். அத்திருவாக்குக் காதிற்புகுதலும் சரீரநடுங்கப் பெருமூச்சுவிட்டு மனப்பயத்தோடும் மாதாவையொத்தவரே, சிவகுமாரரே, அழகைப்பொ ருந்தி, பாற்கடல்சூழ்ந்த சாகத்தீவிலே நல்ல செல்வத்தோடும் இருந்தோம்; (பின்) தேவரீருடைய அழிவற்றபதத்தைவிரும்பி, அந்தப் பரிசுத்தமாகிய பெரிய செல்வத்தை இழந்து, சோலைசூழ்ந்த வயலையுடைய காஞ்சிநகரில்வந் தோம். எ-று. உனதுபதமென்றது வாகனமாதல். (௩)

யாவரெவைவேண்டினர்வேண்டியபடியேயருள்காஞ்சியீசனுள்ள
மேவுறவைத்துனதுவாகனமாகும்படியங்ஙன்விழைந்துநோற்றே
மாவடியிலுறைபவர்முனரியதவம்புரியுமெமைமதியாதுற்ற [ரோ.
தேவர்மனத்தழுக்காற்றான் மயிலின்முனமெமதுசெய்கை செப்பினு

இ-ள். எவர் எவற்றைவேண்டினரோ (அவர்க்கு அவற்றை) வேண் டியபடியேகொடுத்தருளும் ஏகாம்பரநாதசுவாமியை மனத்திற்பொருந்தத் தியானித்துத் தேவரீருடைய வாகனமாகும்படி அவ்விடத்தில் விரும்பித் தவஞ்செய்தோம். (அங்ஙனம்) ஏகாம்பரநாதசுவாமியின் முன்னரே (இரு ந்து) அரியதவத்தைச்செய்யும் எம்மைச் (சிறிதும்) மதியாமல்வந்த தேவர் கள் மனத்தின்கணுள்ள பொறாமையினால் மயிலினுக்கு முன்னரே (செ ன்று) நமது செய்கையைச்சொன்னார்கள். எ-று. (௪)

இயமானனுரைகடக்கிலென்வருமோவென்றுமனத்தெண்ணி
நான்கு, வயவோரும்மன்மதனிவ்வுலகழிக்கப்பெண்ணுருவாய்வந்த
தொத்த, குயிலார்மென்மொழிமாதுமுனிக்குறும்புதறிக்குமொருகு
டாரம்போல்வா, ளயில்போலுநெடுங்கண்ணாண்மயில்போலுமஞ்சா
யலார்ந்தனீராள்.

இ-ள். (சூரன்முதலிய) நான்குவீரரும், யசமானனுடைய வாக்கை மீறினால் என்னசம்பவிக்குமோ என்று மனத்திலெண்ணி, மன்மதன் இவ்வுலகத்தை அழிக்கப் பெண்வடிவமாய்வந்தமையை நிகர்த்த குயில்போன்ற மிருதுவான சொல்லையுடைய பெண்ணும், முனிவராகிய காட்டைத் தறிக்கும் ஒரு கோடரிபோல் வாளும், வேல்போலும் நெடியகண்ணையுடையாளும், மயில்போலும் அழகிய சாயல்பொருந்திய குணத்தையுடையாளும் ஆகிய, எ-று. (அ)

மாயையெனுமகலல்குன்மடவரலைக்காசிபன்றான்மகிழ்ந்துபுல்லச்
சேயெனவங்கவள்வயிற்றிற்சென்றுதித்தரியதவஞ்செய்துமுற்றி
யாயிரத்தெட்டண்டமுநூற்றெட்டுகவாழ்நாளுமென்றுமழியாமெய்யுந்
தூயபெருந்தவவலிமைச்சுக்கிரன்றன்சூழ்ச்சியினாற்றுன்னினரே.

இ-ள். மாயை என்னும் அகன்ற நிதம்பத்தையுடைய பெண்ணைக் காசிபமுனிவான் உவந்துதழுவ, குழந்தைகளாக அவளுடைய வயிற்றிற்போய் அவதரித்து, சுத்தமாகிய பெரிய தவவலிமையையுடைய சுக்கிரனது உபாயத்தினால் அரியதவஞ்செய்துமுடித்து, ஆயிரத்தெட்டண்டத்தையும், நூற்றெட்டுக வாழ்நாளையும், என்றும் அழியாதசரீரத்தையும், பெற்றார்கள். எ-று.

இந்திரனேமுதலினர்தமுலகடைந்துவிசயஞ்செய்தேடார்வா
சப், பைந்தருவினறுந்துணர்த்தாரிமையவரையேவெடுக்கப்பணித்து
ப்பேழ்வாய், நந்துதிகழ்செங்கமலமலர்க்கரத்தோன்றனையடக்கிநல
த்தையோட்டி, வெந்திறலிற்கொடுங்கோன்மைபுரிந்துலகம்வருந்தி
யுறமேவினரே.

இ-ள். இந்திராதிதேவர்களுடைய உலகை அடைந்து (அவர்களை) வெற்றிகொண்டு, இதழ்செறிந்த வாசத்தையுடைய பசிய ஐந்தருவினது நறிய கொத்துக்களில் அலராநின்ற பூமாலையை அணிந்த தேவரை யீன்சுமக்கும்படி கட்டளைசெய்து, பெரிய வாயினையுடைய (பாஞ்சசன்னியமென்னுஞ்) சங்குவிளங்குஞ் செந்தாமரைமலர்போலுங் கையினையுடைய விட்டுணுவைக் கீழ்ப்படுத்தி, நீதியைநீக்கி, வெவ்விய வலியினாற் கொடுங்கோல்செலுத்தி (அதனால்) உலகம்வருந்த இருந்தார்கள். எ-று. (௧௦)

வேறு.

தாவாத்திறல்சேரனையவராற்றருக்கற்றழியும்யாமெல்லா
மாவாவிதுவுமழகுகொலோவளியேமசுரான்மெலிந்தோந்
தேவேதக்கன்மகந்தனினீசெப்புஞ்சாபப்பிணியுற்றேம்
காவாய்காவாயெனநந்திகழலிற்பணிந்துமொழிந்தனமால்.

இ-ள். கெடாத வலிமையுடைய அந்தச் சூரனியாற் களிப்பின்றி (மனம்) அழியும் நாமெல்லாம், ஆ ஆ இதுவும் (அருளையுடைய) தேவரீருக் கழகா! எளியோம் அசுரரால் மெலிவடைந்தோம்; தெய்வமே, தக்கனு டையயாகத்தில் தேவரீர்கூறிய சாபகோவையப்பொருந்தினேம்; (அடியே மைக்) காத்தருளுக காத்தருளுக என்று திருநந்திதேவருடைய பாதங்களில் வணங்கி விண்ணப்பஞ்செய்தோம். எ-று. (கக)

நந்திபிரானிரங்கிமுன்போய்க்கவின்றுமீண்டாங்கெமையுய்ப்ப
விந்துவளையுஞ்சடைக்கற்றையிறைமுன்னெமதுகுறையிரப்பச்
சிந்தைதவருத்தந்தீர்த்துமெனத்திருவாய்மலர்ந்தானதுகேளா [னமால்
வுய்ந்தோமுய்ந்தோமெனவிடைகொண் டுயர்மேருவின்கணுறைந்த

இ-ள். திருநந்திதேவர் இரங்கி, சிவபெருமானுக்கு முன்போய் (எங்கு றையைக்) கூறித் திரும்பிவந்து எம்மை யுள்ளேபுகுத்த, (யாம்) சந்திரன் பொருந்திய சடாமுடியையுடைய சிவபெருமானது திருமுன் நங்குறை யைக்கூறியிரக்க, (அவர், நமது) மனக்கவலையைத் தீர்ப்போமென்று அருளிச்செய்தார், அதனைக்கேட்டு, (இனி) உய்ந்தோம் உய்ந்தோம் என்று விடைபெற்று உயர்ந்த மேருகிரியிலிருந்தேம். எ-று. (கஉ)

தக்கன்மகவாமுருவொழித்திட்டிமவான்மகளாந்தலைவிதனை
முக்கண்முதல்வன்மணந்தருளிமுகமோராறாய்க்குகற்றாங்கி
மிக்கநுதலிற்பொறியாறாய்வீழ்த்தியுலவையிடத்துதவப்
புக்கவனலுக்கதுகொடுப்பவனலுங்கங்கைபுகுத்தியதால்.

இ-ள். தக்கனுடைய மகளாகிய வடிவத்தைநீக்கி மலையரசகுமாரியா கிய உமாதேவியாரைச் சிவபெருமான் விவாகஞ்செய்து, ஆறுமுகங்களைப் பொருந்திக் குமாரசுவாமியைத்தாங்கி, மேலான நெற்றிக்கண்களினின்றும் ஆறுபொறிகளாய் வீழச்செய்து, வாயுவினிடத்திற்கொடுக்க, அந்தவாயு (தனக்கு முன்) வந்த அக்கினிக்குக்கொடுக்க, அந்த அக்கினியுங் கங்கை யிற்செலுத்தியது. எ-று. (கங)

கங்கைகொடுபோய்ச்சரவணத்திற்கடிதாய்த்திடவுமகவாறாய்த்
தங்கிவிளையாட்டயரவணுமையாள்கணவனுடன்சார்ந்தே
யங்கைகொடுசேர்த்தெடுத்தணைப்பமுகமோராறாயிரண்டு
செங்கைவிழிகண்மூவாறாயுருவமொன்றாய்த்திகழ்ந்தனனே.

இ-ள். கங்கைகொண்டுபோய்ச் சரவணப்பொய்கையில் விரைவாக விடுதலும், ஆறுகுழந்தைகளாய்ப்பொருந்தி விளையாடலைச்செய்ய, அவ்விடத் திற் பார்ப்பதியார், நாயகராகிய சிவபெருமானோடு வந்து, அழகிய கையாற் சேர்த்து எடுத்து அணைக்க, (குமாரசுவாமி) முகம் ஆறாய், சிவந்த கை பன் னிரண்டாய், கண் பதினெட்டாய், (விளங்கும்) ஒரு திருவுருவமாகத்தோ ன்றினார். எ-று. (கச)

சேயைமுலைப்பாலமுதருத்திச்சிவன்கைக்கொடுப்பப்பல்லுயிர்க்குந்
தாயையனையானன்பினொடும்வாங்கித்தனதுமார்பணைத்துத்
தூயதிருவுச்சியைமோந்துதுள்ளிக்களித்தவ்விருவரொடு
மேயெனவளைவதனிற்கைலைக்கேகிமகிழ்வினினிதிருந்தான்.

இ-ள். (பார்ப்பதியார்) குழந்தையை முலைப்பாலமுதமூட்டிச் சிவ பெருமானுடைய திருக்கரத்திற்கொடுக்க, பல உயிர்களுக்குந் தாயையொ த்த அவர் (அக்குமாரரை) அன்பினுடன்வாங்கி, தமது திருமார்பிலணை த்து, சுத்தமான அழகிய உச்சியைமோந்து, துள்ளிக் களிப்படைந்து பார்ப் பதியார் பாலகர் ஆகிய அவ்விருவரோடும் விரைவில் திருக்கைலாசமலைக் குப்போய் மகிழ்ச்சியோடு சுகமாகவிருந்தார். எ-று. (௯)

கடக்குஞ்சரத்தினுரிபுனைந்ததலைவன்முனமம்பிகைவிரைந்து
நடக்கும்பொழுதினூபுரத்தினவமாமணிகளுதிர்ந்திலங்கிக்
கிடக்குமவையிற்சத்திகளொன்பதின்மர்பிறந்தார்கிளர்முலைகள்
வடக்குன்றனையவவரையரன்விரும்பக்கருப்பம்வாய்த்தனரால்.

இ-ள். பெரிய யானையினது தோலை அணிந்த சிவபெருமானுக்கு முன் னாகப் பார்ப்பதியார் விரைந்து செல்லும்பொழுதில் (அவருடைய) சிலம்பி னின்றும் உதிர்ந்து விளங்கிக்கிடக்கும் நவரத்தினங்களில் நவசத்திகள் தோ ன்றினார்கள். கிளருகின்ற முலைகள் (முத்து) வடத்தையணிந்த மலைபோ ன்ற அவரைச் சிவபெருமான் விரும்பி (நோக்க, அவர்கள்) கருப்பங்கொண் டார்கள். எ-று. (௧௦)

அன்றேயுயிர்த்தார்வாகுமுதலிலக்கத்தொன்பானடல்வீர
ரொன்னார்புகழுமவ்வனுசருடனேயாடியமர்ந்திடுநாட்
டுன்றவியாங்கள்பரமனடிதொழுதுசூரலறமெலிந்தோ
மென்றுரைப்பமகனையழைத்திறையோனிதனையியம்புவான்.

இ-ள். அவர்கள், வீரவாகுமுதலான இலக்கத்தொன்பது வலியவீர ரைப்பெற்றார்கள். பகைவர்புகழும் அந்தத் தம்பியருடன் (குமாரசுவாமி) திருவிளையாடல்செய்து வீற்றிருக்குநாளில், நாங்கள்போய்ச் சிவபெருமா னுடைய பாதங்களைவணங்கி, சூரனால் மிக மெலிந்தோமென்று விண்ணப் பஞ்செய்ய, அவர் புதல்வனை அழைத்து இதனை அருளிச்செய்வார். எ-று. ()

சூராதியரைக்கொன்றிமையோர்துயரந்தொலைத்துவருகவெனா
வாரார்முலையாள்கணவனுரைவழங்கிப்பதினொருருத்திரரைச்
சீரார்படையாயளித்தருளித்திறல்சேர்வெல்லொன்றமைத்துதவித்
தாரார்புயத்தோன்வாகுவெனுந்தனயன்முதலோரையுமுதவா.

இ-ள். சூராதியோரைவதைத்துத், தேவர்களுடைய துயரத்தைத்தீர் த்து வருகவென்று, கச்சுப்பொருந்திய முலையினையுடைய பார்ப்பதிமணவாள ராகிய சிவபெருமான் அருளிச்செய்து, பதினொருருத்திரரைச் சிறப்பாக்க

படைகளாகக் கொடுத்தருளி, வலிய வேலொன்றையுமுண்டாக்கிக்கொடுத்து, மாலைபொருந்திய புயத்தையுடைய வீரவாகு என்னும் புதல்வன் முதலோரையும் (அப்புதல்வர்க்குப் படைத்துணையாகக்) கொடுத்து, எ-று.

இனிதோள்வலத்தண்டவாபரணன்முதலாந்திரள்வெள்ளக்
கணிதமிரண்டாயிரம்பூதந்தேரொன்றுதவிக்கருணையுட
னணையாமகனேபோய்வருதியென்னக்குரவரடிவீழ்ந்து
பணியாவெழுந்துவிடைகொண்டுபரிதிமணித்தேர்மேற்கொண்டான்

இ-ள். இனிய புயவலியையுடைய அண்டவாபரணர் முதலான இரண்டு ஆயிரம்வெள்ளம் என்னுந் தொகையையுடைய பூதங்களையுந் தேரொன்றையும் கொடுத்து, கிருபையுடன் அணைத்து, மகனே, போய்வருக என்று பணிக்க, (அவர்) பிதாமாதாவாகிய இருவருடைய பாதங்களில் விழுந்து வணங்கி எழுந்து விடைபெற்று, சூரியனையொத்த ரத்தினங்களழுத்திய தேர்மீது ஏறினார். எ-று. (ககூ)

வேறு.

சங்குபேரிகைசல்லிகைகுடமுழாவியம்பப்
பொங்குபூழிவான்போர்த்திடப்போந்துதாரகனைத்
தூங்கலன்றிலங்கிரியுடன்றுணித்துவானவரோ
டெங்குறையகன்செந்திப்பதியில்வந்திறுத்தான்.

இ-ள். சங்கம் பேரிகை சல்லிகை குடமுழா ஆகிய வாத்தியங்கள் ஒலிக்க, நெருங்கின்ற தூளி ஆகாயத்தை மூட, போய்த் தாரகனை உயர்ச்சி பொருந்திய கிரவுஞ்சமலையுடன்பிளந்து, தேவர்களோடு குமாரசுவாமி திருச் செந்திப்பதியில் வந்துசேர்ந்து, எ-று. (உ0)

வீரவாகெனும்விடலையைத்தூதுவிடுத்துச்
சூரனெஞ்சுறப்புத்திகள்பற்பலசொல்லி
பாரமார்பினனைக்கொளாதிகழ்ந்தமையறிந்து
வீரவெம்படைக்கடலுடன்மகேந்திரஞ்சென்றான்.

இ-ள். வீரவாகு என்னும் வீரனைத் தூதாக அனுப்பி, சூரனுடைய மனத்திற்பொருந்தப் புத்திகள் பற்பலவற்றைக்கூறுவித்து, பதக்கமணிந்த மார்பினையுடைய அவன் மனத்தில் (அவற்றைக்) கொள்ளாது தள்ளினமையை அறிந்து, வீரத்தையுடைய வெவ்விய சேனைக்கடலோடு மகேந்திர நகரை அடைந்து, எ-று. (உக)

பானுகோபனுந்தனயனைப்பாய்புலிவெருவுங்
கானுலாந்தொடைச்சிங்கமாமுகன்றனைக்காதித்
தானைகாவலர்தங்களைத்தடிந்துநாளாறிற்
கனல்வார்சிலைச்சூரனைவேலினாற்கொன்றான்.

இ-ள். பானுகோபனாகிய புத்திரனையும் பாய்கின்றபுலியும் அஞ்சும் வாசனைபொருந்திய மாலையினையுடைய சிங்கமுகனாகிய தம்பியையுங்கொ

ன்று, சேனாபதிகளைவதைத்து, ஆறுநாளில் வளைந்த நீண்டவில்லையுடைய சூரனை வேற்படையினாற்கொன்றார். எ-று. பானுகோபனைக்கொன்று என்பது, இயற்றினான்றொழில் ஏவினான்மேலேற்றிக் கூறப்பட்டது. (உஉ)

சயிலவெம்புயப்படைஞர்கடம்பிமார்வெள்ள
மயுதகோடியிரிலக்கமுந்தனயர்கள்யாரு
மியையுஞ்செல்வமுமிழந்தனன்சூரனேலிங்ஙன்
மயலினாற்றிருச்செருக்குளோர்மடமையார்மதிப்பார்.

இ-ள். மலைபோன்ற வெவ்விய புயங்களையுடைய சேனைத்தலைவர்களையும், தம்பியர்களையும், பதினாயிரகோடியே இரண்டிலக்கம்வெள்ளஞ் சேனைகளையும், புதல்வர்களனைவரையும், இயைந்த செல்வத்தையும் சூரனிழந்தானாயின், இவ்வுலகத்தில் மயக்கத்தினாற் செல்வச்செருக்கினையுடையாரது அறியாமையை யாவர்மதிப்பர். எ-று. (உங)

இம்மைநற்றவமூறுவந்திழுக்கினுங்கூடு
மம்மையென்பதுசாதமேயாகவெஞ்சூர
னும்மைமுற்றுநற்றவப்பயன்கூட்டுறவுமையாள்
செம்மறன்முனஞ்சேவலுமயிலுமாய்ச்சேர்ந்தான்.

இ-ள். இப்பிறப்பிற்செய்த நல்லதவம் இடையூறுவந்து தவறினும், வருபிறப்பில்வந்து கூடுமென்பது உண்மையாக, கொடிய சூரபத்மன், கழிந்த பிறப்பிற்செய்த நல்லதவப்பயன் கூட்டிவைக்க, பார்ப்பதியாருடைய குமாரராகிய குமாரசுவாமியின் திருமுன் கோழிச்சேவலும் மயிலுமாய்வந்தான். எ-று. (உச)

ஆலுமஞ்ஞையினேறியேகோழியாணதனை
யேலுந்தேர்மிசைநிறுவியேசெந்திவந்திறுத்து
வாலிதாம்பரங்குன்றினில்யானையின்வதுவைக்
கோலங்காட்டியேயமரர்தம்பதவியிற்குறுகா.

இ-ள். நடிக்கின்ற (அம்) மயிலில் ஏறி, கோழிச்சேவலை இயையுந் தேரின்மீது (கொடியாக) நிறுத்தி, திருச்செந்திப்பதியை வந்தடைந்து, பரிசுத்தமாகிய திருப்பரங்குன்றில் தெய்வநாயகியம்மையாரை மணஞ்செய்த திருக்கோலத்தைத் தரிசிப்பித்து, பின் தேவருலகிற்சென்று, எ-று. ஆலு மஞ்ஞை அகவும்மயில் எனினும் பொருந்தும். (உரு)

கோடிமுப்பத்துமூன்றெனும்விண்ணவர்குழும
நீடுமாமுடிமிலைச்சியேவலாரியைநிறுவிப்
பீடுகொண்டதோர்கைலையிற்பெட்புடனணுகித்
தேடுமென்புடைக்குரவர்தந்திருமுனஞ்சேர்ந்தான்.

இ-ள். முப்பத்துமூன்றுகோடி என்னும் எண்ணையுடைய தேவர்கள் நெருங்க இந்திரனை உயர்ந்த பெருமையாகிய முடியைச்சூட்டி நிறுத்தி, பெ

ருமையைக்கொண்ட கைலாசமலையில் விருப்புடன்போய், ஆராயும் அன்னையுடைய பிதாவும் மாதாவுமாகிய இருவருடைய திருமுன்னே சென்று, எ-று. (௨௬)

அரியகாதலோடடியினில்வீழ்ந்திறைஞ்சுமுனணுகிக்
கரையில்காதலாலென்றியாங்காண்பமென்றிருந்த
குரவரன்புடன்றழீஇக்கொண்டுகுமரவேள்வருக
வருகவென்றுதம்மடிமிசையிருத்தினார்மன்னோ.

இ-ள். அரியவிருப்புடன் பாதங்களில்விழுந்து நமஸ்கரிக்குமுன், அளவில்லாத விருப்பினால் என்றைக்கு நாம் காண்போம் என்றிருந்த பிதாவு மாதாவுமாகிய சிவபெருமானும் உமாதேவியாரும் சமீபித்து, அன்புடனே அணைத்து, குமாரனை, வருக வருக என்று தங்கள் மடிமீது இருத்தினார்கள். எ-று. (௨௭)

தூய்யவேணியானறிகிலான்போலநீகூறாம்
வெய்யனைத்தடிந்தெய்தினையோவெனவிளம்ப
ஐயநின்னருட்கருணையாலட்டனனென்றுப்
பையவாயிதழ்விள்ளலும்பரிவுடன்வியந்தார்.

இ-ள். பரிசுத்தமாகிய சடையினையுடைய சிவபெருமான், அறியாதவரைப்போல (மகனே,) நீ கூறுகின்ற கொடியவனைவதைத்து வந்தனையோ என்று அருளிச்செய்ய, பிதாவே, தேவரீருடைய அருளாகிய கிருபையினால் வதைத்தேனென்று மெல்லவாகக்கூறுதலும், (இருமுதுகுரவரும்) அன்புடன்வியந்தார்கள். எ-று. (௨௮)

கந்தவெற்பினிலேகுறுங்கருத்துவந்திருப்ப
வந்தவெற்பில்வந்திருந்தனனனல்வளிபுனல்பா
ரிந்துசூரியன்வானியமானனென்றுரைக்கு
நந்தலில்லதோரெண்வகைச்சோதியாநாதன்.

இ-ள். அக்கினி, வாயு, நீர், பூமி, சந்திரன், சூரியன், ஆகாயம், ஆன்மா என்று சொல்லுகின்ற கெடுதலில்லாத அட்டமூர்த்தமாகிய குமாரசுவாமி, கந்தமலையிற் செல்லவேண்டும் என்னும் எண்ணம்வந்திருக்க அந்த மலையிற்போய் வீற்றிருந்தருளினார். எ-று. (௨௯)

வேறு.

கந்தவரையதனிற்சின்னாட்கழித்ததன்பின்
வந்துதமியாய்ச்செருத்தணியில்வைகினான்
சந்தணியுமென்முலையாள்வள்ளியம்மைதன்சரிதஞ்
சிந்தைமிகவிரும்பச்சென்றவணீசெப்பினையால்.

இ-ள். கந்தமலையிற் சிலநாளைக்கழித்தபின், தனியேவந்து செருத்தணி மலையில்வீற்றிருந்தார். (அக்காலத்தில்) சந்தனத்தை அணிந்த மிருதுவான முலைகளையுடைய வள்ளிநாயகியாரது சரித்திரத்தைத் திருவுள்ளம் மிக விரும்பும்வண்ணம் (முனிவனே,) அவ்விடத்தில் நீபோய்ச்சொன்னாய். எ-று. ()

நாதனெனும்வள்ளிமலைநாமவேனம்பிசெய்த
மாதவத்தான்மானின்வயிற்றுதித்துவந்துள்ள
காதலியையோவியர்க்குந்தீட்டவொண்ணாக்கட்டழகின்
றுதலரும்பூங்குழலைக்காண்டுமெனத்தானெழுந்தான்.

இ-ள். வள்ளிமலைக்கு அதிபனென்னும் அச்சத்தைத்தருகின்ற வேலையுடைய நம்பியென்பவன்செய்த பெருமையாகிய தவத்தால் மானின்வயிற்றிலேதோன்றி வளர்ந்த மலையாட்டியை, சித்திரகாரருக்கும் எழுதமுடியாத பேரழகைப்பொருந்திய மகரந்தம்விரிந்த பூவைமுடித்த கூந்தலையுடையவளை, காண்போம் என்று எழுந்தார். எ-று. வருதல்-வளர்தல். (௧௧)

வண்டாரும்பூங்குழலைவள்ளிமலைபோய்ப்புகுந்து
கண்டானவள்வடிவக்கட்டழகையள்ளியள்ளி
யுண்டான்விழியாலுளங்குளிர்ந்தான்பித்தரின்வாய்
விண்டானிரந்தான்முனிந்தாள்விளங்கிழையே.

இ-ள். வண்டுகள் (தேனை) உண்ணும் பூவைமுடித்த கூந்தலையுடைய வள்ளிநாயகியாரை வள்ளிமலையிற்போய்ப் பார்த்து, அவருடைய வடிவத்திலுள்ள பேரழகை அள்ளியள்ளிக் கண்ணால் உண்டு மனங்குளிர்ந்து, பித்தரைப்போலப் பிதற்றி யாசித்தார். (அதுகண்டு,) விளங்கும் ஆபரணத்தையுடைய வள்ளிநாயகியார் கோபித்தார். எ-று. (௧௨)

வள்ளியம்மைசெந்தாமரையடியில்வீழ்ந்திறைஞ்ச
வுள்ளங்கவலாவொதுங்குதலுந்தன்னையினாற்
றெள்ளமுதமன்னாளைச்சேர்ந்துகொடுபோகுதலுங்
கள்ளனிவனென்றெயினர்பின்றொடர்ந்துகண்டனரே.

இ-ள். (அப்பொழுது) வள்ளிநாயகியாருடைய செந்தாமரைமலரையொக்கும் பாதங்களில் விழுந்துவணங்க, (அவர்) மனம்வருந்தி ஒதுங்கவும், தமது தமையனாராகிய விநாயகக்கடவுளால் தெளிந்த அமிர்துபோன்ற அவரைப்புணர்ந்து (பின்) கொண்டுபோதலும், வேடர்கள் திருடன் இவன் என்று பின்றொடர்ந்துபோய்க் கண்டார்கள். எ-று. (௧௩)

சாயாவிறலுழுவைச்சங்கமதைக்கொன்றுழக்கு
மாயாமடங்கலினைமான்கூட்டங்கொட்புறல்போற்
சேயானைச்சுற்றியமர்செய்திடலுஞ்சேவல்கொடி
பாயாதவேங்கைத்தார்ப்பற்றலரைக்கொன்றனனே.

இ-ள். கெடாத வலியையுடைய புலிக்கூட்டத்தைக் கொன்று உழக்குகின்ற தொலாத சிங்கத்தை மான்கூட்டஞ் சூழ்தல்போல, (வேடர்கள்) குமாரசுவாமியைச்சூழ்ந்து போர்செய்தலும், (தமது கொடியாகிய) சேவலினால் வேங்கைப்பூமாலையினையுடைய பகைவர்களாகிய அவர்களைவதைத்தார். எ-று. (௧௪)

மங்கையவள்வருந்தவாட்டலைவவரை
யங்கொழுப்பவவர்வந்தடியிறைஞ்சி
நங்கைதனைத்தருதுமென்னவள்ளிநாயகியைப்
பொங்குமழல்சான்றுகமங்கலநாண்பூட்டினன்.

இ-ள். வள்ளிநாயகி (அதுகண்டு) வருந்த, தளரேல் என்று அந்தவேடரை அப்பொழுது எழுப்ப, அவர்கள்வந்து பாதத்தில்வணங்கிக் குமாரியை விவாகஞ்செய்து தருவோம் என்றுசொல்ல, அவளைச் சுவாலிக்கும் அக்கினிசாட்சியாகத் திருமங்கலியதாரணஞ்செய்தார். எ-று. (௩௫)

வேறு.

அன்னமென்னடையாள்வள்ளியம்மையோடாங்குநீங்கிப்
பொன்னணிமதில்சூழ்கோயிற்செருத்தணிபுகுந்துவைகிக்
கன்னலிற்கனிந்தமென்சொற்கடவுளர்பெருமான்பாவை
மன்னியகந்தக்குன்றில்வந்துவீற்றிருந்தான்மாதோ.

இ-ள். அன்னம்போன்ற மென்மையாகிய நடையினையுடைய வள்ளிநாயகியோடு அந்த இடத்தைநீங்கி, பொன்னால் அலங்கரிக்கப்பட்ட மதில்சூழ்ந்த கோயிலையுடைய செருத்தணியிற்போய் வீற்றிருந்து, (பின்) கர்க்கண்டிலும் இனிய மிருதுவான சொல்லையுடைய இந்திரகுமாரியாகிய தெய்வநாயகியம்மையார் இருந்த கந்தமலையில்வந்து வீற்றிருந்தருளினார். எ-று. (௩௬)

இந்திரன்குமரியோர்பாலெயினர்தம்பாவையோர்பாற்
சந்ததமிருப்பவானோர்முனிவர்சங்கஞ்சூழப்
பந்தமகலுந்தொண்டர்பரிவொடுகுகவென்றேத்தக்
கந்தனங்கிருந்தமாட்சிகழறுதற்கெளிதன்றம்மா.

இ-ள். தெய்வநாயகியார் ஒருமருங்கும் வள்ளிநாயகியார் ஒருமருங்குமாக எப்பொழுதும் இருக்க, தேவர்கூட்டமும் முனிவர்கூட்டமுஞ் சூழ, பற்றற்ற அன்பர்கள் அன்புடன் குகனே என்று துதிக்க, குமாரசுவாமி அங்கே வீற்றிருந்த மாட்சிமைசொல்லுதற்கரிது. எ-று. (௩௭)

செருவிடைவிளிந்தோன்றேசிங்கமுங்களிறுமாக
வுருவுகொண்டாங்குவைகுமிளைஞரையுணர்வாற்கண்டு
மருவியவிருப்பினோடுமயிலுமாமலர்மென்சூட்டுப்
பொருவில்வாரணமுமங்கட்பொருந்திநன்றிருந்தமாதோ.

இ-ள். மயிலும், பெருமைபொருந்திய (செங்காந்தட்) பூப்போலும் மெல்லிய சூட்டையுடைய நிகரில்லாதகோழியும், போரில் இறந்தபொழுதே சிங்கமும் யானையுமாக வடிவங்கொண்டு அங்கிருக்குந் தம்பியரை அறிவால் அறிந்து பொருந்திய விருப்புடன் அவ்விடத்திற்சேர்ந்து சுகமாயிருந்தன. எ-று. மலர் என்பதற்கு முருக்கலர் எனினும் பொருந்தும். (௩௮)

சிலபொழுதகலவெய்யதிரிபுரஞ்சிரித்துச்சிந்து
மலைமகள்கொழுநன்செய்தமாதவப்பயன்போல்வந்தோன்
றலைமைசான்மயிலின்சாபந்தணித்திடவுளத்தினெண்ணி
யிலகுறவெழுந்துமஞ்ஞையிம்மெனவேறினானே.

இ-ள். சிலநாள்கழிய, கொடிய முப்புரத்தைச்சிரித்து அழித்த பார்ப்பதிமணாளராகிய சிவபெருமான் இயற்றிய பெருந்தவப்பயன்போல் அவதரித்த குமாரசுவாமியானவர், தலைமைமிக்க மயிலினுடைய சாபத்தைநீக்கத் திருவுள்ளத்திற்கருதி, பிரகாசம்பொருந்த எழுந்து (சூரனாகிய) மயிலில் விரைந்து ஏறினார். எ-று. (௩௯)

முரசுகொக்கரைதடாரிமுதலனமுழங்கவெஞ்சூட்
டரவணைத்துயிலுமெந்தையாதியாமமரர்வாழ்த்தப்
புரிசடைமுனிவர்வேதம்புகன்றுசூழ்போதத்தொண்டர்
சரவணபவவென்றோதியன்புடன்பின்புசார.

இ-ள். முரசம் கொக்கரை தடாரிமுதலான வாத்தியங்கள் ஒலிக்க, வெம்மையாகிய சுடிகையினையுடைய சர்ப்பசயனத்தில் அறிதுயில்செய்யும் விட்டுணுமுதலான தேவர்கள்வாழ்த்த, முறுக்குப்பொருந்திய சடையினையுடைய இருடிகள் வேதங்களைச்சொல்லிச் சூழ்ந்துவர, அன்பர்கள் சரவணபவ என்று கூறிப் பத்தியுடன் பின்வர, எ-று. (௪௰)

மதுகைவாள்சூலம்வைவேல்வச்சிரமழுவேயாதிப்
பிதிரொளிப்படைகள்வாய்ந்தபெருவலிச்சிறுகட்பேழ்வா
யதிர்கழனோன்றாட்பூதமநேகமுன்செல்லவாகு
முதலவரொன்பான்பேருமுன்புபின்பருகுபோத.

இ-ள். வலியினையுடைய வாள், சூலம், கூரிய வேல், குலிசம், மழு முதலான சிதறுகின்ற ஒளிபொருந்திய ஆயுதங்களையும் சிறந்த பெரியவலியினையும், சிறிய கண்ணினையும், பெரிய வாயையும், ஆரவாரிக்கும் வீரக்கழல் பொருந்திய வலியகாலினையும் உடைய பூதங்கள் அநேகம் முன்னே போக, வீரவாகுமுதலான ஒன்பது வீரரும் முன்னும்பின்னும் இருமருங்கும்போக, எ-று. (௪௧)

சித்தர்பல்லாண்டுகூறச்செறிந்துகின்னரர்கள்பாட
முத்தவெண்குடையும்பச்சைமுழுமணிக்குடையும்போர்ப்பச்
சுத்தவெண்டீம்பாலாழித்தொடர்திரையதனைமானத்
தத்தொளிதவழும்பொற்காற்சாமரைமருங்குவீச.

இ-ள். சித்தர்கள் பல்லாண்டுசொல்ல, கின்னரர்கள் நெருங்கிப்பாட, முத்தாலாகிய வெள்ளைக்குடையும் முழுத்த மரகதத்தாலாகிய பச்சைக்குடையும் பரக்க, சுத்தமாகிய வெண்மைபொருந்திய இனிய பாற்கடலிற்றொடருந் திரையைப்போல அசைகின்ற ஒளிபரக்கும் பொற்காம்பையுடைய சாமரங்கள் பக்கத்தினிரட்ட, எ-று. (௪௨)

மாதவரெனினுங்காணின்மனந்தடுமாறவோங்குந்
தாதுசூழ்முளரிபோலுந்தனத்தராடவர்கணெஞ்சம்
போதுமென்றிசையநீண்டபுடையகலல்குனல்லா
ரேதமிலரம்பைமாதரெழினடம்புரிந்துசெல்ல.

இ-ள். முனிவராயினும் கண்டால் மனந் தடுமாறும்படி உயரும் மகரந்தஞ்செறிந்த தாமரைமொட்டுப்போலும் முலையிணையுடையரும், ஆடவருடைய மனம் போதுமென்று உடன்பட,நீண்டு பக்கம் அகன்ற நிதம்பத்தையுடையரும் ஆகிய, விசேடித்த குணங்களையுடைய குற்றமற்ற ரம்பாஸ்திரீகள் அழகிய நாட்டியத்தை இயற்றிப்போக, எ-று. (௪௩)

அனந்தசூரியர்களொன்றாயவிரொளிபரப்பியென்ன
நினைந்திடற்கரியசோதிநிறைதிருவுருவங்காட்டக்
கனங்குழைமணியார்பக்கமிரண்டினுங்கவினின்வைகப்
புனைந்திடும்புழுகுசாந்தப்புதுமணமெங்கும்விம்ம.

இ-ள். அளவிறந்த சூரியர்கள் ஒன்றாகிப் பிரகாசிக்கின்ற ஒளியைப் பரப்பினாற்போல நினைத்தற்கரிய பிரபையை (இலக்கணம்) நிறைந்த திருவுருவங்காட்ட, கனவிய குழையினை அணிந்த சத்திகளாகிய வள்ளிநாயகியாரும் தெய்வநாயகியாரும் இருமருங்கும் அழகுடன் இருக்க, அணிந்த புழுகு சந்தனமாகியவற்றின் புதியமணம் எங்கும்மிக, எ-று. (௪௪)

சென்றனன்ககனமாறாய்ச்செழுஞ்சுவைத்தீந்தேன்பில்கு
மன்றலங்கடப்பமாலைதுயல்வரமார்பிற்பூண்டா
னென்றனைப்பிறவியென்னுங்குழியினின்றெடுத்தாட்கொண்ட
வன்றிறற்குருதிவைவேல்வளரொளிமுருகன்மாதோ.

இ-ள். ஆகாயவழியாகச்சென்றார்: செழுமையாகிய இனிய சுவையினையுடைய தேன்சொரியும் மணம்செறிந்த கடப்பமலர்மாலையை,அசையும்படி திருமார்பில் அணிந்தவரும், அடியேனைப் பிறவியென்னுங் குழியினின்றும் எடுத்து அடிமைகொண்ட மிகுந்த வலிபொருந்திய இரத்தந்தோய்ந்த கூரிய வேற்படையை ஏந்தினவரும் ஆகிய வளருகின்ற ஒளியையுடைய குமாரசுவாமி. எ-று. (௪௫)

தூயசித்ததனைமூடுந்தொல்லையாவரணம்போங்காற்
றூயினல்லறிவுவந்துகலைப்படுமாறுபோல
சேயமாமஞ்ஞைசாபநீங்கிடுங்காலமெய்தச்
சேயுயர்மயூரவெற்பிற்றோன்றினன்றிறல்கொள்வேலோன்.

இ-ள். பரிசுத்தம்பொருந்திய அறிவைமறைக்கும் பழைய ஆவரணசத்தி நீங்குங்கால், சிவசத்தியினுடைய நல்ல அறிவுவந்து சேருமாறுபோல, அன்னையுடைய மயிலின்சாபம் நீங்குங்காலம்வர, வலியைக்கொண்ட வேற்படையினையுடைய குமாரசுவாமியானவர், மிக உயர்ந்த மயூரகிரியிற்றோன்றினார். எ-று. ஆவரணம் - திரோதானசத்தி. இதனை வேதாந்தநூலார்,

...த்துவர்க்குஞ் சிவன்முத்தனுக்குமல்லாமற்றைச் சீவருக்கெல்லாம் சரீரத்தி னாகா அசித்துசைதன்னியங்களை ஒன்றற்கொன்று பேதந்தெரியவொட்டாமல் மறைப்பது என்பர். (௯௬)

நோக்கினை நெடியமூக்கினுதியிடைக்கிடத்தியுள்ளம்
போக்கறத்தவஞ்செய்கின்றபுண்ணியர்தமக்குங்கிட்டாப்
பாக்கியமடையப்பெற்றபருப்பதமிரண்டுமெய்யாய்
மாக்கவின்மஞ்ஞையொன்றுவரையொன்றுமாயிற்றன்றே.

இ-ள். பார்வையை நெடிய நாசிநுனியில்வைத்து, மனம் (பிறவிஷயங்களிற்) செலவு நீங்கத் தவஞ்செய்கின்ற புண்ணியருக்கும் எட்டாத பாக்கியத்தைப்பெற்ற மலை, இரண்டுவடிவாய் ஒன்று பேரழகினையுடைய மயிலும் ஒன்று மலையும் ஆயிற்று. எ-று. போக்கு அற என்பதற்குக் குற்றமற வினினும் பொருந்தும். (௯௭)

காரினையகன்றசோமன்கடுப்பவெஞ்சாபநீங்கிப்
பூரணமதியங்கண்டவுவரிபோலுடலம்பூரித்
தாரணமுடிவின்மேயவமலனதடிக்கீழ்வீழ்ந்து
வாரமீதூரநின்றுமகிழ்வுறவாழ்த்துமன்றே.

இ-ள். (அம்மயில்) மேகபடலத்தைநீங்கின சந்திரனைப்போலக் கொடியசாபம் நீங்கி, பூரணசந்திரோதயங்கண்ட கடல்போல உடம்புபூரித்து, வேத சிரசிற்பொருந்திய குமாரசுவாமியினுடைய பாதங்களில் வணங்கி அன்பு மேற்படநின்று மகிழ்ச்சி மிகத்துதிக்கும். எ-று. (௯௮)

முண்டகம்புலரிக்காலைமலர்ந்தனமுகங்களாறுந்
தண்டளிர்க்கரமுங்கண்ணுமௌலியுமலர்மென்றோளு
மொண்டொடிமடமானேருக்கிளிருவருமொழிந்துதோன்றத்
தொண்டருக்கெளியாயெய்துஞ்சோதிநின்சரணம்போற்றி.

இ-ள். தாமரை விடியற்காலத்தில் மலர்ந்தாற்போலும் ஆறு திருமுகங்களும், குளிர்ந்த தளிர்போன்ற திருக்கரங்களும், திருக்கண்களும், திருமுடிகளும், பரந்த மிருதுவான திருப்புயங்களும் உடையராய், ஒண்மையான வளையலையணிந்த மடமையாகிய மான்போன்ற (மருண்ட) நோக்கத்தையுடைய இருசத்திகளையுந் தவிர்ந்து பிரசன்னமாக, (மயில்,) அடியருக்கு எளிமையாய்த்தோன்றுஞ் சோதியே, தேவரீருடைய திருவடிகள் (அடியேனுக்) ரக்ஷிக்கப்படக்கடவன. எ-று. (௯௯)

ஒன்றொருநாளுந்துன்பமுறுதமான்முதலோர்தம்மை
வன்றுயராழ்வத்துய்க்கும்வலிகெழுசூரன்றன்னை
வென்றவரலக்கண்டேற்கும்வேலவாபோற்றியன்பர்
துன்றியபவங்கடீர்க்கத்தோன்றியமுருகாபோற்றி.

இ-ள். ஒருநாளாயினும் ஒரு துன்பத்தைப்பொருந்தாத விட்டுணுமுதலாயினோரை மிக்க துயர்க்கடலில்விடுக்கும் வலிமைபொருந்திய சூரனை

வெற்றிகொண்டு, அத்தேவர்களுடைய வருத்தத்தைத் தீர்க்கும் வேற்படை யினையுடையவரே காத்தருளுக. அடியாருடைய நெருங்கிய பிறவியைக் கெடுக்கும்படி திருவவதாரஞ்செய்த என்றும் இளையவரே காத்தருளுக. எ-று. நாளொன்றும் ஒருதுன்பம் உறு எனக்கூட்டுக. (௫0)

உலகதுதோன்றுமுன்னும்பின்னுமற்றொழியும்போது
மிலகுறநிறைந்துவைகுமெம்பிரான்போற்றியன்பர்க்
கலைவில்பேரின்பநீவானிம்மலையடைந்தாய்போற்றி
மலைமகடவத்தாலெய்துமைந்தனேபோற்றிபோற்றி.

இ-ள். உலகந்தோன்றுமுன்னும் (அதற்குப்) பின்னும் (அவ்வுலகம்) அழியும்போதும் பிரகாசம்பொருந்த நிறைந்திருக்கும் எமது தலைவரே காத் தருளுக. அடியார்க்கு அலைவற்றபேரின்பத்தைக்கொடுக்கும்படி இம்மலையை அடைந்தவரே காத்தருளுக. பார்வதியாருடையதவத்தால் அவதரித்த குமா ரரே காத்தருளுக காத்தருளுக. எ-று. (௫௧)

இத்திறம்பழிச்சுமஞ்ஞைக்கின்னருள்சுரந்துசெய்ய
கைத்தலமதனான்மேனிதைவந்துகருணைநாட்டம்
வைத்துநன்றிருத்தியென்னமருங்கினிலிருத்தல்செய்தா
னத்தனதருளையுன்னியமரர்கள்வழுத்தினாரே.

இ-ள். இவ்வாறு தோத்திரஞ்செய்யும் மயிலினுக்கு இனிய கிருபை பாலித்து, சிவந்த திருக்கரத்தால் (அதனுடைய) உடம்பைத்தடவி, கிருபா நோக்கஞ்செய்து, நன்றாக இருப்பாய் என்று பக்கத்தில் இருத்தினார். (அப் பொழுது) சகத்பிதாவாகிய குமாரசுவாமியினது திருவருளைக்கருதித் தேவர் கள் துதித்தார்கள். எ-று. (௫௨)

இன்னநற்கதைகேட்டோரெழுதினோரியம்புமேலோர்
முன்னருமசுவமேதமுதலனமுடித்தபேறுந்
தொன்னிலமறையோர்க்கீந்ததுகளறுபயனுங்கங்கை
பன்னியகடலிற்சேருஞ்சங்கமம்படிந்தபேறும்.

இ-ள். இந்த நல்ல சரித்திரத்தைக் கேட்டவர் எழுதினவர் படிக்கும் மேன்மையினையுடையோர், நினைத்தற்கரிய அசுவமேதயாக முதலியவற் றைச்செய்து முடித்தபேற்றையும், பழைய பூமியைப் பிராமணருக்குத் தானஞ்செய்த குற்றமற்றபேற்றையும், கங்கை சொல்லப்பட்ட கடலிற் சமூகப்படுஞ் சங்கமத்தின் முழுகியபேற்றையும், எ-று. (௫௩)

திகழ்ப்பிரயாகைநன்னீரவிமுத்தந்திளைத்தபேறு
மிகழுறுமீராற்கோடிமகவிரையீந்தபேறு
மகிழ்வுறப்பெற்றுப்பார்மேற்றிருவுடன்வாழ்வரீது
புகழ்தருதுதியின்வாதமன்றுண்மைபுகன்றிட்டேமால்.

இ-ள். விளங்குகின்ற பிரயாகை காசி ஆகிய இவற்றில் உள்ள தீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்தபேற்றையும், இகழ்ச்சிநீங்கிய கோடிகன்னியாதானஞ்செய்தபேற்றையும் மகிழ்ச்சிமிகப்பெற்று, பூமியிற் செல்வத்துடன்வாழுவர். இது புகழுகின்ற அதிவாதமன்று; விதிவாதமே. எ-று. திகழ்பிரயாகை அவிமுத்தம் நன்னீர் எனவும், இகழறுகோடிமகளிரை நீரால் ஈந்தபேறும் எனவுங்கூட்டுக. (௫௪)

மயூரகிரியிற் குமாரசுவாமி தோற்றியசருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௧௭௫.

---

## மூன்றாவது

## தீர்த்தமகிமையுரைத்தசருக்கம்.

பைந்தாதுழக்கிமதுவுண்டளிகோடிபாடு
மந்தாரலங்கற்புனைவேல்வலனேந்துமண்ணல்
வந்தேமயின்மாமலைவைகல்வழங்கினோமா
னந்தாததீர்த்தமதுதோன்றனவிற்றுவாமே.

இ-ள். கோடிவண்டுகள் பசியமகரந்தத்தை உழக்கித் தேனை உண்டு (கீதங்களைப்)பாடுகின்ற அழகிய பூமாலையைச்சூடிய வேற்படையை வெற்றியுண்டாக ஏந்திய குமாரசுவாமிவந்து மயூரகிரியில் வீற்றிருந்தமையைச் சொன்னோம். (இனிக்) கெடாததீர்த்தம் ஒன்று தோன்றுதலைச்சொல்வாம். எ-று. வலனேந்தும் என்பதற்கு வலத்திருக்கரத்திலேந்தும் எனப் பொருள் கொள்ளினும்பொருந்தும். (௧)

அருள்வேந்துவகையுடன்வைகுமமையமோர்ந்து
பொருள்வேண்டுவோரின்முருகன்முகப்பொம்மனோடி
வருகாதலாலேமயினின்றுவழங்குநின்பே
ரொருவாதநன்னீர்த்தடமிங்குறுதல்வேண்டும்.

இ-ள். திருவடியிணையுடைய அரசன் மகிழ்ச்சியுடன் இருக்குஞ் சமயம் அறிந்து, (அவனிடத்தில் தாம் விரும்பிய)பொருளை வேண்டுபவரைப்போல, குமாரசுவாமியுடைய திருமுகப்பொலிவைப்பார்த்து, வருகின்ற விருப்பினாலே மயில் நின்றுகூறும்: தேவரீருடைய திருநாமம் நீங்காத நல்ல நீரையுடைய தடாகத்தை இவ்விடத்தில் தருதல்வேண்டும்; எ-று. (௨)

ஒப்பாருமில்லாவெறுழின்மங்கையரோடுமேவி
யெப்போதுமிம்மாமலையின்கணிருத்தல்வேண்டுந்
துப்பாகியானுநினைப்போலுருச்சார்தல்வேண்டு
மப்பாவிவைதந்தருளென்னப்பணிந்ததன்றே.

இ-ள். நிகர் ஒருவருமில்லாத அழகினையுடைய இருசத்திகளுடன் பொருந்தி எப்பொழுதும் இந்தப் பெருமையாகிய மலையில் வீற்றிருத்தல் வேண்டும்; தவறுமல் அடியேனும் தேவரீரைப்போல வடிவத்தைப் பொருந்தல்வேண்டும்; அப்பனே, இவற்றைத் தந்தருள்க என்று வணங்கிற்று. எ-று. (௩)

திசையெங்குங்கம்மமணநாறியதெய்வநீப
மசையுஞ்செழுஞ்சாந்தணிமார்பனதற்குநேர்ந்தே
யிசைகொண்டதோகைக்கிரிச்சாரலினேய்ந்ததேம்பா
ணசைகொண்டுதோயுந்தடமாக்கிநவிலுகின்றான்.

இ-ள். திக்குகள் எங்கும் மிக, மணங்கமழ்கின்ற தெய்வத்தன்மையினையுடைய கடப்பமாலை அசையும் செழுமையாகிய சந்தனக்குழம்பை அணிந்த மார்பினையுடைய குமாரசுவாமி அதற்கு உடம்பட்டு, கீர்த்தியைப் பொருந்திய மயூரகிரியின்சாரலில், இயைந்த இடத்தில், (எவரும்) விருப்பத்தைக்கொண்டு முழுகும் தடாகத்தை உண்டாக்கித் திருவாய்மலர்ந்தருள்கின்றார். எ-று. தேம்-இடம். (௪)

இந்தத்தடத்தினிடையெவரேனுமெம்மைச்
சிந்தித்துநீங்காநிறையன்பினிற்சேர்ந்துமூழ்கிற்
புந்திக்குநேர்ந்தபடியிம்மையிற்போகமாந்தி
யந்தத்தின்மேலாம்பதமுத்தியடைவர்மன்னே.

இ-ள். இந்தத்தடாகத்தில் எவராயினும் நம்மைத் தியானித்து நீங்காத நிறைந்த அன்பினால் அடைந்து ஸ்நானஞ்செய்தால் (அவர்கள்) மனத்தில் நினைத்தபடி இப்பிறப்பிற் போகங்களை அனுபவித்து, முடிவில் மேலாகிய பதமுத்தியை அடைவர்கள். எ-று. (௫)

வேறு.

தருமமுதனான்குபயனுதவுமந்தத்தடத்தின்பேர்சரவணமென்
றாகவிதின், விரதமதாகியசுக்கிலபக்கத்தின்மேவியசட்டியினிடத்
தும்வெள்ளிவாரம், வருமிடத்துங்கார்த்திகைநன்னாளுமூழ்கிமலையை
வலம்வந்துநமைப்பணிந்தோர்கள், டிருவினுடனெடுநாள்வாழ்ந்த
யற்குமாற்குஞ்சேர்வரியநமதுபதஞ்சேர்வர்மாதோ.

இ-ள். தருமமுதலாகிய சதுர்விதபுருடார்த்தத்தையும் தருகின்ற அந்தத் தடாகத்தின்பெயர் சரவணம் என்று ஆகுக. இத்தடாகத்தில் நமது விரதமாகிய பூர்வபக்கத்தில் வருகின்ற சஷ்டியிலும், சுக்கிரவாரத்திலும், நல்ல கார்த்திகைநட்சத்திரத்திலும் ஸ்நானம்பண்ணி, மலையைப் பிரதட்சணஞ்செய்து நம்மை வணங்கினவர்கள், (இம்மையில்) செல்வத்தோடு நெடுநாள் வாழ்ந்து (மறுமையில்) பிரமாவுக்கும் விட்டுணுவுக்கும் அடைதற்கரிய நமது பதத்தை அடைவர்கள், எ-று. (௬)

மைந்தரிலாவந்தியரிவ்விரதம்பூண்டிவ்வாவியிடைத்தோய்ந்து
மன்னவலமாய்வந்து, கந்தகிரிக்கிளையாயிம்மலையிலன்பர்காண்டகவீற்

திருக்குமெமைவணங்கினோரேல், முற்றைவினையறவிட்டுச்செல்வங்
கல்விபேருணர்வுநிறையாயுண்முதலமேசர்ந்து, சுந்தரமாம்புதல்வர்த
மைவிருப்பினீன்றுதொலையாதபெருஞ்செல்வந்துன்னிவாழ்வார்.

இ-ள். புதல்வரில்லாத மலடிகள் இந்தவிரதத்தை அநுட்டித்து இப் பொய்கையின்கண் முழுகி, மலையைப் பிரதக்ஷிணமாய்வந்து, கந்தகிரிக்கு நிகராய் இம்மலைக்கண் அன்பர்கள் தரிசிக்க வீற்றிருக்கும் எம்மை வணங் குவாராயின், (அவர்கள்) பழவினைகளை முற்றக்கெடுத்து, செல்வம் கல்வி பேரறிவு தீர்க்காயுள் முதலாயினவற்றை அடைந்த அழகுபொருந்திய புத் திரர்களை விருப்போடுபெற்று, அழியாத பெருஞ்செல்வத்தைப் பொருந்தி வாழ்வர்கள். எ-று. (எ)

அடையும்வெதிபாதயகவுதையமிக்கவருத்தவுதையஞ்சோமனை
ருக்கன்வாரங், கடையுவாவிருகதிரைப்பாம்புதீண்டுங்காலமனுவாதி
தினமாதந்தோன்றும், வடுவிறினம்பிரதோடமிதனின்மூழ்கிமலையை
வலம்வந்துநமைவணங்குமேலோர், புடவியெலாமுழுதாண்டுநெடு
நாள்வைகிப்பொருவரியநமதுபதம்பொருந்துவாரே.

இ-ள். வருகின்ற வெதிபாதயோகம், மகோதயம், மேலான அர்த் தோதயம், சோமவாரம், சூரியவாரம், கடையுவாவெனப்படும் அமாவாசை பூரணை, சூரியகிரகணகாலம், சந்திரகிரகணகாலம், மன்னுவாதிதினம், குற் றமற்ற மாதசங்கிராந்திதினம், பிரதோஷகாலம் ஆகிய இப்புண்ணியகாலங் களில் ஸ்நானம்பண்ணி, இம்மலையைப் பிரதட்சணஞ்செய்து நம்மைவணங் கும் மேன்மையையுடையோர், பூமிமுழுதையும் பொதுநீக்கி அரசாண்டு நெடுங்காலம் இருந்து, ஒப்பில்லாத நமது பதவியை அடைவார்கள். எ-று. மன்னுவாதிதினம் மனுக்கள் அவதரித்தகாலம். (அ)

இன்னுமளப்பிலவிதனின்பெருமையாவுமியம்பிடிற்பெருகுநீ
டுய்யமையேநரா,யுன்னவருஞ்சாரூபம்பெறுதல்வேண்டினுள்ளமிசை
நினைந்திடினும்பவத்தைப்போக்கிப், பின்னமிலாவீடருள்வதயனுந்
தெரும்பெருமைதிகழ்பெற்றியதுபுனிதமான, வன்னதன்மேலளவி
யகாற்றெவர்கண்மேனியடுத்திடினும்புத்திமுத்தியளிப்பதாமே.

இ-ள். இன்னும்; இதனுடையபெருமை அளவில்லாதன. அவை எல் லாவற்றையும் (யாம்) கூறினால் மலியும், (மயிலே) நீ, நமக்கு நிகராய்ச் சிறந் திருக்கின்ற சாரூபத்தைப் பெறுதலைவிரும்பில், மனத்தில் நினைக்கினும் பிற வியைக்கெடுத்துச் சாயுச்சியத்தைத்தருவது; பிரமனும் அறியாத பெருமை விளங்கும் தன்மையையுடையது; பரிசுத்தமான அதன்மேல் அளாவியவாயு, எவர்களுடைய சரீரத்தில் வீசினும் போகமோக்ஷங்களைக்கொடுப்பது; எ-று. பின்னம் இலாவீடு-சாயுச்சியம். (௯)

தாவரங்கள்விலங்குமுதலனவான்மாவிற்சார்ந்திடினுமவ்வளி
லந்தணவாவின்ப, மேவியுயர்குலத்தில்வருபிறப்பிற்றோன்றி மெஞ்

ஞானமுணர்ந்தழியாவீடுசேரும், பாவமறுத்தொளிர்ந்திடுவர்புலரிக்
காலைப்பண்பினொடுதுதிக்குமவரினையபான்மைக், காவிரிநற்றீர்த்தம
திற்கடற்குமேல்பாற்கழறவுறுமொன்றரையோசனையின்சேய்த்தே.

இ-ள். அதனில் அளாவியகாற்று, தாவரங்கள் விலங்குகள்முதலான ஆன்மாக்களிற் பொருந்தினும் (அவை) நீங்காத இன்பத்தைப்பொருந்தி, மறுபிறப்பில் உயர்ந்தகுலத்தில் அவதரித்து, மெய்ஞ்ஞானத்தைத்தெளிந்து அழிவற்ற முத்தியைப்பெறும்; விடியற்காலத்தில் நற்குண நற்செய்கைகளோடு துதிப்பவர்கள் பாவத்தைநீக்கி விளங்குவர்கள். இத்தன்மையான (விசிட்டத்தையுடைய) நல்ல காவிரி தீர்த்தக்கரையில் சமுத்திரத்திற்கு மேல்பாகத்தில் சொல்லத்தகும் ஒன்றரையோசனை தூரத்தில், எ-று. (௧௦)

பிரமபுரம்வைகுமதன்றென்சாராகப்பேசியயோசனையொன்றி
ற்பின்னைகேழ்வன், புரமெனவொன்றுளததனைத்தெரிக்கில்யாணர்ப்
பொம்மன்முலைத்திருவிருக்கும்பொலம்பூண்மார்ப, னரனையருச்சித்
துவிழைந்தனமுன்பெற்றே யந்நகர்க்குமவ்விலிங்கமதற்குந்தன்பே
ர்,தரணியெலாம்புகழ்பெருகவைத்தானத் தலந்தனிற்போயவ்வி
லிங்கம்பணிந்துபோற்றி.

இ-ள். சீர்காழியென்னுந்தலம் இருக்கும். அதற்குத் தெற்குப்பக்கமாகச் சொல்லப்பட்ட ஒருயோசனைதூரத்தில் இலக்குமிக்குநாயகராகிய விட்டுணுவினது நகரம் என ஒன்று உள்ளது. அதனை (நாம்) உனக்கறிவிக்கில், அழகுபொருந்திய பொலிவான முலையினையுடைய இலக்குமி குடியிருக்கும் பொன்னாபரணத்தை அணிந்த மார்பினையுடைய விட்டுணு, சிவபெருமானைப் பூசித்து விரும்பினவற்றை முன்பெற்று அந்தத்தலத்திற்கும் அந்த இலிங்கத்திற்கும் தமது நாமத்தை உலகம் எல்லாம்புகழவைத்தார். (மயிலே, நீ) அத்தலத்திற்போய் அந்த இலிங்கத்தை வணங்கித்துதித்து, எ-று. (௧௧)

அவ்விலிங்கந்தனக்குநகர்தனக்குநின்பேராக்கியவணுறைந்தி
டுதியாம்வந்துன்பால், வெவ்வினைதீர்த்தனுக்கிரகஞ்செய்துமென்று
வீறுபெறுமயின்மலைமேலுறையுந்தம்மை, யெவ்வமறவணங்கெனிற
றற்புகழ்ச்சியென்றே யெண்ணியுணர்வருந்தமதுபெருமைதன்னைப்,
பவ்வவிடமுண்டவரளியம்பற்காகப் பணித்தனனன்றெனவணங்கிப்
பரவிச்சொல்லும்.

இ-ள். அந்தச்சிவலிங்கத்திற்கும் (அந்தத்) தலத்திற்கும் உன்பெயரை இட்டு அவ்விடத்தில் இருக்குதி; யாம் உன்மாட்டுவந்து தீவினையைநீக்கிக் கிருபைபுரிதும் என்று, பெருமைபெறும் மயூரகிரியில் இருக்கும் நம்மைக் குற்றம் அற வணங்கு எனக் கூறில் தற்புகழ்ச்சியாம் என்று கருதி, அறிவரிய தமது பெருமையைக் கடலிற்றோன்றிய நஞ்சை உண்ட சிவபெருமான் அருளிச்செய்தற்காகக் கட்டளையிட்டார். (மயில்) நன்று என்று நமஸ்கரித்துத் துதித்து விண்ணப்பஞ்செய்யும். எ-று. செய்தும் என்று பணித்தனன் என இயையும். (௧௨)

வேறு.

இன்றுமுதலெந்தைதனைமயூரகிரிநாதனெனவியம்பல்வேண்டும், குன்றினையுமயூரகிரியெனல்வேண்டுமிவ்வுலகுங்குமரவென்ன, நன்றெனவேயுரைப்பானிச்சரவணப்பொய்கையின்வடபானறுந்தேன்பில்கு, மன்றல்கமழ்கொன்றையணிமயூரேசனென்றிலிங்கமன்னிவைகும்.

இ-ள். இன்றுமுதலாக இவ்வுலகம், எம்பெருமானே, குமாரசுவாமியே, தேவரீரை மயூரகிரிநாதர் என்று கூறுதல்வேண்டும்; இம்மலையினையும் மயூரகிரி எனக் கூறுதல்வேண்டும் என்று விண்ணப்பஞ்செய்ய, (மயிலே) நன்றென்று அருளிச்செய்வார். இந்தச் சரவணப்பொய்கையின் வடபாகத்தில் நறுமையாகிய தேன்சொரியும் மணங்கமழ்கின்ற கொன்றைமாலிகையை அணிந்த மயூரேசனென்று ஒரு சிவலிங்கம் நிலையாக இருக்கும். எ-று. ()

ஆயலிங்கப்பெருமையிற்றெனவேயெவராலுமளத்தற்காகா, வேயனையதோளியொடுமினிதிருக்குமனையசிவன் மேல்பாலார்ந்து, தோயமுறுமெழில்வாவிதொட்டதற்குநின்றுடஞ்சூட்டிமூழ்கி, நேயமொடுமவ்விலிங்கந்தனைப்பூசித்துறைதியெனநிகழ்த்தல்செய்தான்.

இ-ள். அந்தச் சிவலிங்கத்தின்பெருமை இத்தன்மைத்து என்று எவர்களாலும் அளவிடல்கூடாது; மூங்கிலை ஒக்குந் தோளினையுடைய பார்வதியாரோடும் மகிழ்ச்சியுடன் வீற்றிருக்கும் அச் சிவபெருமானுக்கு மேல்பாகத்தில், நீர் நிறைந்திருக்கும் அழகிய வாவியைத்தோண்டி, அதற்கு உன் பெயரை இட்டு, மூழ்கி, அன்புடன் அந்தச் சிவலிங்கத்தைப்பூசித்து, இருத்தி என்று அருளிச்செய்தார். எ-று. (௧௪)

சூரனுடல்கிழித்திரங்குடித்துமிகுதசையதனைச்சுவைக்குஞ்செவ்வை வேல், வீரனுமான்முதலோர்களுடனெழுந்துசரவணத்தின்விதியான்மூழ்கி, யாரமுதமைந்துசெழுங்கனிநறுந்தேனானிடத்துகுந் தூநல்ல, நீரினைகொண்டபிடேகஞ்செய்துசெழும்பட்டாடைநிலவச்சாத்தி.

இ-ள். சூரனுடைய உடம்பைக்கிழித்து, இரத்தத்தைக்குடித்து, மிகுந்த தசையை உண்ணும் கூர்மைபொருந்திய வேலையுடைய குமாரசுவாமியும், விட்டுணுமுதலானோருடன் எழுந்து, சரவணப்பொய்கையில் விதிப்படி மூழ்கி, நிறைந்த பஞ்சாமிர்தம் செழுமையாகிய கனி நறியதேன் பஞ்சகௌவியம் நல்லதீர்த்தம் ஆகிய இவைகளைக்கொண்டு அபிஷேகஞ்செய்து, செழுமையாகிய பட்டுவஸ்திரத்தை விளங்க அணிந்து, எ-று. (௧௫)

விரைகமழ்சந்தனம்பூசிமலர்மாலைபொற்பணியும்வேய்ந்துவெள்ளைச் சுரபியின்பாலடிசினிவேதனஞ்செய்தரியவிரைத்தூபங்காட்டிப் பரிதிபலவெழுந்தனபொற்பலதீபங்கோட்டிமலர்பலவுந்தூவி வரையதனைத்தனுவாக்குமயூரேசன்றனையன்பின்வணங்கினானே.

இ-ள். வாசனைகமழுஞ் சந்தனத்தைப்பூசி, பூமாலையையும் பொன்னா பரணத்தையும் அணிந்து, வெண்மையாகிய பசுவினது பாலாற்சமைத்த அன்னத்தை நிவேதித்து, அரிய வாசனையையுடைய தூபத்தைக்காட்டி, பல சூரியர்கள் உதித்தவாறுபோலப் பல தீபங்களைச்சுற்றி, புட்பங்கள் பல வற்றையுந் தூவி, மேருகிரியை வில்லாக்கிய மயூரேசனை அன்பினால் நமஸ் கரித்து. எ-று. (௧௫)

எந்நாளுமென்மலையிலிருத்தியெனநீவேண்டியவியல்புகன்று
னின்றமலையுறைநீங்காதுவைகியெம்பாலணையுந்தொண் [னி
துன்றுபிறவிமெய்யார்பவந்தொலைத்துமெனவுமையின்முன்சொல்லிவெ
நன்றுகத்தனைக்கொருசாரமர்ந்தகந்தகிரிசென்றுறுபயவேலான்.

இ-ள். எந்நாளும் எனதுமலையில் நீவிர் இருத்தல்வேண்டும் என (மயிலே நீ) வேண்டியதன்மையினால், உன்பெயர்புனைந்த மலையில் நீங்காது வீற்றிருந்து, நம்பக்கத்தில் அன்போடு அடையும் அடியாருடைய பிறவியைக் கெடுப்போம் என்று அம்மையின்முன் அருளிச்செய்து, அச்சத்தைத்தரும் வேலையுடைய குமாரசுவாமி, நல்ல கைலையங்கிரிக்கு ஒருபக்கத்தில் இருக் கின்ற கந்தமலையிற்போயினார். எ-று. (௧௭)

வேறு.

பல்லுயிர்க்கொருதாயாகும்பகுதியாங்குமரமூர்த்தி
யொல்லையிலேகிக்கந்தவரையிடையுவப்பிற்சேர்ந்து
மல்லலந்திறப்புவாய்ந்தமடங்கலந்தவிசின்வைகி
யெல்லையிலுயிர்கட்கென்றுமருள்புரிந்திருக்கின்றானே.

இ-ள். பல உயிர்களுக்கும் ஒருமாதாவாகும் இயல்பினையுடைய குமா ரசுவாமி, விரைந்துபோய்க் கந்தமலையில் மகிழ்ச்சியுடன் சேர்ந்து, பெரு மை ஆகிய அழகமைந்த சிங்காசனத்தில் வீற்றிருந்து, அளவில்லாத உயிர்க ளுக்கு என்றைக்குங் கிருபைசெய்து இருக்கின்றார். எ-று. (௧௮)

அன்றுதொட்டருந்தாண்மஞ்ஞைவெற்பினுமனையோன்றன்னை
யென்றனக்கிசைத்தவண்ணமிருப்பனோயாதோவென்று
வன்றிறன்மஞ்ஞையந்தவரையின்மேற்போதும்போதி
னன்றுவீற்றிருக்கும்வேற்கைநாதனைக்கண்டதன்றே.

இ-ள். அன்றுமுதலாக மயூரகிரியிலும் எழுந்தருளியிருந்தார். மிக்க வலியினையுடைய மயில், எனக்கு அருளிச்செய்தபடி இருப்பாரோ என்னை யோ? என்று அந்தக்குமாரசுவாமியை (அறியும்படி) அம்மலையின்மீது போகும்பொழுதில், (தனக்கு அருளிச்செய்தபடி) நன்றாக வீற்றிருக்கின்ற வேலை ஏந்திய திருக்கரத்தையுடைய அவரைக்கண்டது. எ-று. (௧௯)

அண்ணலேயென்னையாட்கொளருட்பெருங்கடலேதிங்கள்
வண்ணவேணியன்றன்பெற்றமதலையேவானோர்செய்த
புண்ணியவுருவேமேலாம்பூரணப்பொருளேயென்றன்
கண்ணினன்மணியேயென்றுக்காலினைபணிந்துகூறும்.

இ-ள். பெருமையிற்சிறந்தவரே, நாயேனை அடிமைகொண்ட பெருமையாகிய கிருபைக்கடலே, சந்திரனை அணிந்த அழகிய சடைமுடியினையுடைய சிவபெருமான் பெற்றருளிய குமாரரே, தேவர்கள்செய்த புண்ணியத்தின்வடிவே, மேலாகிய பரிபூரணப்பொருளே, நல்ல என்னிருகண்ணின் மணியே என்று துதித்து (குமாரசுவாமியினுடைய) உபயபாதங்களை வணங்கி விண்ணப்பஞ்செய்யும். எ-று. (௨௦)

என்றுமிப்படியேயிந்தவரையினிலிருத்தியென்று
நன்றனிச்சங்கற்பத்தான்முளைத்திடுந்தடக்கையாலே
யொன்றியவபிடேகங்கணிவேதனமுவப்பிற்செய்து
குன்றலின்மலர்கொண்டண்ணல்குரைகழற்பதத்திற்றூவி.

இ-ள். என்றைக்கும் இப்படி இந்தமலையில் வீற்றிருந்தருள்க என்று, தனது ஒப்பற்ற சங்கற்பத்தினால் முளைத்த பெரிய கையினாலே இயைந்த அபிடேகங்களையும் நைவேதனங்களையும் மகிழ்ச்சியுடன் செய்து, குறைதலில்லாத மலர்களைக்கொண்டு, குமாரசுவாமியுடைய ஒலிக்கும் வீரக்கழலை அணிந்த பாதத்திற்சொரிந்து, எ-று. (௨௧)

இத்திறமென்னையீன்றவிடைபுரைநுசுப்பின்வேய்த்தோட்
டத்தரிநெடுங்கட்டையலிருவர்கடமையும்பூசித்
தத்தனைவிசுவமானமகத்தனையணுவைமேலாஞ்
சுத்ததத்துவனைவேண்டித்துணையடிபரவிற்றன்றே.

இ-ள். இவ்வாறாக, அடியேனைப்பெற்ற நூல்போலும் இடையினையும், மூங்கில்போலுந் தோளினையும், பிறழ்கின்ற செவ்வரிபரந்த நெடிய கண்ணினையும் உடைய தெய்வநாயகியார் வள்ளிநாயகியார் என்னும் இருசத்திகளையும் பூசித்து, சகத்பிதாவை, உலகமேயுருவமாகிய மகத்தானவரை, அணுவானவரை, மேலாகிய சிவதத்துவமானவரை வேண்டுதல்செய்து, உபயபாதங்களைத் தோத்திரஞ்செய்தது. எ-று. (௨௨)

போற்றியமயிலைநோக்கிப்புகன்றனனென்றுமிங்ஙன்
வீற்றிருந்தருள்வோமென்னவிளம்பியவண்ணங்கேளா
மாற்றருமுவகையோடும்வைகிற்றுவானோர்பூசை
யாற்றிடமுருகவேளுமாங்கிருந்தருளினானே.

இ-ள். துதித்த மயிலைப்பார்த்து எந்நாளும் இங்கே வீற்றிருந்தருள்வோம் என்று அருளிச்செய்தார். (அங்ஙனம்) அருளிச்செய்ததனைக் கேட்டு (மயில்) நீக்குதற்கு அரிய மகிழ்ச்சியோடும் இருந்தது. குமாரசுவாமியும் தேவர்கள் பூசனைசெய்ய அவ்விடத்தில் வீற்றிருந்தருளினார். எ-று. ()

வாகைவேற்குமரனுங்குவந்துவீற்றிருந்தலாலே
தோகையங்கிரிநாற்றிக்குஞ்சொல்லுமைங்குரோசங்காறும்
வேகமாய்நடப்பநிற்பவெனுமுயிர்வீயும்போதிற்
சேகுசேரியமன்வாதைசேர்வுறாகயிலைசேரும்.

இ-ள். வெற்றியையுடைய வேற்படையை ஏந்திய குமாரசுவாமி அவ்விடத்தில் வந்து வீற்றிருத்தலினாலே, மயூரகிரிக்கு நாற்றிக்கினும் சொல்லப்பட்ட ஐந்து குரோசம்வரைக்கும், விரைந்து நடப்பன நிற்பன என்னும் சீவராசிகள் இறக்கும்போதில் வன்கண்மைபொருந்திய யமனுடைய வாதனையை அடையா; கைலையங்கிரியை அடையும். எ-று. குரோசம்-கூப்பிடுதூரம். (உச)

இப்பெருங்காதைகேட்போரியம்புவோரியாவரேனுந்
துப்பிதழ்மனையார்மக்கடொலைவறுசெல்வங்கல்வி
யொப்பரும்போகம்பெற்றிவ்வுலகிடைவாழ்ந்துவேலோன்
றிப்பியவுருவமெய்திக்குமரவேள்பதத்திற்சேர்வார்.

இ-ள். இந்தப்பெருமையாகிய சரித்திரத்தைக் கேட்பவர் படிப்பவர் எவராயினும் பவளம்போன்ற அதரத்தையுடைய மனைவிகள் பிள்ளைகள் அழிதலில்லாத செல்வம் கல்வி நிகரில்லாத போகங்களைப்பெற்று, இந்த உலகில் வாழ்ந்து, (மறுமையில்) குமாரசுவாமியுடைய பரிசுத்தம்பொருந்திய வடிவத்தை அடைந்து கந்தலோகத்திற் சேர்வர். எ-று. (உரு)

தீர்த்தமகிமையுரைத்தசருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் கஉஎ.

---

நான்காவது

## மயூரம் முத்திபெற்றசருக்கம்.

கந்தமார்கடம்பணிகந்தன்பேர்த்தடம்
வந்தவாறிதுதிறன்மயூரமுத்திபெற்
றுய்ந்தவாறதையெடுத்தோதுவேனென
முந்தைநாண்மரைமலர்முதல்வன்கூறுவான்.

இ-ள். வாசனைநிறைந்த கடப்பமாலையை அணிந்த குமாரசுவாமியின் திருநாமத்தைப்பெற்ற பொய்கை வந்த முறை இது. வலியினையுடைய மயில் முத்தியைப்பெற்று உய்ந்தமையை எடுத்துச்சொல்வேன் என்று பழமைபொருந்திய அன்றலர்ந்த தாமரையாசனராகிய பிரமா சொல்வர். எ-று.

ஆதியாய்ப்பராபரவத்துவாய்நிறை
மோதமாய்க்கருணையின்முதல்வனாகிய
வேதநாயகன்குகன்கயிலைமேயபின்
றீதிலாமஞ்ஞைவேள்செப்பும்வண்ணமே.

இ-ள். (எவர்க்கும்) முதலாய், பராபரப்பொருளாய், நிறைந்த சந்தோஷமாய், கிருபைக்கு முதல்வராகிய வேதநாயகரான குமாரசுவாமி, கைலையங்கிரிக்கு எழுந்தருளியபின் தீமை இல்லாத மயில், அவர் தனக்கு அருளிச்செய்தபடி, எ-று. வஸ்து-வத்து என்றாயிற்று. (உ)

வரையினுக்கொருபுறந்தென்றுமாடுசேர்
சரவணத்தடத்திடைச்சார்ந்துதோய்ந்துபி
னருகினிலுறைந்திடுமறைநிவைகிய
பரனையும்விதிமுறைபரவிப்பூசியா.

இ-ள். மலைக்கு ஒருபுறமாய்த் தெற்குப்பக்கத்தில் இருக்கின்ற சரவணப்பொய்கையிற்போய் முழுகி, பின்னர் (அதன்) அருகில் வீற்றிருக்கின்ற அநாதிநித்தியனாகிய சிவபெருமானையும் விதிப்படியே பூசித்துத் தோத்திரஞ்செய்து, எ-று. (௩)

பாதலமுருவவேமுளைத்தபண்ணவற்
கோதுமேற்றிசையினிற்றடந்தொட்டோங்குதன்
சாதியாம்பேர்புனைந்தாடித்தங்கட்கோர்
நாதனாமுருகன்பானண்ணிப்போற்றிற்றே.

இ-ள். பாதாளமும் ஊடுருவும்படி தோன்றிய சிவபெருமானுக்குச்சொல்லப்பட்ட மேலைத்திசையிலே தடாகத்தைத்தோண்டி, உயர்ந்த தன் சாதிக்குரிய பெயரைச்சூட்டி, முழுகி, தங்களுக்கு ஒரு யசமானராகிய குமாரசுவாமியின்மாட்டுச்சென்று தோத்திரஞ்செய்தது. எ-று. (௪)

ஆயவனனுக்கைகொண்டங்கணீங்கியே
தோயினுநினைப்பினுந்தோன்றக்காண்கினுந்
தீயனவகன்றிடுதெய்வக்கங்கைநேர்
தூயவாம்பொன்னிநற்றுறையந்தோய்ந்ததே.

இ-ள். அவருடைய அநுஞ்ஞையைப்பெற்று, அவ்விடத்தில் நின்றும் நீங்கி, ஸ்நானஞ்செய்யிலும் நினைப்பிலும் கண்ணுக்குப் புலப்படப்பார்ப்பிலும் தீமைகள்நீங்குகின்ற தெய்வத்தன்மையினையுடைய கங்கையையொத்த பரிசுத்தமாகிய நல்ல காவிரிதீர்த்தத்தில் முழுகிற்று. எ-று. (௫)

கடுப்பொடுங்கடலெலாம்பொங்குங்காலையின்
மிதவையின்மிதந்திடும்புரத்தின்மேவியே
நதியொடுமதிபுனைநம்பன்கோயிற்போய்
விதியுடன்றொழுதுதன்குறைவிளம்பிற்றே.

இ-ள். வேகத்துடனே சமுத்திரமெல்லாங்கிளரும் பிரளய காலத்தில் தெப்பம்போல மிதக்கும் சீர்காழியிற்சென்று, கங்கையுடன் சந்திரனை அணிந்த சிவபெருமானுடைய கோயிலிற்புகுந்து, விதிப்படிவணங்கித் தன் குறையைக்கூறிற்று. எ-று. (௬)

உலகெலாந்தனதொருவயிற்றினுய்த்திடு
மலவிதட்டிருவினுக்கிறைவன்பேர்புனை
நலமலிநகர்மிசைநண்ணிக்கோயிற்சார்ந்
தலைபுனற்பொய்கையினன்பினாடியே.

இ-ள். உலகம் முழுதையும் தன் ஒருவயிற்றில் அடக்கிய செவ்விலவம் பூவைப்போன்ற அதரத்தையுடைய இலக்குமிக்குநாயகராகிய விட்டுணுவினது பெயரைவகித்த நலம்மிக்க நகரத்திற்சென்று, திருக்கோயிலைச்சேர்ந்து, அசைகின்ற நீரையுடைய தடாகத்தில் அன்புடன்முழுகி, எ-று. உய்த்திடும் இறைவன் என இயையும். (எ)

மூவரின்முதல்வனுமூர்த்திபூசனைக்
காவனதிரவியமாய்ந்துகொண்டெழீஇக்
காவியுங்கயலையுங்கடந்தகண்ணுமை
மேவுமோர்பாகனைவிதியிற்பூசியா.

இ-ள். மும்மூர்த்திகளில் முதல்வராகிய சிவபெருமானது பூசனைக்கு வேண்டிய திரவியங்களை ஆராய்ந்து கொண்டெழுந்து, கருங்குவளைப்பூவையும் கயல்மீனையும் வென்ற கண்ணையுடைய பார்வதியார்பொருந்தும் ஒரு பாகத்தையுடைய அவரை விதிப்படி பூசித்து, எ-று. (அ)

தந்தையைக்கொன்றவன்றாயைத்தோய்ந்தவன்
புந்தியாலருட்குருதாரம்புல்லினோ
னெந்தைநின்னிகழ்ந்தவனெவருநன்மைபெற்
றுய்ந்திடவருடயைக்குறையுளன்றே.

இ-ள். புத்திபூர்வமாகப் பிதாவைக்கொன்றவன், தாயைப்புணர்ந்தவன், அருளுடைய குருபத்தினியைப்புணர்ந்தவன், எம்பெருமானே, தேவரீரைத்தூஷித்தவன் முதலான அனைவரும் நன்மையைப்பெற்று உய்ய அருளுகின்ற கிருபைக்கு இருப்பிடம் தேவரீரன்றோ. எ-று. (௯)

என்னுடைப்பாவமுந்தொலைத்திட்டெம்பிரான்
றன்னுயர்வடிவமுந்தருதல்வேண்டுமென்
றுன்னியேவணங்கலுமுளங்கொண்டானரோ
பொன்னெனமிளிர்சடைப்புனிதமூர்த்தியே.

இ-ள். அடியேனுடைய பாவத்தையுநீக்கி, எமது யசமானராகிய குமாரசுவாமியினுடைய உயர்ந்த திருவுருவையுந் தந்தருளல்வேண்டும் என்று சிந்தித்து வணங்குதலும், பொன்போலவிளங்குஞ் சடையினையுடைய பரிசுத்தராகிய சிவபெருமான், (மயிலினுக்கு அருள்புரியத்) திருவுளங்கொண்டார் எ-று. உளங்கொண்டான் என்பதற்குக் குமாரசுவாமி மயிலுக்கு அருளிச்செய்த திருவாக்கைநினைந்தார் எனப் பொருள்கொள்ளினும் பொருந்தும். (௰)

வேறு.

அக்கணமெழுந்துசிவனம்பிகையினோடும்
பக்கமதினுற்றவிடைமேற்கொடுபடர்ந்தான்
மிக்கவிமையோர்முனிவரானவர்மிடைந்து
தொக்கனர்கைசென்னிமிசைகூட்டினர்தொடர்ந்தார்.

இ-ள். சிவபெருமான் பார்ப்பதியாரோடும் அக்கணப்பொழுதில் எழுந்து, பக்கத்தில்வந்த இடபத்தில் ஏறிச்சென்றார். மேலான தேவர்கள் இருடிகளாயினோர் நெருங்கித் திரண்டு கையைச் சிரமேற்குவித்து வந்தார்கள். எ-று. (கக)

எண்ணரியபாரிடர்களோடுமிறைகொள்ளும்
வண்ணவிறல்வேழமுகனாதியர்கண்மைந்தர்
நண்ணினர்கள்விஞ்சையர்கள்சித்தர்கணடந்தார்
பண்ணினொடரம்பையர்கள்பாடினர்நடித்தார்.

இ-ள். அளவிறந்தபூதர்களோடும் தலைமைபொருந்தும் அழகிய வலியினையுடைய விநாயகர் முதலாகிய புதல்வர்கள்வந்தார்கள். வித்தியாதரர்கள் சித்தர்கள்வந்தார்கள். அரம்பையர்கள் பண்ணோடுபாடி ஆடினார்கள். எ-று. (கஉ)

பல்லியமுழங்கநிறைபத்தர்சிவவென்ன
வெல்லையறுமிவ்வகையசங்கமுடனேகி
நல்லிரவிவெள்ளமொருஞாங்கரினெறிக்கும்
வல்லவொளிபோலழகுவீசவெதிர்வந்தான்.

இ-ள். பலவாத்தியங்கள் ஒலிக்க, நிறைந்த அன்பர்கள் சிவசிவ என்று கூற, அளவற்ற இவ்வகைப்பட்ட கூட்டத்துடன்போய், நல்ல வெள்ளம் என்னும் எண்ணையுடைய சூரியர்கள் ஒருபக்கமாகக்காலும் மிக்க வெய்யில்போல அழகுபரக்க எதிராக எழுந்தருளிவந்தார். எ-று. (கங)

ஐயனைமின்மத்தியினருந்தவமிழைக்குஞ்
செய்யசடைமாமுனிவருக்கரியசெம்மல்
கையனிடையேயெளிதுகாணவரயான்முன்
செய்தவுயர்மாதவமெனாமயிலறிந்தே.

இ-ள். பஞ்சாக்கினி மத்தியில் நின்று அரிய தவத்தைச்செய்யும் சிவந்த சடையினையுடைய பெரிய இருடிகளுக்கும் அரிய சிவபெருமான், சிறியேனிடத்தில் எளிதாய்க்காணும்படி எழுந்தருள, யான் முற்பிறப்பிற்செய்த உயர்ந்த மகத்தானதவம் என்னேயோ என்று மயில் அறிந்து, எ-று. (கச)

மேகமதுகண்டதினுமிக்கமகிழ்வெய்தி
யாகமதிலேபுளகரும்பநடமிட்டு
நாகமிசையேதுயிலுநம்பியறியாத
கோகனதமாமலர்வணங்கியிவைகூறும்.

இ-ள். மேகத்தைக்கண்டமையினும் மிக்க சந்தோஷத்தைப்பொருந்தி, உடம்பிலே உரோமாஞ்சம்பொருந்தக் கூத்தாடி, சர்ப்பசயனத்தில் நித்திரைசெய்யும் விட்டுணுவும் அறியாத செந்தாமரைமலர்போலும் பாதங்களைவணங்கி, இவற்றை விண்ணப்பஞ்செய்யும். எ-று. (கரு)

வேறு.

வேதநாயகனேபோற்றிவித்தின்றிமுளைத்தாய்போற்றி
காதில்வெண்குழையாய்போற்றிகங்கையஞ்சடையாய்போற்றி
போதினன்முகனுமாலுங்காணொணப்பொருளேபோற்றி
மாதொருபாகம்வைத்தவானவாபோற்றிபோற்றி.

இ-ள். வேதங்களுக்கு அதிபரே இரக்ஷித்தருளுக. காரணம் இன்றித் தானாய்த் தோன்றினவரே இரக்ஷித்தருளுக. திருச்செவியிற் சங்கக்குண்டலத்தையுடையவரே இரக்ஷித்தருளுக. கங்கையை அணிந்த அழகிய சடையினையுடையவரே இரக்ஷித்தருளுக. தாமரையாசனராகிய பிரமாவும் விட்டுணுவும் காண்டற்கரிய அரும்பொருளே இரக்ஷித்தருளுக. பார்ப்பதியாரை ஒருபாகத்தில்வைத்த தேவரே இரக்ஷித்தருளுக இரக்ஷித்தருளுக. எ-று. ()

உன்னுயர்பதமேவெஃகுமுழுவலன்படியார்நிற்க
வென்னையிங்காளத்தோன்றுமிறைவநின்கருணைபோற்றி
புன்னுனைநீரிற்றோன்றுநிலையிலாப்புவனந்தன்னுண்
மன்னியேயழிவொன்றின்றிவைகியவள்ளல்போற்றி.

இ-ள். தேவரீருடைய உயர்ந்த பாதங்களையேவிரும்பும் எழுமையுந் தொடர்ந்த அன்பினையுடைய பத்தர்கள் நிற்க, (அன்பு சிறிதும் இல்லாத) நாயேனை இங்கே ஆளுதற்குவந்தருளுந் தலைவரே, தேவரீருடைய கிருபை துதிக்கப்படுவது. புல்லினது நுதியில் உள்ள நீர்த்துள்ளிபோலத்தோன்றும் நிலையில்லாத புவனங்களில் நிலைபெற்று, நாசம் சிறிதும் இன்றி வியாபித்திருக்கின்ற வள்ளற்றன்மையினையுடையவரே இரக்ஷித்தருளுக. எ-று. (௧௭)

அடக்கருந்திறத்தசூரான்மெலிந்திடுமமரருய்வான்
கடக்கரும்வலத்தவேற்கைக்கந்தனைத்தந்தாய்போற்றி
விடக்கருமேகஞ்சூழவிண்ணவரிறவாவண்ண
நடுக்களத்தனையநஞ்சமேந்தியநம்பாபோற்றி.

இ-ள். (எவராலும்) அடக்குதற்கரிய வலிய சூரபன்மனால்வருந்திய தேவருய்யும்படி வெலற்கரிய வெற்றிபொருந்திய வேலை ஏந்திய திருக்கரத்தையுடைய குமாரசுவாமியைப் பெற்ற பிதாவே, இரக்ஷித்தருளுக. நஞ்சாகிய கரிய முகில்வந்துசூழ, தேவர்கள் (அதனால்) இறவாதபடி திருக்கண்டத்தின் நடுவில் அதனைத்தரித்த கடவுளே இரக்ஷித்தருளுக. எ-று. (௧௮)

இனையவாறேத்துமஞ்ஞைக்கின்னருள்சுரந்துநின்பேர்
புனைதிருவரையிற்சென்றுசரவணம்புகுந்துதோய்ந்து
நனையவிழ்கடப்பந்தண்டார்நம்பியைப்பூசித்தேத்தி
லனையவன்சாரூபத்தையளிக்குவன்போதியென்று.

இ-ள். (சிவபெருமான்,) இவ்வாறு தோத்திரம்செய்யும் மயிலினுக்கு இனிய கிருபைபாலித்து, உனது நாமம்புனைந்த அழகிய மலையிற்போய், சரவணப்பொய்கையிற் புகுந்து முழுகி, அரும்பு அவிழ்கின்ற குளிர்ந்த கட

ப்பம்பூமாலையினையுடைய நமது குமாரனை வழிபட்டுத் துதிக்கில், அவன் சாரூபத்தை (உனக்குத்) தருவான் போவென்று, எ-று. (கக)

அதிகநம்பத்திமையோர்க்குளக்கிரகணியனாகி
வதிகயாமடியார்மேலாம்வரத்தினைத்தருகென்றாலு
முதவலேவிரதமாகவுடையமென்றியானார்ப்பைந்தே
னிதழியுமறுகுஞ்சூடுமிறையவனியம்பினானே.

இ-ள். (பின்,) நமது விசேடித்த அன்பர்களுக்குள் முதற் கணிக்கப்படுபவனாயிருக்கக்கடவாய். அடியார்கள் எத்துணைப் பெரிய வரங்களைத்தருக என்று பிரார்த்தித்தாலும் நாம் (அவற்றைக்) கொடுத்தலையே விரதமாகவுடையேம் என்று அழகிய பசுமையாகிய தேனையுடைய கொன்றைப்பூவையும் அறுகையும் (சடையிற்) சூடுஞ் சிவபெருமான் அருளிச்செய்தார். எ-று.

தன்மவாரிதியாமண்ணறந்தருள்வரத்தைக்கேட்டு
நன்மைவேறிதனிலுண்டோவெனமனமகிழ்ச்சிநண்ணிப்
பொன்மலரிதழிசூடும்புனிதன்வான்பதத்தின்வீழ்ந்து
பன்முறைவணங்கிப்போற்றிப்பரிவினிங்கிதனைவேண்டும்.

இ-ள். தருமக்கடலாகிய சிவபெருமான் கொடுத்தருளிய வரத்தை (மயில்) கேட்டு, வேறாய் இதனினும் பார்க்க நன்மையுண்டோ என்று மனச்சந்தோஷத்தைப்பொருந்தி, பொன்போல்விரியுங் கொன்றைப்பூவைச்சூடும் பரிசுத்தராகிய சிவபெருமானது உயர்ச்சியையுடைய பாதத்தில் விழுந்து பலமுறை வணங்கித் துதித்து, அன்பினால் இதனை வேண்டுதல்செய்யும். எ-று. (உக)

அன்பில்யான்வணங்குமிந்தவிலிங்கமுநகருமைய
வென்பெயர்புனைதல்வேண்டுமெனவவையீந்துநின்போற்
பின்பொருகாலமீண்டுக்கௌரிபூசித்துப்பேசுந்
தன்பெயருன்பேர்முன்னுச்சாற்றிடப்புனையுமன்றே.

இ-ள். சுவாமீ, அன்பினால் அடியேன் வழிபட்ட இந்த இலிங்கமும் க்ஷேத்திரமும் அடியேனுடைய நாமத்தைப் பொருந்தல்வேண்டும் என்று விண்ணப்பஞ்செய்ய, அவற்றைக் கொடுத்தருளி, உன்னைப்போலப் பின்னொருகாலத்தில், பார்வதி இங்கே நம்மைப்பூசித்து, சொல்லப்படுந் தன் நாமத்தை உனது நாமத்திற்குமுன்னாகச் சொல்லும்படி (ஒருநாமத்தை) இடுவாள். எ-று. உன்போல் என்பதற்கு உன்னைப்போல மயூரவடிவெடுத்து எனப் பொருள்கொள்க. (உஉ)

கௌரிமாயூரமென்னக்கிளத்துவரந்தானென்று
தவநிறைகணங்களோடுதன்பெருங்கயிலைசார்ந்தான்
புவனிமேற்கயிலையென்றுபுகலுமாயூரம்வாழுஞ்
சிவனைமும்முறைசூழ்வந்துவணங்கிமேற்றியானஞ்செய்தே.

இ-ள். அந்நாளில் கௌரிமாயூரம் எனச் சொல்வர் என்று, தவம்மிக்க கணங்களுடனே (சிவபெருமான்) தமது பெருமையாகிய திருக்கைலாசத்தை அடைந்தார். (மயில்) பூலோககைலாசம் என்று பேசும் மாயூரத்தில் வாழுஞ் சிவபெருமானை மூன்றுதரம் பிரதக்ஷிணஞ்செய்து. நமஸ்கரித்து, பின்பு தியானித்து, எ-று. (௨௩)

ஆண்டுநின்றகன்றுகந்தனனிதிகழ்மயூரவெற்பின்
மீண்டுவந்தயில்வேல்கைக்கொள்விமலனை வணங்கிப்போற்றி
யாண்டுசென்றாலுமென்னையீசனுநினையேபோற்றி
வேண்டியபெறுதியென்னினின்னருள் விளம்பற்பாற்றே.

இ-ள். (மயில்,) அவ்விடத்தில் நின்று நீங்கிக் குமாரசுவாமியினது அழகுவிளங்கும் மயூரகிரியில் திரும்பிவந்து, கூரியவேலைத் திருக்கரத்தில் ஏந்திய அவரை வணங்கித் துதித்து, எவ்விடத்திற்போனாலும் என்னை? சிவபெருமானும் தேவரீரைத் துதித்து வேண்டியவற்றைப் பெறுக என்று அருளிச்செய்யில், தேவரீருடைய கிருபை சொல்லும் பகுதியுடைத்தோ. எ-று.
யாண்டுச்சென்றாலும் எனற்பாலது, சந்தவின்பநோக்கி இயல்பாயிற்று. ()

என்னனுமுவப்பினெம்மானிருந்துழியான்மேற்செய்யு
மன்னியபணியாதென்றுமயில்சொலமுருகன்சொல்வான்
பொன்னகர்மயனைக்கூவிச்சிற்பநூல்புகன்றவாறே
தன்னிகரில்லாநம்பொற்றிருவுருச்சமைத்துப்பின்னர்.

இ-ள். என்று விண்ணப்பஞ்செய்தலும், மகிழ்ச்சியுடன் குமாரசுவாமி இருந்தபொழுதில் மயிலானது இனி அடியேன்செய்யும் நிலையான பணி என்னை என்று விண்ணப்பஞ்செய்ய, குமாரசுவாமி அருளிச்செய்வார்: விண்ணுலகத்தில் இருக்கின்ற மயனை அழைத்து, சிற்பசாத்திரஞ்சொன்னபடியே தனக்கு நிகரில்லாத நமது அழகிய திருவுருவத்தை உண்டாக்குவித்து, அதன்பின், எ-று. (௨௫)

பாகொடுகரும்புபோலும்பனிமொழிச்சத்திமாரைச்
சோகமில்பரிவாரத்தைத்தோற்றுவித்தீசன்கூறு
மாகமங்கரைகண்டுள்ளகுருவினையழைத்தன்னோனுக்
கோகையாம்படிபொன்பூமிகலைபலவுவந்துநல்கி.

இ-ள். பாலோடு கரும்பினைநிகர்த்த குளிர்மைபொருந்திய வசனங்களையுடைய சத்திகள் இருவரையும், சோர்வில்லாத பரிவாரதேவதைகளையும் உண்டாக்குவித்து, சிவபெருமான் அருளிச்செய்த ஆகமங்களைக் கரைகண்ட ஆசாரியனை அழைத்து, அவனுக்கு மகிழ்ச்சி உண்டாகும்படி பொன் பூமி வஸ்திரங்கள் பலவற்றை மகிழ்ந்து கொடுத்து, எ-று. (௨௬)

பரிவொடுமனையோன்றன்னால்விதிப்படிபதிட்டைசெய்தே
யிரவிதோய்கும்பமாதமிரலைநாட்கொடியையேற்றி
யரவிறட்டேர்நடத்திப்பூரணைமகத்திலான்ற
பொருவினீர்விழவுஞ்செய்துபோதிநம்பாலென்றான்.

இ-ள். அன்பினுடன் அவனைக்கொண்டு விதிப்படியே பிரதிட்டைசெய்வித்து, சூரியன் கும்பராசியைப்பொருந்தும் மாசிமாதத்தில் அச்சுவினி நட்சத்திரத்தில் துசாரோகணஞ்செய்வித்து, ஆயிலியநட்சத்திரத்தில் ரதோற்சவஞ்செய்வித்து, பூரணையில்வரும் மகநட்சத்திரத்தில் மாட்சிமைப்பட்ட நிகரில்லாத தீர்த்தோற்சவமும் செய்வித்துப் (பின்) நம்மாட்டு வருக என்று அருளிச்செய்தார். எ-று. (உஎ)

வேறு.

புத்தமுதந்தனையெடுத்துச்செவியினிடைப்புகட்டியதுபோலக்கூறு
மத்தனதுதிருவார்த்தையகங்குளிரக்கேட்டலுமேயன்புகூர்ந்து
சித்தமுறநினைந்துமயன்றனைக்கூவிச்சினகரமுஞ்சிருட்டித்தான்ற
சத்தியிருவோர்முருகன்பரிவாரதேவதையுஞ்சமைத்துப்போற்றி.

இ-ள். புதிதாகிய அமுதை எடுத்துக் காதிற்புகுத்தினாற்போல அருளிச்செய்த குமாரசுவாமியினது திருவாக்கை மனங்குளிரக்கேட்டபொழுதே அன்புமிக்கு, மனத்திற்பொருந்த நினைந்து, மயனை அழைத்து, கோயிலையும் செய்வித்து, மாட்சிமைப்பட்ட இருசத்திகளையும் குமாரசுவாமியையும் பரிவாரதேவதைகளையும் உண்டாக்குவித்துத் தோத்திரஞ்செய்து. எ-று.()

திதிவாரங்கரணநாளியோகமிவைநன்கிருப்பபதிட்டைசெய்தே
கதிர்வேலோன்மொழிந்தபடிநயவிழாக்குடமதியிற்கற்பித்தப்பா
லதிசேகவிறன்முருகனடிபணிந்துநின்வடிவுக்கலந்தேன்றூராய்
மதிவேணியணிபரமன்மைந்தவெனக்கருணைவிழிவைத்தான்மன்றே.

இ-ள். திதி வாரம் கரணம் நட்சத்திரம் யோகம் ஆகிய இவை நன்றாக இருப்பப் பிரதிட்டைசெய்வித்து, காந்திபொருந்திய வேற்படையினையுடைய குமாரசுவாமி அருளிச்செய்தபடி நன்மையாகிய திருவிழாவைக் கும்பமாதத்திற்செய்வித்து, அதன்பின், அதிசயமாகிய வலியினையுடைய குமாரசுவாமியினது பாதங்களை வணங்கி, (மயில்) இளம்பிறையைச் சடையில் அணிந்த சிவகுமாரரே, தேவரீருடைய திருவுருவைப்பெறுதற்கு ஆவல்கொண்டேன் தந்தருள்கவென்று விண்ணப்பஞ்செய்ய, (அவர்) கிருபாநோக்கஞ்செய்தார். எ-று. (உ௯)

ஓராறுசெங்கமலமுதயமதின்மலர்ந்தவனமுகங்களாறு
மீராறுசெங்கரமும்மியைந்துமணிமானத்திலேறிமஞ்ஞை
வாராருமுலைமடவாரரம்பையர்கணடம்புரியவானோர்வாழ்த்தச்
சீராருங்கந்தகிரியினிற்புகுந்துமுருகனடிசேர்ந்ததன்றே.

இ-ள். மயில், ஆறு செந்தாமரைமலர்கள் உதயகாலத்தில் விரிந்தாற்போன்ற திருமுகங்களாறும் பன்னிரண்டு சிவந்த திருக்கரங்களும் பொருந்தி, இரத்தினவிமானத்திலேறி, கச்சார்ந்த முலைகளையுடைய அரம்பையர்கள் நாட்டியஞ்செய்ய, தேவர்கள்புகழ, சிறப்புநிறைந்த கந்தமலையிற்போய்க் குமாரசுவாமியுடைய பாதங்களை அடைந்தது. எ-று. (௩0)

இப்பரிசுமஞ்ஞைமுத்தியெய்தியதென்றிருந்தவத்துமகதிநல்யா,
ழொப்பரியநாரதமா முனிவரனுக்குலகீன்றோ னுரைத்தானென்று,
பொய்ப்பிறவியறநோற்கும் புண்ணியமாமுனிவரர்க்குப்புகன்றானல்
ல, மைப்புயலின்கொழுந்தனையமால்கலையாம்வியாதன்றாள் வணங்கு
ஞ்சூதன்.

இ-ள். இத்தன்மையாக மயில் முத்தியை அடைந்ததென்று, பெருமை
பொருந்திய தவத்தையுடைய நல்ல மகதியாழைத்தாங்கிய உவமையில்
லாத நாரதமகாமுனிவருக்குப் பிரமா கூறினாரென்று, பொய்யாகிய பிறவி
கெடத் தவஞ்செய்யும் புண்ணியமுடைய பெருமையாகிய இருடிகளுக்கு
நல்ல கரிய முகிற்கொழுந்துபோன்ற விட்டுணுவினது கலையாகிய வியாசமு
னிவருடைய பாதங்களை வணங்கும் (மாணாக்கராகிய) சூதமுனிவர் கூறி
னார். எ-று. (௩௧)

மாதவத்துச்சவுனகராதியர்முனிவராதரவான்மகிழ்ந்துகேளா,
வாதுலன்பெற்றிடுநிதியி னகமகிழ்ந்துதவஞ்செயும்பே றடைந்தோ
மென்னாப், பூதரத்தின்மகிமையின்னும்புகலுகெனநாரதற்குப்பூவில்
வாழு, நாதன்மொழிந்திடும்படியேநவில்வனெனச்சூதமுனிநவிலலு
ற்றான்.

இ-ள். மகத்துவம்பொருந்திய தவத்தினையுடைய சவுனகர்முதலான
முனிவர்கள், அன்பினால் மகிழ்ந்துகேட்டு, தரித்திரன் தான்பெற்றதிரவியத்
தால் மனமகிழுமாறுபோல மனம் மகிழ்ந்து, தவத்தைச்செய்யும் பேற்றைப்
பெற்றோம் என்று கூறி, மயூரகிரியின் மேன்மையை இன்னும் அருளிச்
செய்க என்று விண்ணப்பஞ்செய்ய, நாரதமுனிவருக்குத் தாமரைப்பூவில்
வீற்றிருக்கும் பிரமா கூறியபடியே சொல்வேன் என்று சூதமுனிவர் சொ
ல்வாராயினார். எ-று. (௩௨)

தாமரைமென்மலர்ப்பொகுட்டிலினிதிருக்குஞ்சதுர்முகத்தோ
ய்சண்முகேசன், மாமயிலின்மலைமகிமையுரைத்தனைகேட்டுளத்தினி
ருண்மாற்றாநின்றேன், னேமவரைதானுமொவ்வாவம்மலையின்மகிமை
யின்னுமிசைப்பாயென்னப், பாமகடன்முலையானைபாய்புரிமுன்னூன்
மார்பன்பகர்வதானான்.

இ-ள். மென்மையாகிய தாமரைப்பூவினது பொகுட்டில் மகிழ்ச்சி
யுடன் வீற்றிருக்கும் நான்குமுகத்தையுடையவரே, குமாரசுவாமியினது
நீலநிறத்தையுடைய மயூரகிரியின்மேன்மையை அருளிச்செய்தீர்; (அதனைக்)
கேட்டு மனத்தின்கணுள்ள மயக்கத்தை நீக்காநின்றேன். மேருகிரியும் ஒவ்
வாத அந்த மலையின்மேன்மையை இன்னும் அருளிச்செய்க என்று (நா
ரதமுனிவர்) விண்ணப்பஞ்செய்ய, சரசுவதியின் முலையாகிய யானைபாய்
கின்ற முப்புரிநூலையணிந்த மார்பினையுடைய பிரமா சொல்வாராயினார்.
எ-று. (௩௩)

பூமாதுபாரமதுபொறுக்கலளாயச்சுதன்பாற்புகுந்துகூற
மாமாதுகேழ்வனுஞ்சந்திரமரபிற்பிறந்ததிறல்வசுதேவற்குத்
தேமாவின்குயிலனையதேவகிநற்றிருவயிற்றிற்றிகழ்ந்துமாலே
யாமாமென்றுலகுதொழக்கண்ணனெனவவதரித்துவளர்ந்துபின்னர்

இ-ள். பூமிதேவி பாரத்தைச் சகிக்கமுடியாதவளாய், (தந்நாயகராகிய) விட்டுணுவினிடத்திற்போய்ச்சொல்ல, இலக்குமிக்கு நாயகராகிய அவரும், சந்திரகுலத்தில் அவதரித்த வலியினையுடைய வசுதேவனுக்கு இனிய மாமரத்திலிருக்கும் குயிலையொத்த மொழியினையுடைய தேவகியின் நல்ல அழகிய வயிற்றிலே கர்ப்போற்பத்தியாய், விட்டுணுவேயாம் ஆம் என்று உலகம்வணங்க, கிருட்டிணனாக அவதாரஞ்செய்து வளர்ந்து, பின், எ-று. (௬௪)

கஞ்சனொடுசிசுபாலன்முதலானமாக்கடமைக்களத்திற்கொன்று
செஞ்சிலையேபொருவுநுதலுருக்குமணிமுதலாயதேவிமாரை
நெஞ்சுமகிழ்தரமணந்துபிரத்துய்ம்மன்முதலானநெடியவேலால் [ன்
வெஞ்சமரிற்பகைதொலைக்கும்வீரரையீன்றுயர்பிறைபோல்விளங்கியுற்ற

இ-ள். கஞ்சனோடு சிசுபாலன்முதலாகிய கிளைஞரை யுத்தகளத்தில் வதைத்து, செப்பமாகிய வில்லையொத்த நெற்றியினையுடைய உருக்குமணி முதலாகிய மனைவியர்களை மனமகிழப்புணர்ந்து, பிரத்துய்ம்மன் முதலான நெடிய வேற்படையினாற் கொடியபோரிற் பகைவரை அழிக்கும் வீரரைப் பெற்று, வளர்பிறைபோல விளங்கியிருந்தான். எ-று. (௬௫)

வேறு.

ஆங்கவனதற்குமுன்னதாமுகத்தினிலங்கைநன்னகரினுக்கரசாந்
தீங்குறுபுகழ்சேர்தசக்கிரிவன்றன்சீதையைச்சிறையிடையிருத்த
வேங்கியயோத்திக்கிறைதசரதன்றனீன்றருள்புதல்வராமிராம
னீங்கருந்திறலானிலக்குவனிருவரிலங்கைமன்னவனுடனேர்ந்தார்.

இ-ள். அந்தயுகத்திற்கு முன்னதாகிய திரேதயுகத்தில் அயோத்திநகருக்கு அரசனாகிய தசரதன்பெற்ற புத்திரர்களாகிய இராமன் நீங்காத வலியையுடைய இலட்சுமணன் என்னும் இருவரும், நல்ல இலங்கைநகருக்கு அரசனாகிய தீமைமிகுந்த புகழினையுடைய இராவணன் சீதையைச் சிறையில்வைக்க ஏங்கி, (அந்த) இராவணனோடு எதிர்த்தார்கள். எ-று. (௬௬)

அனையநாளவருக்கிரவிதன்மதலையங்கதன்சாம்பவனனுமனி
னையரேமுதலோர் படைத்துணையானா ரிவரொடுமிலங்கையையழித்
துப், புனைகுழன்மனையாடனொடுந்திரும்பியயோத்தியிற்புகுந்தன
ரந்த, மனமகிழ்திறல்சேர்படைத்தலைவர்களிற்சாம்பவனென்றிடும்
வலியோன்.

இ-ள். அந்தக்காலத்தில், அவர்களுக்குச் சுக்கிரீவன் அங்கதன் சாம்பவன் அனுமன் இவர் முதலானோர் படைத்துணைவரானார்கள். இவர்களோடு

(கூடிச்சென்று) இலங்கைநகரை அழித்து, அலங்கரித்த கூந்தலையுடைய மனைவியாகிய சீதையுடன்மீண்டு அயோத்திநகரை அடைந்தார்கள். அந்த மனமகிழ்கின்ற வலிமைபொருந்திய படைத்தலைவர்களிற் சாம்பவன் என்னும் வலிமையையுடையான். எ-று. (கஎ)

துவாபரயுகத்திலோர்வழியணித்தாய்த்துன்னினன்பிலத்தினிலந்த, நிவாதமென்றலத்திற் சிமந்தகமணிக்காய்ப் புகுந்துநேர்ந்தவனொடுபிணங்கிக், கவான்றிரள்வாழைத் தண்டினைநிகருங் கன்னியைமணியொடுங்கவர்ந்தே, யவாவுடனனையவொழுகெழிற்சாம்பவதியினையன்புடன்வேட்டான்.

இ-ள். துவாபரயுகத்தில் ஒருவழியாற் சமீபமாய்ப் பாதலத்தை அடைந்தான். அப்பாதலத்தில் (அந்தக்கிருட்டிணனானவன்) சிமந்தகமணிக்காகப் போய், அச்சாம்பவனோடு எதிர்ந்து, (பின் யுத்தமின்றி) இணங்கி, தொடைகள் திரண்ட வாழைத்தண்டினைப்போலுங் கன்னிகையை அம் மணியோடு விருப்பினோற்கவர்ந்து, அந்த ஒழுகுகின்ற அழகினையுடைய சாம்பவதி என்பவளை அன்போடு விவாகஞ்செய்தான். எ-று. மூப்பத்தாறுஞ்செய்யுளில் ஆங்கவன் என்னும் எழுவாய், இச்செய்யுளில் புகுந்து நேர்ந்து இணங்கிக் கவர்ந்து வேட்டான் என்பனவற்றோடுகூட்டி முடிக்கப்பட்டது. சிமந்தகமணி - இது செந்நிறமுடையமணி. (கஅ)

கனிந்தழகொழுகுமிளமுலையவட்குக்காதலனிலாமையாற்கருதி
மனந்தளர்ந்தரியபலந்தருவிரதம்வண்புனலாடனற்றான
மனந்தநற்கோயிற்றொழுநிடல்வேள்வியாற்றியுமகவிலாமையினே
லினைந்துபோயுபமன்னியுவெனவுலகமேத்திடுமிருடிபாலடைந்தான்

இ-ள். கனிந்து அழகு ஒழுகுகின்ற இளமையாகிய முலையினையுடைய அச்சாம்பவதிக்குப்புதல்வன் இல்லாமையால் சிந்தித்து மனம்வருந்தி, அருமையாகிய பலங்களைக்கொடுக்கும் விரதம், (பயனைத்) தரும் தீர்த்தமாடல், அனந்த சற்பாத்திரதானம், நல்ல சிவாலயசேவை, யாகங்கள் ஆகிய இவற்றைச்செய்தும் புத்திரன் இல்லாமையினால் வருந்தி, உபமன்னியு என்று உலகம் துதிக்கும் முனிவர்மாட்டுப்போய்ச்சேர்ந்தான். எ-று. (கக)

வெகுளிவேரரிந்தவிழுத்தவவெனதுவிழுமநீதுடைத்தியென்றிரந்து
முகமனோடுரைப்பநன்றெனமகிழ்ந்துமுழுதுலகுறுதுயரகற்றி
மகிழ்தரப்புரியுமாதவநினக்கும்வருந்துயருண்டுகொன்மதிக்கிற்
புகலுலகுயிர்கின்புதல்வரேநினக்கோர்புதல்வனின்றெனப்பதென்புகலாய்.

இ-ள். கோபத்தை வேரோடுகளைந்த சிறந்த தவத்தையுடையவரே, எனது வருத்தத்தைத் தேவரீர் நீக்கியருளுக என்று குறையிரந்து, உபசார வசனத்தோடு சொல்ல, (அவர்) நன்று என்று சந்தோஷப்பட்டு, உலகம் முழுதும் பொருந்துந் துன்பத்தைநீக்கி மகிழும்படிசெய்யுங் கிருட்டிணனே, உனக்கும் வருகின்ற துயரம் உண்டோ! சிந்திக்கில், சொல்லப்படும் உலகத்

திலுள்ள உயிர்கள் நின் புதல்வர்களே (அங்ஙனமாக,) உனக்கு ஒரு புதல்வன் இல்லையென்று சொல்லுவது என்னை சொல்லுதி. எ-று. (சo)

பிதிர்சுணங்கணிந்தவிளமுலைத்துவர்வாய்ப்பிறைநுதற்கரும்பெனுஞ்சாம்ப
வதியினாலடைந்தாய்வழங்குவன்மிகவும்வளம்படுபாண்டிநன்னாட்டி
கதிதருந்தலங்கள்பற்பலவவைவிற்கருதினுங்கருதியவெல்லா [ற்
முதவிடுமயூரகிரியெனவொன்றுங்குற்றிடுமறைமுடிவுணர்ந்தோய்.

இ-ள். வேதசிரசை (ஐயந்திரிபற) அறிந்தவனே, பிதிர்ந்த தேமலைப் பொருந்திய இளமையாகிய முலையினையும், பவளம்போலும் வாயினையும், பிறைபோலும் நெற்றியையும் உடைய கரும்புபோலும் சாம்பவதி என்பவளால் நீ என்மாட்டுவந்தாய், (அதற்கு ஒருபாயஞ்) சொல்வேன்: மிக வளங்களுண்டாகும் நல்ல பாண்டிநாட்டில் மோக்ஷத்தைத்தரும் க்ஷேத்திரங்கள் பற்பல உள்ளன. அவைகளில் (எவற்றை) நினைத்தாலும் நினைத்த அவற்றையெல்லாங்கொடுக்கும் மயூரகிரியென ஒன்று இருக்கும். எ-று. ஆங்கு-அசை. இவற்றையுடையகரும்பு இல்பொருளுவமை. (சக)

அத்தலமத்னிற்கிரிச்சரஞ்சாந்திராயணமிருந்துளோராளுப், பத்
தியான்மறையோரதிதிகட்கன்னம்பகிர்ந்துளோர்நிதிமுதலீந்தோர்,
நித்தலுமலருநந்தனவனங்களிருமித்தோர்திருமடஞ்செய்தோ, ரித்
தலமதனினெடிதுநாள்வாழ்ந்தாண்டிருந்துமேற்குகன்பதமடைவார்

இ-ள். அந்த க்ஷேத்திரத்தில் கிரிச்சரம், சாந்திராயணம் என்னும் விரதங்களை அநுட்டித்தோர், குறையாத அன்பினால் பிராமணருக்கும் அதிதிகளுக்கும் அன்னதானஞ் செய்தோர், திரவியம் முதலியவற்றைக்கொடுத்தோர், எப்பொழுதும் மலருகின்ற திருநந்தனவனங்களை உண்டாக்கினோர், திருமடம் இயற்றினோர் ஆகிய இவர்கள், இவ்வுலகத்தில் நெடுங்காலம் வாழ்ந்து (பலபோகங்களை) அநுபவித்திருந்து, மறுமையிற் கந்தலோகத்தை அடைவார்கள். எ-று. (சஉ)

கண்ணவவ்வரையினெவற்றிற்குமுயர்ந்தகார்த்திகைவெள்ளியின்விரதம், விண்ணவர்புகழுஞ்சட்டியின்விரதமேம்படுமிந்தமூன்றனையும், பண்ணமர்மொழியாளுடனுநீஇத்தனிவேற்பண்ணவன்றன்னையும்பரவிற், பெண்ணமுதினுக்கும்பாலகன்றோன்றுமேனையநினைத்தவும்பெறுவாய்.

இ-ள். கிருட்டிணனே, அம்மயூரகிரியில் விரதங்கள் எல்லாவற்றிற்கு மேலான கார்த்திகை (விரதம்,) சுக்கிரவாரவிரதம், தேவர்புகழுகின்ற சட்டிவிரதம் ஆகிய மேம்பட்ட இந்த மூன்றையும், பண்போன்ற சொல்லினையுடைய சாம்பவதியுடனே அநுட்டித்து, ஒப்பற்ற வேலினையுடைய சுப்பிரமணியப்பெருமானையும் துதிக்கில், பெண்களுக்குள் அமிர்தம்போன்ற சாம்பவதிக்கும் புத்திரன் அவதரிப்பன். நீ நினைத்த ஏனையவற்றையும் அடைவாய். எ-று. பண்ணமர்மொழி என்பதற்குப் பண்விரும்புஞ்சொல்லெனினும்பொருந்தும். (சங)

அரக்கராமுளரிக்கொருபெரும்பனியாயண்ணலேயம்மலையிடை
நீ, பொருக்கெனச்சுடர்செய் தொடிக்கையாளுடனே போதுகென்ற
னுமுளமகிழ்ந்து, திருக்கிளர்முனிவன்றனைவிடைகொண்டுதிரும்பி
யவ்வரையினிலடைந்தான், வரைக்குடையெடுத்துமழைதடுத்தாயர்
மனையிடைவளர்ந்தகோபாலன்.

இ-ள். இராக்கதராகிய தாமரைகளுக்கு ஒருபெரிய பனியாகிய பெரு
மையுடையானே, அம்மயூரகிரியில் நீ விரைவாக ஒளியைச்செய்கின்ற
வளையலை அணிந்த கையினையுடையாளோடு போகுக என்று கூறலும்,
(கோவர்த்தனமென்னும்) மலையாகிய குடையைப்பிடித்துக் (கல்) மழை
யைத்தடுத்து இடையர்வீட்டில்வளர்ந்த கிருட்டிணன், மனம்மகிழ்ந்து,
(அருட்) செல்வம் மிக்க உபமன்னியுமுனிவரிடத்து விடைபெற்று, மீண்டு
அம்மலையை அடைந்தான். எ-று. (சச)

சரவணம்படிந்துமுருகவேளுவந்தசட்டிகார்த்திகைபுகர்வார,
விரதமதிருந்துதினந்தொறுமயூரவெற்பினைச்சூழ்ந்துமேற்போந்து,
பொருவருமிமையோர்முடியுழுகழற்காற்புனிதனதிணையடிபோற்றி
த், திருவொடுமொருமண்டலமிவ்வாறிருப்பச் செப்புமவ்வணங்கனு
ள்வயிற்றில்.

இ-ள். சரவணப்பொய்கையில் ஸ்நானஞ்செய்து, குமாரசுவாமிவிரும்
பிய சட்டி, கார்த்திகை, சுக்கிரவாரவிரதங்களை அநுட்டித்து, நாடோறும்
மயூரகிரியைப் பிரதக்ஷிணஞ்செய்து, பின் வந்து, நிகரில்லாத தேவர்களு
டைய கிரீடங்கள் உழுகின்ற வீரக்கழலையணிந்த பாதங்களையுடைய குமார
சுவாமியின் உபயபாதங்களைத்துதித்து, சாம்பவதியுடன் ஒருமண்டலம்
வரைக்கும் இப்படி இருக்க, சொல்லப்படும் அந்த இலக்குமிபோல்வாளு
டைய வயிற்றில், எ-று. மேற்போந்து என்பதற்கு மேலே ஏறி எனினும்
பொருந்தும். (சரு)

வேறு.

சாம்பனென்றுலகமேத்துந்தனயன்வந்துதித்தல்செய்தான்
றேம்பொழிகடப்பம்பைந்தார்ச்செல்வனேதெய்வமென்னு
வாம்பரிவோடும்போற்றியம்மகவுச்சிமோந்து
காம்புறழ்தோளினாளுங்கணவனுமகிழ்ச்சிகூர்ந்தார்.

இ-ள். சாம்பன் என்று உலகம்புகழும் புதல்வன்வந்தவதரித்தான்.
மூங்கில்போன்ற தோளையுடைய சாம்பவதியும் நாயகனாகிய கிருட்டிணனும்,
தேன்பொழிகின்ற பசுமையாகிய கடப்பமாலையை அணிந்த குமாரசுவாமி
யே தெய்வம் என்று பேரன்போடும் துதித்து, அப்புதல்வனுடைய உச்சி
யைமோந்து, மகிழ்ச்சிமிகுந்து, எ-று. (சசு)

உட்டெளிமறையோராதிபின்னவரீறுயோங்கு
மட்டிலாக்குடியாங்காங்கேவருவித்துமனையுமாக்கி
யெட்டெனுஞ்செல்வமீந்தவ்விடத்தினிலளகைபோலப்
பட்டணமாக்கித்தான்வாழ்துவரையம்பதியிற்போனான்.

இ-ள். மனந்தெளிந்த பிராமணர்முதல் வேளாளர் ஈறாக உயர்ந்த அளவில்லாதகுடிகளை அந்தந்த இடங்களில் நின்று அழைப்பித்து, (அக்குடிகளுக்கு) வீடுகளையும் உண்டாக்கி, அட்ட ஐசுவரியங்களையுங்கொடுத்து, அவ்விடத்தில் அளகைநகர்போலப் பட்டணம் ஒன்றை இயற்றி, தான் வாழுகின்ற துவாரகாபுரிக்குப்போனான். எ-று. (௪எ)

மருவுமிவ்விரதப்பேற்றின்மகிமையான்வலியின்மிக்க
முரனெனுமசுரன்றன்னைமுருக்கிமேயமுராரியென்று
பகர்வுறவைகினனிப்பட்டணங்கிருதந்தன்னி
லிருவினைச்சிமிழ்ப்புநீக்குமயூரமாபுரமென்பாரே.

இ-ள். பொருந்திய இவ்விரதங்களை அநுட்டித்துப் பெற்றபேற்றின் விசேடத்தினால் வலிமையில்மேற்பட்ட முரன் என்கின்ற அசுரனை அழித்து முராரி என்று சொல்லும்படி (கிருட்டிணன்) இருந்தான். இந்த நகரைக் கிருதயுகத்தில் நல்வினை தீவினை என்னும் இரண்டின் தொடர்ச்சியைக்கெடுக்கும் மயூரமாபுரம் என்பர். எ-று. (௪அ)

துகளறுதிரேதந்தானச்சுவத்தகானனமாமென்பர்
புகழ்துவாபரத்திற்கண்ணபுரமெனமொழியமேவு
மிகழ்வுறுகலியின்மேலாமயூரநற்கிரியாமென்று
பகர்வுறவைகுமென்றுபகர்ந்தனன்பதுமத்தண்ணல்.

இ-ள். குற்றமில்லாத திரேதயுகத்தில் அச்சுவத்தகானனம் என்பர். புகழையுடைய துவாபரயுகத்தில் (அது) கண்ணபுரம் என்று சொல்லும்படியிருக்கும். இகழ்ச்சிமிக்க கலியுகத்தில் மேலாகிய நல்ல மயூரகிரி என்று சொல்லும்படி இருக்கும் என்று பிரமா சொன்னார். எ-று. (௪௯)

மயூரம் முத்திபெற்றசருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் உ௪௯.

---

ஐந்தாவது

## கார்த்திகைவிரதமுரைத்தசருக்கம்.

முருகவேளினிதுவந்திடுவிரதமூன்றென்ன
வுரைசெய்தாயவைநோற்றிடும்விதியினையுரையென்
றரியவேழிசைநாரதன்கேட்டலுமடன்பால்
விரைசெய்நாண்மலருறைபவனிங்கிவைவிளம்பும்.

இ-ள். குமாரசுவாமி நன்றாகவிரும்பும் விரதங்கள் மூன்றென்று அருளிச்செய்தீர். அவற்றை அநுட்டிக்கும் விதியை அருளிச்செய்க என்று அருமையாகிய எழிசையினையுடைய நாரதமுனிவர்வினவலும், வாசனைபொருந்திய அன்றலர்ந்த தாமரையாசனத்தில் வீற்றிருக்கும் பிரமா அன்பினால் இவற்றைச்சொல்வார். எ-று. (௧)

ஒளிகொள்கார்த்திகைவிரதமுன்னுரைக்குவநோற்றோ
ரளியுளோர்களாயிம்மையிற்பெருந்திருவார்ந்து
களியடைந்துநன்றிருந்துபின்கந்தமார்நறுந்தேன்
றுளியுறைத்திடுகடம்பன்வான்றுணைப்பதம்புகுவார்.

இ-ள். ஒளியைக்கொண்ட கார்த்திகைவிரதத்தை முன்சொல்வோம். அன்பையுடையோர்களாய் (அதனை) அநுட்டித்தோர் இம்மையிற் பெரிய செல்வங்களை அநுபவித்து, சந்தோஷத்தைப்பொருந்தி நன்றாக இருந்து, மறுமையில் வாசனைநிறைந்த நறுமையாகிய தேன்துளி துளிக்கும் கடப்ப மாலையையணியும் சுப்பிரமணியப்பெருமானுடைய பெருமையாகிய இரு பாதங்களை அடைவார். எ-று. (௨)

ஆறுமாமுகனருந்திடமுலையமுதளித்தோர்
நாறுபூங்குழற்கார்த்திகைநாரியரவர்க்கு
நீறுபூசியநின்மலனளித்தநல்வரத்தான்
மாறில்கார்த்திகையுத்தமவிரதமாய்வதியும்.

இ-ள். ஆறு திருமுகங்களையுடைய குமாரசுவாமி உண்ணும்படி முலைப் பாலைக்கொடுத்த நறுமணங்கமழும் பூவைமுடித்த கூந்தலையுடைய கார்த்தி கைப்பெண்களுக்கு, விபூதியைத்தரித்த சிவபெருமான்கொடுத்த நல்ல வரத்தினால் நிகரில்லாத கார்த்திகைவிரதம் விசிட்டவிரதமாகவிருக்கும். எ-று. (௩)

ஐந்துமூர்த்தியின்மேலதாஞ்சதாசிவமாகும்
கந்தனிச்சைநற்றொழினிறைசத்தியாய்க்கழற
வந்தயானையும்வள்ளியுமுவந்ததவ்விரத
மந்தநோன்பினையிருந்துளோர்க்கென்னபேறரிதே.

இ-ள். பஞ்சமூர்த்திகளின் மேலான சதாசிவமூர்த்தியாகிய குமார சுவாமியினது இச்சாசத்தியும் நல்ல கிரியாசத்தியுமாய்ச் சொல்லும்படிதோ ன்றிய தெய்வயானையம்மையாரும் வள்ளிநாயகியாரும் அநுட்டிக்கப்பெற் றது அவ்விரதம். அந்தவிரதத்தை அநுட்டித்தவர்களுக்கு என்னபேறரி யது. எ-று. (௪)

எண்ணிலாதமர்நோன்பினுளுத்தமமினைய
புண்ணியந்தருங்கார்த்திகைவிரதமாம்புகலி
னண்ணுமன்பினாற்கேட்டவர்பாவம்போய்நலம்பெற்
றண்ணல்வேலவனடிமிசையகன்றிடாதுறைவார்.

இ-ள். அளவின்றி இருக்கும் விரதங்களுள் இந்தப் புண்ணியத்தைத் தரும் கார்த்திகைவிரதம் உத்தமமாம். (இவ்விரதமகிமையைச்) சொல் லில் பொருந்திய அன்பினாற் கேட்டவர்கள், பாவநீங்கி நன்மையைப்பெ ற்று, பெருமையினையுடைய குமாரசுவாமியின் பாதத்திற் பிரியாதிருப்பர். எ-று. விரதமாம் என்பதில் ஆம் என்பது உத்தமம் என்பதனோடு கூட்டிப் பொருளுரைக்கப்பட்டது. (௫)

உலகமுய்பொருட்டுரைக்குவன்பரத்தினையுணர்ந்து
புலனடக்கியமுனிவகேளெனவயன்புகல்வா
னலகில்வெற்புளவவற்றினிற்செய்தனன்றவற்றுட்
டலமோராறுநற்றணிகையேமுதலநன்றாமால்.

இ-ள். உலகம் ஈடேறும்படி சொல்லுவேன், பரம்பொருளையறிந்து ஐம்புலனையடக்கிய நாரதமுனிவனே கேள் என்று பிரமா சொல்வார். (குமாரசுவாமிக்கு) அளவிறந்த மலைகளுள்ளன. அவற்றிலிருந்து (இவ்விரதத்தை) அநுட்டித்தல் நன்று. அவற்றுள்ளும் (சீரலைவாய்முதலான) ஆறு க்ஷேத்திரங்களும், செருத்தணிமுதலாகிய மலைகளும் நன்றாம். எ-று. (சு)

குன்றமாகுமவ்வாறினுட்கோதினற்பலன்றா
னொன்றுகோடியாமயூரமாகிரியினிலுளூற்றி
னன்றியெங்ஙனங்குமரவேளமர்ந்தனனங்கு
நன்றுதன்மனையாயினுஞ்செய்வதுநலமால்.

இ-ள். மலைகளாகிய அந்த ஆறுக்ஷேத்திரங்களிலும் (கார்த்திகைவிரதம் அநுட்டித்தலால் வரும்) குற்றமில்லாத நல்லபலன் ஒன்று, மயூரகிரியில் அநுட்டிக்கில் கோடியாகும். அஃதன்றி எவ்விடத்திற் குமாரசுவாமி எழுந்தருளியிருந்தாரோ அவ்விடத்தில் (அநுட்டித்தல்) நன்றாம். தன் வீடாயினும் அதனை அநுட்டிப்பது நன்றாம். எ-று. (எ)

திடங்கொள்கார்த்திகைத்திங்களிற்கார்த்திகைத்தினத்திற்
றொடங்கவேண்டுமந்நோன்பினைத்தோகையங்கிரியி
னிடங்கொளாழியினிரவிவந்தெழுமுனமெழுந்து
தடங்கொள்வார்புனற்சரவணதடந்தனிற்படிந்து.

இ-ள். அந்தக் கார்த்திகைவிரதத்தை நிச்சயமான கார்த்திகைமாசத்துக் கார்த்திகைநட்சத்திரத்தில் மயூரகிரியில் ஆரம்பிக்கவேண்டும். (எங்ஙனமெனில்,) விசாலமாகிய கடலிற் சூரியன்வந்துதித்தற்குமுன் எழுந்து பெருமைபொருந்திய மிக்க சலத்தையுடைய சரவணப்பொய்கையில் ஸ்நானஞ்செய்து, எ-று. (அ)

வேறு.

சத்தியரிருவரோடுஞ்சண்முகத்தேவையுன்னி
நித்தியகருமமுற்றிக்காமத்தினினைவைநீத்துச்
சுத்தவத்திரம்விபூதிகண்டிகைதுலங்கமெய்யிற்
பத்தியின்வைகியோராறெழுத்தையும்பண்பாயோதி.

இ-ள். இருசத்திகளுடனே குமாரசுவாமியைத்தியானித்து, நித்தியகருமங்களைமுடித்து, காமவிச்சையைத்தவிர்த்து, சுத்தமாகிய வஸ்திரம் விபூதி உருத்திராட்சம் ஆகிய இவை சரீரத்தில் விளங்கப் பத்தியுடன் இருந்து சடாட்சரத்தையும் விதிப்படி உச்சரித்து, எ-று. (கூ)

ஊணுடனுறக்கமின்றிப்பகற்பொழுதொழித்திராவிற்
பூணுறுநியமத்தோடுஞ்சங்கற்பம்புகன்றியார்க்குங்
காணும்விக்கினங்கடீர்க்குங்கடவுளையடியாருள்ளக்
கோணறஞானநல்குங்குழகனையருச்சித்தேத்தி.

இ-ள். போசனத்தோடு நித்திரை இல்லாமற் பகற்காலத்தைக்கழித்து, இராக்காலத்தில், பூண்ட நியமங்களோடும் சங்கற்பத்தைச்செய்து, எவர்களுக்கும் உண்டாகின்ற இடையூறுகளை நீக்கும் விநாயகக்கடவுளை, அடியாருடைய மனத்திலுள்ள மாறுபாடுநீங்க ஞானத்தைக்கொடுக்கும் பேரழகரை, பூசித்துத் துதித்து, எ-று. (௧௦)

திகழ்தருதருப்பைதோய்ந்தகவியத்தாற்சுத்திசெய்து
தகைபெறுகும்பத்தேனுஞ்சமைதிருவுருவினேனு
மகமகிழ்தரவேபூசையாற்றலப்பூசையாற்றும்
வகையைநூல்சொன்னவாறேமுறையினால்வழங்கலுற்றேன்.

இ-ள். விளங்குகின்ற தருப்பைசேர்ந்த பஞ்சகௌவியத்தாற் சுத்திசெய்து, தகைமைபொருந்திய கும்பத்திலாயினும் (விதிப்படி) உண்டாக்கப்பட்ட விம்பத்திலாயினும் மனம் மகிழும்படி பூசைசெய்க, அப் பூசனைசெய்யும் வகைமையை நூல்கள் சொன்னபடியே முறைமையினாற் சொல்வேனாயினேன். எ-று. (௧௧)

வாலசூரியர்கள்கோடியொளிர்வபோல்வடிவுங்கஞ்சங்
காலமேமலர்ந்ததென்னக்கவினியமுகங்களாறுஞ்
சீலமாங்கருணைவாரிதிகழ்தருவிழிமூவாறுங்
கோலமார்கரமீராறுங்குழையும்பொன்மௌலிப்பொற்பும்.

இ-ள். கோடி இளஞ்சூரியர்கள்பிரகாசிக்குமாறுபோலப் (பிரகாசிக்கும்) வடிவமும், செந்தாமரை உதயகாலத்தில் அலர்ந்தாற்போல அழகுவிளங்கும் ஆறுமுகங்களும், ஒழுங்காகிய கிருபைப்பெருக்குவிளங்குகின்ற திருக்கண்கள்பதினெட்டும், அழகுநிறைந்த திருக்கரம் பன்னிரண்டும், குண்டலங்களும், பொன்னாலாகிய கிரீடத்தின் அழகும், எ-று. (௧௨)

முருகுதோய்நறவுகாலுமுல்லைமெல்லரும்பைவாங்கி
நிரல்படவைத்திட்டன்னநிலாத்தவழெயிறுந்தூய
திருவுறுமென்பட்டாடைதிசையெலாம்விளங்கச்சாத்தும்
பொருவருநுசுப்புமென்றும்புரையிலாச்சாந்தநெஞ்சும்.

இ-ள். நறும்மணம்பொருந்திய தேனைப்பிலிற்றும் முல்லையினது மென்மையாகிய அரும்பையெடுத்து ஒழுங்குபெறவைத்தாற்போன்ற ஒளிவீசும் பற்களும், சுத்தமான அழகையுடைய மென்மையாகிய பட்டுவஸ்திரத்தைத் திக்குகளெல்லாம் விளங்கும்படி அணியும் நிகரில்லாத இடையும், என்றைக்கும் ஒப்பில்லாத சந்தனக்குழம்பையணிந்த திருமார்பும், எ-று. (௧௩)

வேல்கதையபயமம்புவாள்கொடிவிளம்புமாறு
மால்கொளுநம்வலக்கைவாமம்வச்சிரம்முளரிப்போது
சூலம்வில்வரதம்மிக்கசேடகந்துலங்குமாறு
மோலிடுசதங்கைதண்டையொளிர்தருபாதப்போதும்.

இ-ள். வேல், தண்டு, அபயம், அம்பு, வாள், கொடி என்று சொல்லப்படும் ஆறையும் பெருமையுடன்தாங்கும் வலத்திருக்கரங்கள் (ஆறும்,) குலிசம், தாமரைப்பூ, சூலம், வில், வரதம், மேலானபரிசை ஆகிய இவை விளங்கும் இடத்திருக்கரங்கள் (ஆறும்,) ஒலிக்கின்ற சதங்கையும் தண்டையும் பிரகாசிக்கின்ற பாததாமரைகளும், எ-று. வாமம் ஆறும் எனக் கூட்டிப் பொருளுரைக்கப்பட்டது. (கசு)

சொக்கமாம்பொன்னுமிலயந்தமணியினுற்றுலங்கச்செய்த
தக்கநற்கலனுஞ்செய்யதாமரைவிளங்குமார்புந்
தெக்கணங்குறவர்மாதும்வாமத்திற்றெய்வமாதும்
பக்கம்வாய்ந்தொளிர்வுமாகிப்பாவித்தாவாகித்தப்பால்.

இ-ள். கலப்பில்லாத பொன்னினுலும், இயைந்த இரத்தினத்தினுலும், பிரகாசிக்கும்படிசெய்யப்பட்ட தகுந்த நல்ல ஆபரணமும், செந்தாமரை மலரும், விளங்குகின்ற திருமார்பும், வலப்பக்கத்தில் வள்ளிநாயகியாரும், இடப்பக்கத்தில் தெய்வநாயகியாரும் பொருந்தி விளங்குதலுமாகப்பாவனை பண்ணி, ஆவாகனஞ்செய்து, அதன்பின், எ-று. பக்கம் என்பது - தெக்கணம் வாமம் என்னும் இரண்டோடும்கூட்டிப் பொருளுரைக்கப்பட்டது.()

அரியின்மென்றவிசுநல்கிப்பாத்தியமளித்துநீரான்
மருவுமாசமனநல்கியருக்கியம்வழங்கிப்பின்னர்த்
தருமமுதைந்துபஞ்சகவியநற்கனிதேன்செய்ய
விரைசெய்நீர்புட்பந்தோய்நீர்வியனனீர்விதியாலாட்டி.

இ-ள். மிருதுவான சிங்காசனங்கொடுத்து, (அதன்பின்) நீரினுற்பாத்தியங்கொடுத்து, (அதன்பின்) பொருந்திய ஆசமனங்கொடுத்து, (அதன்பின்) அர்க்கியங்கொடுத்து, அதன்பின் சேர்க்கப்பட்ட பஞ்சாமிர்தம், பஞ்சகௌவியம், நல்லபழம், தேன், செப்பமான பனிநீர், புட்பமிட்ட நீர், சிறந்த நல்லநீர் ஆகிய இவற்றை விதிப்படி அபிஷேகஞ்செய்து, எ-று. (கசு)

விலைவரம்பறியாநுண்ணூற்பட்டுடைவிளங்கச்சாத்தி
நலமுறுபூணூலீந்துநாலுதிக்கினும்வில்வீசி
நிலவுறுபொருளையெல்லாந்தன்மயஞ்செய்புநீரார்
குலமணிப்பூணும்வாசக்குளிர்ந்தசந்தாதியீந்து.

இ-ள். விலையினது எல்லை அறிதல்கூடாத நுண்ணிய நூலால் ஆகிய பட்டுவஸ்திரத்தை விளங்கும்படிசாத்தி, நன்மைமிக்க உபவீதத்தைச்சே

ர்த்தி, நான்குதிசைகளினும் ஒளிவீசிவிளங்கும் பொருள்களையெல்லாந் தன்மயமாக்குந் தன்மைபொருந்திய உயர்ந்த இரத்தினுபரணத்தையும், வாசனைபொருந்திய குளிர்ந்த சந்தனமுதலியவற்றையும் சேர்த்தி, எ-று. (௧எ)

பழுதிலக்கதையுநல்கிப்பற்பலகாதம்வீசும்
வழியதுத்தெரியல்சூட்டிவளர்துணைச்சரணத்தொட்டுச்
செழுமணியிமைக்குமௌலிச்சிரமட்டும்மனுவையோதி
வழுவறுவங்கபூசையாகமவகையாற்செய்து.

இ-ள். குற்றமில்லாத அட்சதையுங்கொடுத்து, பற்பலகாதம்வரைக்கும் (நறுமணம்)வீசுகின்ற தேன்சொரியும் மாலையைச்சூட்டி, (அழகு) வளர்கின்ற உபயபாதம்முதல் செழுமையாகிய இரத்தினம்விளங்குங் கிரீடத்தையணிந்த சிரம்வரைக்கும் மந்திரத்தைச்சொல்லி, குற்றம் அற அங்கபூசையை ஆகமவிதிப்படிசெய்து, எ-று. (௧அ)

கந்தசண்முகமயூரவாகனகார்த்திகேய
சுந்தரவுமையாண்மைந்தசுப்பிரமணியவள்ளி
யிந்திரகுமரிகொண்கவென்பனமுதலீரெட்டுச்
சந்தமார்நாமமோதியருச்சனைசாரச்செய்து.

இ-ள். ஆறுருவங்களும் ஒன்றாய்ச்சேர்க்கப்பட்டவரே, ஆறுமுகங்களையுடையவரே, மயில்வாகனத்தையுடையவரே, கார்த்திகையின் புதல்வரே, அழகினையுடைய பார்ப்பதியாரது குமாரரே, பதித்துவம் நிலைபெற்றவரே, வள்ளிநாயகியார் தெய்வநாயகியார் என்னும் இருசத்திகளுக்கு நாயகரே என்பனவற்றை முதலாகவுள்ள பதினாறு அழகுநிறைந்த திருநாமங்களைச்சொல்லி அருச்சனையைப் பொருந்தச்செய்து, எ-று. கந்த என்பதற்குச் சத்துருக்களை ஒடும்படிசெய்பவர் என்பது மொருபொருள். (௧௯)

அதனின்மேற்பீடந்தன்னிற்கார்த்திகையறுவர்தம்மை
யிதமுடனினைத்தாவாகித்தாறிடத்திருத்திப்பூசித்
துதவிசெய்மயிலைநானாவன்னமுமொன்னாரஞ்சுங்
கதழ்வும்வெவ்வரவைவாயிற்கவ்வும்வீரமுமாயெண்ணி.

இ-ள். அதன்பின், பீடத்தில் கார்த்திகைப்பெண்கள் அறுவரை அன்போடுதியானித்து, ஆவாகனம்செய்து, ஆறிடத்தில் இருத்திப் பூசைபுரிந்து, (தன்னை நினைத்தவர்க்கு) உதவியைச்செய்கின்ற மயிலைப் பற்பலநிறமும், பகைவரஞ்சும்வேகமும், கொடியபாம்பை வாயிற்கௌவுகின்ற வீரமும் உடையதாகத் தியானித்து, எ-று. (௨௦)

பொருந்தவாவாகனஞ்செய்தருச்சித்துப்புகலுமோரா
யிரந்திருப்பெயரையோதியிரமோடிளகியுள்ளம்
வரந்தரும்படியாய்க்காலவனசமாமலராலர்ச்சித்
துரந்திகழ்தூபதீபமுதலியாறிரதத்தோடும்.

இ-ள். இசையும்படி ஆவாகனஞ்செய்து பூசித்து, சொல்லுகின்ற ஆயிரந் திருநாமங்களையோதி, அன்போடு மனமகிழ்ந்து, (நினைத்த) வரங்களைத் தரும்படியாக அன்றலர்ந்த தாமரைமலரால் அருச்சனைசெய்து, ஞானம் விளங்குந் தூபதீபங்களைக்கொடுத்து, ஆறுசுவையோடும், எ-று. (௨௧)

ஆரமுதுதவிக்கற்பூராதியால்வாசஞ்சார்ந்த
நீர்கொடுத்தழகுவாய்ந்தகைதையின்மலரைநேராய்ச்
சாரும்வெள்ளிலைபாகிந்துசராசரவுயிர்கட்கெல்லாங்
காரணப்பொருளாஞானக்கடவுளைவலமாய்வந்து.

இ-ள். பொருந்திய அன்னத்தைநிவேதித்து, கருப்பூரமுதலியவற்றால் வாசனைபொருந்திய சலத்தைக்கொடுத்து, அழகுவாய்ந்த தாழம்பூவை நிகராகிப்பொருந்தும் வெற்றிலைபாக்கை உதவி, சரம் அசரம் ஆகிய உயிர்களுக்கெல்லாங் காரணப்பொருளாகிய ஞானத்தையுடைய சுப்பிரமணியப்பெருமானைப் பிரதக்ஷிணமாய்வந்து, எ-று. (௨௨)

வேறு.

சங்கரனகங்குளிரவந்ததிருமைந்தநமசண்முகநம
வெங்கயமுகாந்தகசடாட்சரகுமாரநமவெண்டிரையுலாங்
கங்கைதருமைந்தநமநான்மறையுமாலுநிலைகாணவரிதா
யெங்குநிறைவோய்நமவிசாகநமகந்தகிரியெந்தைநமவே.

இ-ள். சிவபெருமானுடைய திருவுளம் குளிரும்படி அவதரித்த திருக்குமாரரே நமஸ்காரம். அறுமுகவரே நமஸ்காரம். கொடிய யானைமுகத்தையுடைய தாரகனுக்கு யமனே, ஆறெழுத்தின்பொருளே, குர்ச்சிதங்களைக்கெடுப்பவரே நமஸ்காரம். வெண்மையாகிய திரை உலாவுகின்ற கங்கை பெற்ற புதல்வரே நமஸ்காரம். நான்குவேதங்களும் விட்டுணுவும் (தேவரீருடைய) நிலைமையைக்காண்டற்கு அருமையாய் எங்கும் வியாபித்தவரே நமஸ்காரம். விசாகநட்சத்திரத்தில் அவதரித்தவரே நமஸ்காரம். கந்தமலையில் வீற்றிருக்கும் எம்பெருமானே நமஸ்காரம். எ-று. (௨௩)

வானவர்களாதநமவானளவுயர்ந்திடுமயூரகிரிவாழ்
ஞானநிறைவேநமமெய்ஞ்ஞானபலன்மெய்யடியர்நண்ணவருளுந்
தேனிமிர்கடம்பநமதேனிமிரும்வாயநமசீர்பெறுசரக்
கானபவனேநமகுகாநமமலர்ந்துதிகழ்கண்ணநமவே.

இ-ள். தேவர்களுக்குமுதல்வரே நமஸ்காரம். ஆகாயம்வரைக்குமுயர்ந்த மயூரகிரியில்வாழுகின்ற ஞானபூரணமே நமஸ்காரம். மெய்ஞ்ஞானத்தாலாகிய பிரயோசனத்தை மெய்யன்பர்களடையக் கொடுத்தருளுகின்ற வண்டுகள் கீதங்களைப்பாடுங் கடப்பமாலையையுடையவரே நமஸ்காரம். தேன்போலும் இனிய குதலைவார்த்தையைப்பேசுந் திருவாயையுடையவரே நமஸ்காரம். சிறப்பைப்பெறும் சரவணப்பொய்கையிலே உற்பத்தியானவரே நமஸ்காரம். இரகசியப்பொருளானவரே நமஸ்காரம். அலர்ந்துவிளங்குந் திருக்கண்களையுடையவரே நமஸ்காரம். எ-று. (௨௪)

தண்டைபுனைசெங்கமலமன்னசரணாநமதடக்கையிடைவேல்
கொண்டவநிரஞ்சனநிராமயமறைப்பையகல்கோதிலறிவா
யுண்டெனவிளங்கியிடுமோநமசிவாயநமவுத்தமர்களாந்
தொண்டரகமீதுதிகழ்வோய்நமவிளக்கமுறுசோதிநமவே.

இ-ள். தண்டையையணிந்த செந்தாமரைமலர்போன்ற பாதங்களையுடையவரே நமஸ்காரம். பெருமைபொருந்திய திருக்கரத்தில் வேற்படையையேந்தினவரே, களங்கம் இல்லாதவரே, பிணியற்றவரே, திரோதானத்தைநீங்கிய குற்றமற்ற அறிவாகி உண்டென்று பிரகாசிக்கின்ற ஓம் நமசிவாய எனப்படும் பஞ்சாக்கரப்பொருளானவரே நமஸ்காரம். உத்தமர்களாகிய அன்பர்களது இருதயத்தில் விளங்குபவரே நமஸ்காரம். பிரகாசமிக்க சோதியே நமஸ்காரம். எ-று. (உரு)

வேறு.

என்றுமுன்னிறைஞ்சிப்பூவினஞ்சலியியற்றிப்பாலாற்
கன்றினுக்கிரங்குமான்போற்கருணைவைத்தளித்தியென்னக்
குன்றலில்கரத்தாலோர்மூன்றருக்கியங்கொடுத்துநேரே
நின்றிருகரமுங்கூப்பிநிலைபெறச்சிரத்திற்சூட்டி.

இ-ள். என்று (துதித்துத்) திருமுன்நமஸ்கரித்து, புட்பாஞ்சலிசெய்து, பால்சுரத்தலாற் கன்றிற்குருகுந் தாய்ப்பசுவைப்போலக் கிருபையைச்செய்து இரட்சித்தருளுக என்று குறைதலில்லாத கையினால் மூன்றுதரம் அருக்கியங்கொடுத்து, நேராகநின்று இரண்டு கரங்களையுங்குவித்து, நிலையாகச் சிரசில்வைத்து, எ-று. (உகா)

செய்வினைகுற்றமின்றியிராவெனச்செயுநூற்கண்ணே
யவ்வவரியல்பிராயச்சித்தமுமறைந்ததைய
விவ்வினையதினுங்குற்றமிருக்குநின்றயையாலேழை
யுய்வகைபொறுத்துவேண்டும்பலமெலாமுதவுவாயே.

இ-ள். செய்கின்றதொழில்கள் குற்றமின்றி, இருக்கமாட்டா என்று சொல்லு நூலின்கண்ணே அவரவர்செய்கின்ற பிராயச்சித்தங்களுங் கூறப்பட்டன. சுவாமீ, இந்தத்தொழிலினுங் குற்றமிருக்கும். தேவரீருடைய தயையினால் ஏழையேனுய்யும்படி (அதனைச்) சகித்து, வேண்டியபலனையெல்லாந் தந்தருளுக, எ-று. (உஎ)

என்றுநல்வரங்கள்வேண்டவித்திறநோன்புமுற்ற
லொன்றியவிதியாற்செய்யவலியிலோரோங்குமன்பா
னன்றுறவியன்றமட்டுஞ்செய்கநோய்நண்ணரச்ச
மின்றிநற்செல்வத்தோடுமின்பமுமடைவர்மன்னோ.

இ-ள். என்று நல்ல வரங்களைவேண்டுக. இவ்வாறு விரதத்தைமுடிக்குக. பொருந்திய விதிப்படிசெய்ய வலிமையில்லாதவர்கள் மிக்கவன்பினால் நன்றாகத் (தம்மால்) இயன்றளவும் அநுட்டிக்க. (அவ்வாறநுட்டித்தோர்)

இ-ள். இருபதுகாசெடையுள்ளபொன் உத்தமமாம், பத்துக்காசெடை
யுள்ளபொன் மத்திமமாம். ஆறுகாசெடையுள்ளபொன் அதமமாம். இயல்
பில்லாதவருக்கு எவ்வளவிலாயினுந் தகட்டைச்செய்து, அத்தகட்டில் வேலை
யேந்திய திருக்கரத்தையுடைய குமாரசுவாமியினது திருவுருவைச் சத்திக
ளிருவரும் இருமருங்குமிருக்க அழகொடெழுதி, சுத்தமாகிய சிறுதகடு பதி
னாறில் சுப்பிரமணியக்கடவுளின் பதினாறு திருவுருவையுமெழுதி, எ-று. ()

வாட்டமில்பானியொருபொழுதருந்தித்தரையிடைத்துயின்று
வேலைவென்றான், சூட்டிணைநினைந்துதுயிலெழீஇயுதயந்தனிற்செயுங்க
டன்கழித்தற்பின், தீட்டருமெழில்சேர்சிவனதுபுகண்மைசெப்பிடு
ம்புராணநூல்கேட்டு, மோட்டுவெங்கதிர்போயடைந்தபின்புனலின்
மூழ்கிநல்வத்திரம்புனைந்து.

இ-ள். சோர்வைநீக்குகின்ற நீரை ஒருபொழுதுண்டு, பூமியில் நித்தி
ரைசெய்து, (பின்) நித்திரைவிட்டெழுந்து, குமாரசுவாமியினுடைய உபய
பாதங்களைத்தியானித்து, உதயகாலத்திற்செய்கின்ற கடன்களைமுடித்தபின்
னர், சித்திரித்தற்கரிய பேரழகினையுடைய சிவபெருமானது புகழைச்சொ
ல்லும் புராணநூல்களைக்கேட்டு, பெருமையாகிய சூரியன் அஸ்தமயனமா
னபின் நீரில் ஸ்நானஞ்செய்து, சுத்தவஸ்திரந்தரித்து, எ-று. (௩௩)

கதித்திடிற்றவம்போங்குறைந்திடில்வாணாள்கழியுமிவ்விருவகைபோக்கி
விதித்திடும்படியேவிழிக்குநேராகமனுவொடும்விபூதியைவைத்து
துதித்திடுமாலைக்கடனற்கடன்களறச்செய்துவானவரும் [னே.
மதித்திடுநற்கோயில்குருவின்மாமனைதன்மனையினிலியன்றவோர்வயி

இ-ள். அதிகமாயிற் றவம்போகும், குறைந்தால் வாழ்நாள்சுருங்கும்;
இவ்விருவகைக்குற்றங்களையும் நீக்கி (நூலில்) விதித்தபடியே இரண்டு புரு
வக்கடைவரைக்கும் நேராக மந்திரத்தோடு விபூதியை அணிந்து, துதிக்கப
படும் மாலைக்காலத்திற் செய்யக்கடவனவாகிய நல்லகடன்களைக் குற்றமறச்
செய்து, தேவரும்மதிக்கின்ற நல்ல ஆலயம், குருவினது பெருமையாகிய
வீடு, தன்வீடு ஆகிய இவற்றில் இயன்ற ஓரிடத்தில், எ-று. (௩௪)

எண்ணிரண்டொளிர்கான்மண்டபம்வகுத்துநடுவணோர்வேதி
கையியற்றிக்,கண்ணாடிநிகராயலங்கரித்தீசன்கருத்தருந்திக்கினிலேனு,
நண்ணுறுமெதிரினுமோர்குண்ட நலம்பெறச்செய்துநான்ம
றையும், வண்ணமும்வடிவுஞ்சாந்தமுநிறைந்த மாண்புடைக்குருவி
னைவரித்து.

இ-ள். விளங்குகின்ற பதினாறுகால்களையுடைய மண்டபத்தையுண்டாக்
கி, நடுவிலொரு வேதிகையைச்செய்து, (அதனைக்) கண்ணாடிக்குநிகராக அல
ங்காரஞ்செய்து, நினைத்தற்கரிய ஈசானதிக்கிலாயினும் பொருந்துகின்ற அத
ற்கெதிரிலாயினும் ஒருகுண்டத்தை நன்றாகச்செய்து, நான்குவேதங்களும்
நிறமும் அங்க இலக்கணமும் சாந்தகுணமும்நிறைந்த மாட்சிமையையுடைய
ஆசாரியனைநியமித்து, எ-று. நிறம் ஆசாரியருக்குவிதிக்கப்பட்ட நிறம். ()

வரித்திடுங்குருவாற்சங்கற்பம்புகன்றுமதிப்பிளவனையவோர்ம
ருப்பின், பொருப்பினையடியாருளத்திருளகற்றும் புனிதனைப்பூசை
செய்திரந்து, தரைத்தலமனுநீர்சுத்திசெய்ததனிற்சாரநற்றண்டுல
திலங்கள், பரப்பிமேற்பதுமமாமலர்பொறித்துத்துரோணநீர்க்கும்ப
மேற்பதித்தே.

இ-ள். நியமிக்கப்பட்ட ஆசாரியனைக்கொண்டு சங்கற்பஞ்செய்வித்து, சந்திரனது பிளவுபோன்ற ஒரு கோட்டையுடைய மலையை, அடியாருடைய மனவிருளைக்கெடுக்கும் பரிசுத்தரை, பூசித்து யாசித்து, பூமியை மந்திரத்தோடுகூடிய நீரினாற்சுத்திசெய்து, அதனிற்பொருந்த நல்ல அரிசியையும் எள்ளையும்பரப்பி, அதன்மீதே பெருமையான தாமரைமலரைத்தீட்டி, துரோணமென்னும் அளவுபொருந்திய நீரையுடைய கும்பத்தை அதன்மீது வைத்து, எ-று. துரோணம் - பதக்கு. (௱௬)

சந்தனம்புனைந்துமாவிலைகூர்ச்சந்தானைதேங்காயிவைநடுவைத்
தந்தவேள்குடத்தைச்சூழவேயாறற்காறுநீர்க்குடங்கலாகும்ப [ன்
நந்தலின்மேல்பான்மயிற்குடநிறுவி நன்குறப்புனைந்துபொற்றகட்டி
வந்தவானவரையாவினைந்தாட்டிமருவுறுகும்பமேல்வைத்தே.

இ-ள். சந்தனத்தை அணிந்து, மாவிலை தருப்பை வஸ்திரம் தேங்காய் ஆகிய இவற்றை நடுவில்வைத்து, அந்தச் சுப்பிரமணியப்பெருமானது கும்பத்தைச்சூழக் கார்த்திகைக்கு நீரையுடைய ஆறு கும்பங்களையும் கலாகும்பத்தையும் குறைவில்லாத மேற்குப்பக்கத்தில் மயூரகும்பத்தையும்நிறுத்தி, நன்றாய் அலங்கரித்து, பொற்றகட்டில் ஆவாகனஞ்செய்த தேவரைப் பஞ்சகௌவியத்தால் அபிடேகஞ்செய்து, பொருந்திய கும்பத்தில்வைத்து, எ-று. (௱௭)

ஆகமமொழிந்தவாறுவேலவனையன்பினாவாகனஞ்செய்து
மோகமதகற்றுங்கந்தவேள்காயத்திரியினாற்பூசனைமுடித்தல் [தல்
சோகமிலறுமீன்றனையெண்வாக்கியந்தாற்றூயபூசனைசெய்துமுடித்
வாகுளசிகியைமஞ்ஞையின்காயத்திரியினான்மகிழ்வினர்ச்சித்தல்.

இ-ள். ஆகமஞ்சொன்னபடி குமாரசுவாமியை அன்பினால் ஆவாகனஞ்செய்து, மயக்கத்தைநீக்குகின்ற குமாரசுவாமியினது காயத்திரியினாற் பூசையைமுடிக்க. சோகமில்லாத கார்த்திகையை எட்டுவாக்கியங்களாற் பரிசுத்தமாகிய பூசனையைச்செய்துமுடிக்க. வெற்றியினையுடைய மயிலை மயூரகாயத்திரியினால் மகிழ்ச்சியுடன் பூசிக்க. எ-று. (௱௮)

மறையவரானீர்க்கும்பமேற்கரத்தைவைத்துவேண்மனுவைநூ
ற்றெண்கால், மறைதனல்வேதமலர்க்கடம்பணிந்தவம்பகட்டாரமார்பி
னனைக், கறையணற்பாம்பினறிதுயிலமர்ந்தகருமுகிலெந்தையையெ
ன்னை, நறைதுளித்தொழுகுங்கடுக்கைவேணியனைநவிலுமவ்வாக்கியங்
களாற்செபித்தல்.

இ-ள். பிராமணரைக்கொண்டு, நீரையுடைய கும்பத்தின்மேற் கையை வைப்பித்து, குமாரசுவாமியினது மந்திரத்தை நூற்றெட்டுத்தரம் சொல்லுவிக்க. நல்ல துளைபொருந்திய கடப்பம்பூமாலையையணிந்த அழகிய பெருமையாகிய பாக்கம்பொருந்திய மார்பினையுடைய குமாரசுவாமியை, நஞ்சுசெறிந்த மேல்வாயினையுடைய அனந்தசயனத்தில் அறிதுயில்செய்கின்ற கரிய முகில்போன்ற நிறத்தையுடைய நமது பிதாவாகிய விட்டுணுவை, என்னை, தேன் துளிகொண்டு சொரிகின்ற கொன்றைமாலைபொருந்திய சடையையுடைய சிவபெருமானை அவ்வவர்க்குச் சொல்லப்பட்ட மந்திரங்களாற் செபிக்க. எ-று. வேதம் - துளை, வேதமலர்க்கடம்பு - வேதமாகிய கடப்பம்பூ எனினும்பொருந்தும். (௩௯)

அங்கியைவளர்த்துச்சாமமோர்நான்குங் கந்தவேண்மந்திரம
றைந்து, பொங்குறவோமம்புரிதல்கார்த்திகைக்கும்புகன்றிடோம
மாறியற்றல், கங்குல்போமளவுந்துயிலொரீஇப்புலரிக்காலையிற்றூய
நீர்படிந்து, மங்களகருமம்முடித்துமேற்பூசைநென்னல்போல்வகை
யுடன்செய்தல்.

இ-ள். அக்கினியைவளர்த்து, நான்குயாமத்திலுங் கந்தசுவாமியுடைய மந்திரத்தையுச்சரித்து (அக்கினி) சுவாலிக்க ஓமஞ்செய்க. கார்த்திகைநட்சத்திரத்திற்குஞ் சொல்லப்பட்ட ஆறு ஓமங்களைச்செய்க. (பின்,) இராக்கழியும்வரைக்கும் நித்திரைநீங்கி, வைகறைக்காலத்தில் சுத்தமாகிய நீரில் ஸ்நானஞ்செய்து, நித்தியகருமங்களைமுடித்து, பின், பூசையைச் சென்றநாள்போல வகைமைபொருந்தச் செய்க. எ-று. (௪௦)

முற்றுபூரணப்பேராகுதிசெய்துகும்பநன்னீரினுள்மூழ்கி
நற்றுகில்புனைந்துகுமரனைவரைந்தநல்லபொற்றகடுநற்றூசு
பொற்றநீர்க்கும்பங்குருவுமற்றையநற்பூசுரர்பெறவுமங்களித்து
வெற்றிசெய்களிறுபரிபசுநிதியம்விளைநிலம்பிறவையும்வழங்கி.

இ-ள். முடிவான பெரிய பூரணாகுதியைச்செய்து, கும்பத்திலுள்ள நல்லநீரால் முழுகி, சுத்தவஸ்திரந்தரித்து, குமாரசுவாமியினது திருவுருத்தீட்டிய நல்லபொற்றகட்டையும் நல்லபுடைவையையும் பொன்னாலாகிய பூரணகும்பத்தையும் ஆசாரியனும் ஏனைச்சற்பாத்திரப்பிராமணருங் கொள்ளும்படி அப்பொழுதுகொடுத்து, வெற்றியைச்செய்கின்ற யானை, குதிரை, பசு, பொன், வயல், ஏனையவற்றையுந் தானஞ்செய்து, எ-று. (௪௧)

இன்னவாறுத்தாபனமுடித்தினிய வந்தணர்க்கன்னமீந் தான்
றோர், மன்னியகிளைஞர்மக்களோடருந்தல்வழக்கதாமிந்தநோன்பத
னைச், சொன்னவாறிழைத்தோர்நினைத்தவைபெற்றுத்தொலைவறுசெ
ல்வமுற்றிருந்து, பின்னரீறதனிற்குமரனூரகத்தைவலச்செவிபேச
வீடடைவார்.

இ-ள். இவ்வாறுத்தியாபனத்தைச்செய்துமுடித்து, சற்பாத்திரப்பிராமணருக்கு அன்னதானஞ்செய்து, (நற்குணநற்செய்கைகளால்) நிறைந்தோர்,

நிலையான சுற்றத்தார், பிள்ளைகளாகிய இவர்களுடன் உண்டல்முறைமையாம். இந்தவிரதத்தைச் சொன்னவிதிப்படி அநுட்டித்தோர் நினைத்தபேற்றைப்பெற்று, அழிவில்லாத செல்வத்தைப்பொருந்தியிருந்து, பின் அந்திய காலத்தில் குமாரசுவாமியானவர் பிரணவத்தை வலச்செவியில் உபதேசிக்க மோட்சத்தையடைவர். எ-று. (௬௨)

ஓதுமிவ்விரதக்கதையினைப்புகன்றோரெழுதினோரினிதெனவுவந்தோர், நாதியம்பரமனுமைவடிவெனச்சொலண்ணலங்குகனடிநிழற்கீழ்ந், தீதறவிருப்பரென்றுநற்செழுந்தேன்றிகழ்தொடையாழ்முனிகேட்பத், தாதுசூழ்கமலமலர்ப்பொகுட்டிருக்குஞ்சதுர்முகக்குரிசில்சாற்றினனால்.

இ-ள். (நம்மாற்) சொல்லப்பட்ட இக்கார்த்திகைவிரதக் கதையைச் சொன்னவர்கள், எழுதினவர்கள், நன்றென்றுமகிழ்ந்தவர்கள், எவர்க்கும் முதல்வராகிய சிவபெருமான், பார்வதியாரது திருவடிவமென்று அருளிச்செய்த பெருமையினையுடைய குமாரசுவாமியினது பாதநிழலின்கீழ் சுகமாய் இருப்பரென்று நல்ல செழுமையாகிய தேன்விளங்கும் மாலைபொருந்திய மகதியாழையுடைய நாரதமுனிவர்கேட்க, மகரந்தஞ்செறிந்த தாமரைமலரின்பொகுட்டில் வீற்றிருக்கும் நான்குமுகங்களையுடைய பிரமா, அருளிச்செய்தார். எ-று. (௬௩)

கார்த்திகைவிரதமுரைத்தசருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௨௧௨.

---

## ஆறாவது

## சுக்கிரவாரவிரதமுரைத்தசருக்கம்.

வெள்ளிவாரவிரதத்தைநாரத
னுள்ளவாறுரைப்பாயெனவோதலும்
வள்ளவாய்ச்செழுந்தாமரைவாழ்வுறுந்
தெள்ளுநான்மறையந்தணன்செப்புவான்.

இ-ள். சுக்கிரவாரவிரதத்தை நாரதமுனிவர் உள்ளபடி அருளிச்செய்க என்று விண்ணப்பஞ்செய்தலும், கிண்ணம்போலும் வாயையுடைய செழுமையாகிய தாமரையாசனத்தில் வீற்றிருக்குந் தெளிவான நான்குவேதங்களையுடைய பிரமா, அருளிச்செய்வார். எ-று. (௧)

மன்னுபன்னிருமாதமுமாகுமாற்
பன்னவற்றிலொர்திங்கள்முற்பக்கத்திற்
பொன்னின்வாரமொர்போழ்துணவாயிருந்
தன்னதானமங்கந்தணர்க்கீந்தரோ.

இ-ள். (சுக்கிரவாரவிரதமநுட்டித்தற்கு) நிலையான பன்னிருமாதங்களும் ஆகும். சொல்லப்பட்ட அவைகளில் ஒருமாதத்தில் பூர்வபக்கத்தில் குருவாரத்தில் ஒருகால உண்டியுடனிருந்து அன்னதானத்தை அப்பொழுது பிராமணருக்குச்செய்து, பின் எ-று. (௨)

சங்கன்வாரமிருக்கத்தொடங்கினே
னிங்குவிக்கினமின்றிமுடிந்திடப்
பொங்குநும்மருள்வைத்திரென்றேபுகன்
றங்கண்வேண்டியகன்றரைத்துஞ்சியே.

இ-ள். சுக்கிரவாரவிரதம் அநுட்டிக்கும்படி ஆரம்பித்தேன்; இப்பொழுது ஒருவிக்கினமும் இல்லாதுமுடிய, மிகுந்த உங்கள்கிருபையைப் பாலித்தருளுகவென்றுகூறி, அப்பொழுது (அப்பிராமணரை) வேண்டிக்கொண்டு, அகன்றபூமியில் நித்திரைசெய்து, எ-று. (௩)

புலரியின்கட்பொருந்துந்துயிலொரீஇக்
கலபமாமயிற்கந்தனையுன்னியே
நலமில்பாவஞ்செயாவிடினண்ணிடுந்
தலைமையாய்த்தினஞ்சார்வினைசெய்துபின்.

இ-ள். வைகறைக்காலத்தில் பொருந்திய நித்திரையைநீங்கி, தோகை பொருந்திய நீலமயிலையுடைய கந்தசுவாமியைத்தியானித்து, நன்மையில்லாத பாவத்தைச்செய்யாதொழிந்தால்வருந் தலைமைபொருந்தி, [பாவநீங்கி என்றபடி] நித்தியகருமங்களைச்செய்து, பின்பு, எ-று. (௪)

உடலினுக்குயிராயிமையோர்களுக்
கடன்மிகுந்தளபதியாகிய
விடலைதன்னைவிதிப்படிபூசித்துத்
திடமதாய்வரஞ்சிந்தித்துவேண்டலே.

இ-ள். உடம்பினுக்குயிராகி, தேவர்களுக்கு வலிமிக்க சேனாபதியாகிய குமாரசுவாமியை விதிப்படி பூசைசெய்து, நிச்சயமாக வரங்களைநினைத்து வேண்டுக, எ-று. (௫)

உணவுநீத்தலுறுபலமாந்திட
றணிவிலாதொருபோழ்துசமைத்துண
லிணையின்மூன்றிலருந்துறவெண்ணிற
லணியதாகநிவேதித்தருந்தலே.

இ-ள். போசனம்நீங்குதல், மிக்க பழங்களைப்புசித்தல், தணியாது ஒருநேரமாகச் சமையல்செய்து உண்டல், (ஆகிய) நிகரில்லாத இம்மூன்றனுள்ளே போசனஞ்செய்யநினைத்தாற், சிறப்பாக நிவேதனஞ்செய்து உண்க. எ-று. (௬)

தரையினிற்றுயில்கொண்டுயர்சண்முகப்
பரனைநெஞ்சிற்பரவித்துயிலொரீஇப்
புரியுங்கன்மம்புரிந்துபின்னுளின்வாய்ப்
பரிவிற்பாரணைபண்ணிடவேண்டுமே.

இ-ள். (சுக்கிரவாரவிரதமநுட்டித்தற்கு) நிலையான பன்னிருமாதங்களும் ஆகும். சொல்லப்பட்ட அவைகளில் ஒருமாதத்தில் பூர்வபக்கத்தில் குருவாரத்தில் ஒருகால உண்டியுடனிருந்து அன்னதானத்தை அப்பொழுது பிராமணருக்குச்செய்து, பின் எ-று. (௨)

சுங்கன்வாரமிருக்கத்தொடங்கினே
னிங்குவிக்கினமின்றிமுடிந்திடப்
பொங்குநும்மருள்வைத்திரென்றேபுகன்
றங்கண்வேண்டியகன்றுறைந்துஞ்சியே.

இ-ள். சுக்கிரவாரவிரதம் அநுட்டிக்கும்படி ஆரம்பித்தேன்; இப்பொழுது ஒருவிக்கினமும் இல்லாதுமுடிய, மிகுந்த உங்கள்கிருபையைப் பாலித்தருளுகவென்றுகூறி, அப்பொழுது (அப்பிராமணரை) வேண்டிக்கொண்டு, அகன்றபூமியில் நித்திரைசெய்து, எ-று. (௩)

புலரியின்கட்பொருந்துந்துயிலொரீஇக்
கலபமாமயிற்கந்தனையுன்னியே
நலமில்பாவஞ்செயாவிடினண்ணிடுந்
தலைமையாய்த்தினஞ்சார்வினைசெய்துபின்.

இ-ள். வைகறைக்காலத்தில் பொருந்திய நித்திரையைநீங்கி, தோகை பொருந்திய நீலமயிலையுடைய கந்தசுவாமியைத்தியானித்து, நன்மையில்லாத பாவத்தைச்செய்யாதொழிந்தால்வருந் தலைமைபொருந்தி, [பாவநீங்கி என்றபடி] நித்தியகருமங்களைச்செய்து, பின்பு, எ-று. (௪)

உடலினுக்குயிராயிமையோர்களுக்
கடன்மிகுந்தளபதியாகிய
விடலைதன்னைவிதிப்படிபூசித்துத்
திடமதாய்வரஞ்சிந்தித்துவேண்டலே.

இ-ள். உடம்பினுக்குயிராகி, தேவர்களுக்கு வலிமிக்க சேனாபதியாகிய குமாரசுவாமியை விதிப்படி பூசைசெய்து, நிச்சயமாக வரங்களைநினைத்து வேண்டுக. எ-று. (௫)

உணவுநீர்தலுறுபலமாந்திட
றணிவிலாதொருபோழ்துசமைத்துண
லிணையின்மூன்றிலருந்துறவெண்ணிநு
ண்ணியதாகநிவேதித்தருந்தலே.

இ-ள். போசனம்நீங்குதல், மிக்க பழங்களைப்புசித்தல், தணியாது ஒருநேரமாகச் சமையல்செய்து உண்டல், (ஆகிய) நிகரில்லாத இம்மூன்றனுள்ளே போசனஞ்செய்யநினைத்தாற், சிறப்பாக நிவேதனஞ்செய்து உண்க. எ-று. (௬)

தரையினிற்றுயில்கொண்டுயர்சண்முகப்
பரனைநெஞ்சிற்பரவித்துயிலொரீஇப்
புரியுங்கன்மம்புரிந்துபின்னுளின்வாய்ப்
பரிவிற்பாரணைபண்ணிடவேண்டுமே.

மறைநூல்பிறநூல்வடித்துணர்ந்துமாண்பினிறைந்துவடிவினொன்றுங்
குறையாதிருக்கும்வேதியர்களொன்பான்பேரைக்குறித்தழைத்து
நிறைநீர்க்கும்பமொன்பதமைத்தவற்றினவரைநியமித்து
நறையார்மலர்மென்னறுந்தூசுநாளிகேரமிவைவேய்ந்து.

இ-ள். வேதாகமங்களையும் ஏனை நூல்களையும் (ஐயந்திரிபற) நன்குணர்ந்து, (நற்குணநற்செய்கைகளில்) நிறைந்து, அங்கங்களில் ஒன்றுங் குறைவுபடாமலிருக்கும் பிராமணர்கள் ஒன்பதின்மரைக்குறித்து வருவித்து, நிறைந்த நீரையுடைய கும்பங்கள் ஒன்பதை அமைத்து, அவற்றின் அப்பிராமணரைவரித்து, தேன்நிறைந்தபுட்பம், மென்மையான நல்லவஸ்திரம், தேங்காய் ஆகிய இவற்றைச்சேர்த்தி, எ-று. (௧௧)

மொட்டாமையினைப்புறநெரியமுருக்குங்கூர்ங்கோட்டண்ணறன
தாட்டாமரையையருச்சித்துத்தாழ்ந்துவேண்டுவனபுகன்று
தீட்டாநின்றவிம்பமெலாங்கவியமதனாற்சுத்திசெய்து
சூட்டாடரவைமருங்கசைத்தோன்சுதனைவிதியாற்பூசித்தல்.

இ-ள். (விட்டுணுவாகிய) பருத்த ஆமையை (அதன்) ஓடுநெரிய அழிக்குங் கூரிய கோட்டினையுடைய விநாயகக்கடவுளின் பாதாரவிந்தங்களைப் பூசித்து, வணங்கி, வேண்டியவற்றை விண்ணப்பஞ்செய்து, எழுதப்பட்ட திருவுருவங்கள் எல்லாவற்றையும் பஞ்சகௌவியத்தாற் சுத்திபண்ணி, சூடிகைபொருந்திய ஆடுகின்ற சர்ப்பத்தை இடையிற் (கச்சாகக்) கட்டிய சிவபெருமானது திருக்குமாரராகிய குமாரசுவாமியை (ஆகம) விதிப்படி பூசிக்க. எ-று. (௧௨)

மேருவரையோரிரண்டென்னவீங்கியிளகித்திதலைபடர்ந்
தாரம்புனைந்துமுத்தமணிந்தண்ணுந்தழகுவீற்றிருந்த
வாரையிகலுமுலைச்சசிதன்மணாளன்முதலாமெண்மரையுஞ்
சேருமலர்கொண்டவ்வவர்கண்மனுவாற்றிகழ்பூசனைசெய்தல்.

இ-ள். மேருகிரி இரண்டென்று கூறும்படி பருத்து, மென்மைகொண்டு, தேமல்பரந்து, சந்தனக்குழம்பணிந்து, முத்துவடம்பூண்டு, சாயாமல், அழகு குடிகொண்டிருக்கும் கச்சோடு மாறுபடுகின்ற முலைகளையுடைய இந்திராணியின் நாயகனாகிய இந்திரன்முதலான திக்குப்பாலகர் எண்மரையும் நெருங்கிய புட்பங்களைக்கொண்டு அவரவர்க்குரிய மந்திரத்தால் விளங்குகின்ற பூசனையைச்செய்க. எ-று. (௧௩)

கும்பசெபஞ்செய்ததற்பின்னர்க்குமரன்மனுநூற்றெட்டுரைத்து
வெம்புமழன்மேற்கியற்றியதன்மீதுவிரைநெய்யாகுதிசெய்
தும்பர்பதியேமுதலெண்மர்மனுவாலோமம்பத்தியற்ற
னம்புமடியேற்கருடியெனநவின்றுமூன்றர்க்கியங்கொடுத்தே.

இ-ள். கும்பசெபஞ்செய்து முடித்தபின்னர்க் குமாரசுவாமியுடைய மந்திரம் நூற்றெட்டைச்சொல்லி, சுடுகின்ற அக்கினியை மேலைத்திசையி

லுண்டாக்கி, அந்த அக்கினியின்மீது நறுநெய்யை ஆகுதிசெய்து, இந்திரன் முதலான திக்குப்பாலகர் எண்மருடையமந்திரத்தால் பத்து ஓமத்தைச்செய்க. (அதன்பின், தேவரீரை) நம்பின அடியேனுக்கருள்புரிக எனச்சொல்லி, மூன்று அருக்கியத்தைக்கொடுத்து, எ-று. (கச)

அந்நாண்முழுதுமுபவசியாயருந்தாதுறக்கமகன்றிருந்து
பின்னாளெழுந்துநித்தகன்மமுடித்துப்பிற்பூசனையியற்றிப்
பன்னாநின்றபூரணப்பேரோமம்பழுதிலாதுசெய்து
நன்னீர்க்கும்பந்தனின்மூழ்கிநவையின்றகல்வெண்டுகில்புனைந்து.

இ-ள். அத்தினமுழுதும் போசனஞ்செய்யாது உபவாசியாக நித்திரையின்றி இருந்து, மற்றைநாளெழுந்து நித்தியகருமத்தைமுடித்து, பின் பூசனையைப்புரிந்து, சொல்கின்ற பெரிய பூரணாகுதியைக் குற்றமில்லாமற்செய்து, நல்லகும்பசலத்தில் ஸ்நானம்பண்ணி, குற்றமில்லாமற்கழிந்த வெண்மையான வஸ்திரத்தை அணிந்து, எ-று. (கரு)

ஒன்றுமுதலாய்முகம்பதின்மூன்றீறாயுயர்ந்தசிவனுருவாய்
நன்றுபுனைந்தோரெப்பவமுநண்ணாராகிச்சிவகதியின்
மன்றமருவுமகிமைத்தாய்மானும்பொருள்வேறின்மையதாய்த்
துன்றுமுருத்திராக்கமணிதுலங்கவோராறிடம்புனைந்து.

இ-ள். முகம் ஒன்றுமுதலாகப் பதின்மூன்றீறாக உளதாய், உயர்ந்த சிவபெருமானது வடிவமாய், நன்றாக அணிந்தவர், எந்தப்பாவத்தையும் அடையாராகி மோட்சத்தில் திடமாகச் சேரும்படி செய்யும் மகிமையுடைத்தாய், (தனக்கு) நிகராகும் பொருள் வேறில்லாததாய், இருக்கும் உருத்திராக்ஷமணியை விளங்க ஆறிடங்களில் அணிந்து, எ-று. (கசு)

கோதமகன்றுதவநிறைந்தகுரிசின்மேருவுடனிகலி
யாதவனைநேர்செலவொட்டாதமர்ந்தவிந்தமடக்கியகை
நாதன்றனையேநிகராகக்கும்பத்திருந்தநற்றவர்க்குச்
சோதித்தகடுதுகில்கும்பந்தொகையினிதியமுதனுதவல்.

இ-ள். குற்றம்நீங்கித் தவம்நிறைந்த பெருமையிற்சிறந்தவரும், மேருமலையுடன் மாறுபட்டுச் சூரியனை நேரே செல்லுதற்குவிடாமலிருந்த விந்தமலையையடக்கிய கையையுடைய தலைவரும் ஆகிய அகத்தியமுனிவருக்கொப்பாகக் கும்பத்தில் வரிக்கப்பட்டிருந்த நல்ல பிராமணருக்குப் பொற்றகடு, வஸ்திரம், குடம், அளவில்லாத திரவியமுதலானவற்றைக் கொடுக்க, எ-று. (கஎ)

அதன்மேற்பரிவாரம்பதிபூசனைசெய்தரியமறையவர்க்குத்
ததிபாலுடனேயனமருத்தித்தந்தைதாய்தன்மனைமக்க
ளிதமார்கிளைஞருடனருந்தலியல்பாமிவ்வாறிருந்தவர்தங்
கதியாதெனிலிங்குயர்போகமாங்கேகந்தன்மலர்ப்பதமே.

இ-ள். அதன்பின், அன்பினால் தம்பதிகளுக்குப்பூசைசெய்து, சற்பாத் திரப்பிராமணரைத் தயிரும் பாலுமாகிய இவற்றினுடன் அன்னத்தையுண் பித்து, பிதா மாதா தன்மனைவி பிள்ளைகள் அன்புமிக்க சுற்றத்தாராகிய இவருடன் உண்டல் இயல்பாகும். இப்படிச் (சுக்கிரவாரவிரதத்தை) அநு ட்டித்தோருடைய கதி என்னையெனில், இம்மையில் உயர்ந்தபோகங்களை யநுபவித்தல், மறுமையில் குமாரசுவாமியினது தாமரைமலர்போன்ற பாத த்தையடைதல். எ-று. தம்பதி - ஸ்திரீபுருஷர். (கஅ)

சுக்கிரவாரவிரதமுறைத்தசருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௩௪௦.

---

## ஏழாவது

## சட்டிவிரதமுறைத்தசருக்கம்.

கோடிவண்டுணவிளநறுப்பிலிற்றுதண்கொழுமடற்கமலத்தோ
யாடல்வேலவன்சட்டிநல்விரதமதறைகெனவிசைவீணை
பாடுநாரதமாமுனிவினவுறப்பாழிவாய்ப்பெரும்பாம்பு
சூடுபாரகமுழுவதும்படைத்திடுந்தோன்றலுமறைகிற்பான்.

இ-ள். கோடியென்னும் எண்ணையுடைய வண்டுகள் உண்ண, புதிய தேனைச்சொரியும் குளிர்ந்த செழித்த இதழ்செறிந்த தாமரையாசனத்தையு டையவரே, (இனி) வெற்றிபொருந்திய குமாரசுவாமியினது நல்ல சட்டிவிர தத்தை அருளிச்செய்க என்று இசையையுடைய வீணையைவாசிக்கின்ற நா ரதமகாமுனிவர்வினவ, அகன்றவாயினையுடைய பெரியசேடன்தாங்குகி ன்ற பூமிமுழுவதையும் படைக்கின்ற பிரமாவும் சொல்வாராயினர். எ-று. ()

வீறுசேர்துலைவிரிச்சிகமகரமீன்மேடநல்விடையென்னு
மாறுதிங்களுந்தொடங்கலாமிம்மதியவற்றிலோர்மதியின்கட்
கூறுமுற்பிறைச்சட்டியின்முன்னைநாளொருபொழுதனங்கொள்ளன்
மாறுசெய்யுமைம்புலக்குறும்படக்குதன்மறையவர்க்கனமீதல்.

இ-ள். பெருமைபொருந்திய ஐப்பசி, கார்த்திகை, தை, பங்குனி, சித் திரை, நல்ல வைகாசி என்னும் ஆறுமாதங்களினும் (கந்தசட்டிவிரதம்) ஆரம்பிக்கலாம். இந்தமாதங்களில் ஒருமாதத்தில் சொல்லப்படும் பூர்வபக் கத்துச் சட்டிக்குமுதனாள் ஒருகாலம் அன்னம்புசிக்க. தீமையைச்செய் கின்ற ஐம்புலமாகிய துட்டரை அடக்குக. பிராமணருக்கு அன்னதானஞ் செய்க. எ-று. (உ)

அலங்குநூலணியன்னவரனுக்கைகொண்டத்தினந்தனைநீக்கிப்
பலங்களீந்திடுசட்டிநாள்வைகறைப்படர்மயற்றுயில்போக்கி
நலங்கொணித்தியவினைமுடித்தியாவருநாடரும்பொருளாகும் [றே.
வலங்கொள்வேற்படைக் கந்தனையன்பொடு மனத்திடைநினைத்துற

இ-ள். பிரகாசிக்கின்ற உபவீதத்தையணிந்த அப்பிராமணருடைய அநுஞ்ஞையைப்பெற்று, அத்தினத்தைக்கழித்து, பயன்களைத்தருகின்ற சட்டிநாளின் வைகறைக்காலத்தில் வருத்தமிக்க மயக்கத்தையுடைய நித்திரையைநீக்கி, நன்மைபொருந்திய நித்தியகருமங்களைமுடித்து, எவருந் தேடற்கரிய பொருளாகிய வெற்றியைக்கொண்ட வேற்படையினையுடைய குமாரசுவாமியை அன்போடு மனத்தில் தியானித்திருந்து, எ-று. (௩)

தும்பிமாமுகற்பூசித்துக்கவியத்திற்றருப்பைதோய்த்தெறிந்தப்பாற்
பைம்பொன்வார்கழற்றுவாரபாலகர்தமைப்பண்புடனருச்சித்துக்
கும்பவிம்பயந்திரமெனுமூன்றினுட்கூறுமோரிடந்தன்னில்
எம்பிரான்றனையாகமவிதிப்படியேற்றபூசனைசெய்தல்.

இ-ள். விநாயகக்கடவுளைப் பூசனைசெய்து, பஞ்சகௌவியத்திற் றருப்பையைத்தோய்த்துப் புரோக்ஷித்து, அதன்பின், பசியபொன்னாற்செய்யப்பட்ட நீண்ட வீரக்கழலையுடைய துவாரபாலகரைக் குணத்தோடுபூசித்து, கும்பம், விம்பம், யந்திரம் என்னும் மூன்றிடத்துள்ளும் சொல்லப்பட்ட ஓரிடத்தில் நமது பெருமானாகிய குமாரசுவாமியை ஆகமவிதிப்படியே இயைந்த பூசனையைச்செய்க. எ-று. விம்பம் - விக்கிரகம். (௪)

பூசைசெய்திறம்விரிக்கிலெட்டெனுமணிப்பொற்குடஞ்சூழ்வைத்து
மாசிலாதுறுநாயகப்பொற்குடம்வயங்கிடநடுச்சேர்த்தித்
தேசுபெற்றிடுமொருமுகமிருவிழிசெங்கரமொருநான்கின்
வீசுவச்சிரம்வேல்வரதாபயம்விளங்கநற்கலன்மின்ன.

இ-ள். பூசனையைச்செய்கின்ற தன்மையை விரித்துப்பேசில், எட்டென்கின்ற அழகமைந்த பொற்கும்பங்களைச்சூழவைத்து, குற்றமின்றியிருக்கும் பொன்னாலாய நாயககும்பத்தை விளங்க நடுவில்வைத்து, பிரபைபெற்ற ஒருதிருமுகமும், இரண்டுதிருக்கண்களும், சிவந்த நான்கு திருக்கரங்களிற்பொருந்திய (பகைவர்மீது) வீசுகின்ற குலிசமும் வேலும் வரதமும் அபயமும் விளங்கவும் சிறந்த ஆபரணம்பிரகாசிக்கவும், எ-று. (௫)

நன்னிலாப்பொழியெயிறுதோன்றுறுசெய்நகையும்வாளொளிவீசும்
பொன்னினாற்செயுங்குண்டலமகுடமும்பொற்புளபதப்போதும்
மன்னுமாணிக்கமலையினைப்பவளமுமரகதமலையுஞ்சேர்ந்
தென்னவள்ளியும்யானையுமருங்குறையெழிலுஞ்சாந்தமுமாக.

இ-ள். நல்ல நிலாவைச்சொரியும் பற்கள்தோன்றுமாற் செய்கின்ற திருப்புன்முறுவலும், பேரொளியைவீசுகின்ற பொன்னாற்செய்த குண்டலங்களும், கிரீடமும், அழகையுடைய பாதாரவிந்தமும், நிலையான மாணிக்க மலையைப் பவளமலையும் மரகதமலையும் சேர்ந்தாற்போல வள்ளிநாயகியாரும் தெய்வநாயகியாரும் இருமருங்கும் இருக்கும் அழகும், சந்தனக்குழம்பும் அமையவும், எ-று. (௬)

வன்னமாமயின் மேற்கொளும்பான்மையாய் மனத்திடைத்தியானஞ்
தன்னநீர்ப்பிரதானமூக்குடத்திலாவாகனஞ்செய்தப்பான் [செய்
மின்னுமோர்முகம்நாற்புயத்தம்புயஞ்சேவல்வேலபயங்க
ணன்னிலாமணிமகுடாற்றுகிலுறைபடிகநல்வடிவாயும்.

இ-ள். அழகிய நீலமயிலின்மீது ஏறுந்தன்மையாய் மனத்தில் தியானித்து, அந்த நீரையுடைய பிரதானமான மூன்றுகும்பத்தில் ஆவாகித்து, அதன்பின், ஒளியையுடைய ஒருதிருமுகமும் நான்கு திருக்கரங்களில் தாமரை, சேவற்கொடி, வேல், அபயங்களும் நல்ல ஒளியைவீசும் இரத்தினமழுத்திய கிரீடமும், சிறந்தவஸ்திரமும், மாலையும், பொருந்திய அழகிய பளிங்குவடிவமாகவும், எ-று. (எ)

உரையல்பொன்னிகர்மேனியோர்முகமிருகரத்தினிலுரைபெற்ற
பரியபுத்தகம்பரவுசின்முத்திரைபசியபொற்கலன்சாந்த
மரையைநேர்விழியாயும்வில்வீசியமதிமுகமோராறு
நிரைசெய்பன்னிருகரங்கள்வில்விசிகமேய்நீனிறவடிவாயும்.

இ-ள். ஒரு திருமுகமும், இரண்டு திருக்கரங்களில் புகழ்பெற்ற பருத்தபுத்தகமும், துதிக்கப்படும் ஞானமுத்திரையும், பசுமையானபொன்னுபரணமும், சந்தனமும், செந்தாமரைமலரையொத்த திருக்கண்களும், பொருந்திய உரைத்த பொன்னையொத்த திருமேனியாகவும், ஒளியைவீசுகின்ற சந்திரன்போலும் திருமுகமாறும், வில்லும் அம்புந்தங்கிய நிரையான பன்னிரண்டு திருக்கைகளும்பொருந்திய நீலநிறத்திருமேனியாகவும், எ-று. உரையல் - தொழிற்பெயர். (அ)

கோலமாரொருமுகம்வரதாபயங்குலிசம்வேல்புனைநாற்கை
காலமேமலர்முளரியந்தாமநற்சாந்தம்பொற்கலன்செய்ய
சீலமேனிமென்சந்திரகாவிவத்திரவுடையாயுந்தண்
பாலின்மேனிமூவிருமுகம்படைதிகழ்பன்னிருகையாயும்.

இ-ள். அழகுநிறைந்த ஒருதிருமுகமும், வரதம் அபயம் குலிசம் வேல் ஆகிய இவற்றைப்பொருந்திய நான்குதிருக்கரங்களும், உதயகாலத்தில்மலருந் தாமரைமலர்மாலையும், நறுமணங்கமழுஞ் சந்தனமும், பொன்னுபரணமும், மென்மையாகிய சந்திரகாவிவஸ்திர உடையும், பொருந்திய சிவந்த (சாமுத்திரிகாலட்சணத்திற்சொல்லப்பட்ட) இலக்கணமமைந்த திருமேனியாகவும், ஆறுதிருமுகங்களும், ஆயுதங்கள்விளங்குகின்ற பன்னிரண்டு திருக்கரங்களும் பொருந்திய குளிர்ந்த பால்போன்ற திருமேனியாகவும், எ-று. ()

பரிதிகோடியுற்றுளிர்ந்தெனவிளங்கியபடரொளிவியன்மேனி
மருவுநாலுதிக்கினுமொளிவீசியவாண்முகமழிவின்றிப்
பிரிவிலுறுங்கையில்வேல்வரதாபயம்பிரசநுண்டுளிதூற்று [ம்.
முருகுதோய்தொடை மிலையும்வச்சிரமென மொழியுநாற்படையாயு

இ-ள். நான்கு திசைகளினும் பிரபைவீசுகின்ற ஒளிபொருந்திய முகமும், அழிவில்லாமல் ஒருமித்திருக்கும் நான்குதிருக்கரங்களில் வேல் வர

தம் அபயம் நண்ணிய தேன்றுளிஸயத்தூற்றுகின்ற வாசனைபொருந்திய மாலையையணிந்த குலிசம் என்று சொல்லப்படும் நான்கு படைக்கலங்களும் பொருந்திய கோடிசூரியர் உதித்துப் பிரகாசித்தாற்போல விளங்குகின்ற பரம்பிய பிரபையுடைய திருமேனியாகவும், எ-று. வரதாபயங்களைப் படையென்றது உபசாரவழக்கு. (௧௦)

வேறு.

இத்திறங்குமரர் மூவிருவரையு மீசனற்றிசைமுதன் மேல்கீழ்,
வைத்திடுகுடமோராறினுமனத்தின்மகிழ்வுடனுன்னியேயிருத்தி,மு
த்திரையளித்துமூர்த்திவேதிகையின் முறைநயினலவையெலாமியற்றி
ப், பத்தியாலடியேன்கொடுத்தவாசனத்திப்பண்புடனிருக்கவென்றி
யம்பி.

இ-ள். இவ்வாறு ஆறுகுமாரர்களையும் நல்ல ஈசானதிசைமுதலாக மேற்கிலும் கிழக்கிலும் வைக்கப்பட்ட கும்பம் ஆறினும் மனமகிழ்ச்சியுடன் தியானித்து, ஆவாகித்து, முத்திரைகொடுத்து, பிரதானவேதிகையில் முறைமையினுல் (முன்செய்த) அவைகளெல்லாவற்றையுஞ்செய்து, அன்பினுல் அடியேன்தந்த ஆசனத்திலே குணத்துடனே எழுந்தருளியிருக்கவென்று கூறி, எ-று. ஆறுகுமாரராவார் சுப்பிரமணியர், குமாரர், ஆறுமுகர், சுராக்கிரசர், சேனபதி, சுரேசர். (௧௧)

அரதனங்குயில்பொற்கிரகநன்னீராலருக்கியபாத்தியாசமனம்
பரவிநன்களித்துப்பஞ்சவாரமுதங்கவியம்நற்பலங்கடேனிளநீர்
மருமலர்செறிநீர்வாசநீராட்டிமரைமலர்பொறித்தபட்டாடை
விரவுறத்தரித்துவிளங்குபவீதஞ்சாந்தமுமேதகப்புனைந்து.

இ-ள். இரத்தினங்கள் அழுத்திய பொற்கெண்டியின் நல்லநீரால் அருக்கியம் பாத்தியம் ஆசமனம் என்னும் இவற்றை, துதித்து நன்றாய்க்கொடுத்து, நிறைந்த பஞ்சாமிர்தம், பஞ்சகௌவியம், பழங்கள், தேன், இளநீர், வாசனைபொருந்திய புட்பஞ்செறிந்தநீர், பனிநீராகிய இவற்றால் அபிடேகஞ்செய்து, தாமரைமலர் சித்திரிக்கப்பட்ட பட்டுவஸ்திரத்தைப் பொருந்தும்படி தரித்து, பிரகாசிக்கின்ற பூணூலையும் சந்தனத்தையும் மேன்மைதகச்சாத்தி, எ-று. (௧௨)

அக்கதையுதவிச்சண்பகமலரியம்புயமுதலணபுனைந்து
மிக்குயர்மணியால்விளங்குறுபொற்பூண்மிலைந்துநற்சிரமுதலாக
நெக்குநெக்குருகுமடியவருளமாநிரையிதட்கமலம்வீற்றிருக்குங்
கக்கொளிதவழுமலர்ப்பதமளவுங்கனிவுடன்பூசனைசெய்தல்.

இ-ள். அட்சதைகொடுத்து, சண்பகப்பூ, அலரிப்பூ, தாமரைப்பூ முதலியவற்றைச்சாத்தி, மிக உயர்ந்த இரத்தினத்தாற் பிரகாசிக்கும் பொன்னுபரணத்தையணிந்து, நல்லதலைமுதலாக, நெக்கு நெக்கு உருகாநின்ற அன்பரது உள்ளமாகிய நிரையான இதழ்களையுடைய தாமரைமலரில்வீற்றிருக்கும் கக்குகின்ற ஒளிபரக்குந் தாமரைமலர்போன்ற பாதமளவும் அன்புடன்பூசைசெய்க. எ-று. சிரமுதற் பாதமீறுகப் பூசைசெய்க என்பதாம்.()

வாசவண்டூபம்வளரொளித்தீபம்வனைத்துநல்விரதமாறுடனே
யாசிலான்பாலாலட்டதின்சுவையவமுதளித்தரும்புனலுதவி
நேசமோடடைகாய்நல்கியேபளிதநிறைவிளக்கிட்டுநன்மலராற்
பாசமிலடியாருளத்தினிலகலாக்குகன்றனையருச்சனைபண்ணல்.

இ-ள். வாசனைபொருந்திய வளவியதூபத்தையும், வளரும் ஒளியையுடைய தீபத்தையுங் காட்டி, நல்லசுவை ஆறுடனே குற்றமில்லாத பசுப்பாலோடுசமைந்த இனிய சுவையையுடைய அன்னத்தை நிவேதித்து, நல்ல நீரைக்கொடுத்து, அன்போடு வெற்றிலைபாக்குக்கொடுத்து, நிறைந்த கருப்பூரவிளக்கிட்டு, நல்ல புட்பங்களால் மலமுத்தராகிய அன்பர்மனத்தில் நீங்காத குமாரசுவாமியைப்பூசிக்க. எ-று. (௧௪)

பூவினஞ்சலிசெய்தவரவர்க்கியைந்தபுதுக்கனிமிளகுபானக்க
மாவின்பான்மாவேமுதலியநிவேதித்தருந்துதறரையிடைத்துயிறல்
பாவமின்மறையோர்க்குணவினையருத்திமற்றைநாட்பாரணைபண்ண
லோவறவினையவாறுசெய்திடுதல்விதியதாமிதன்பலனுரைப்பாம்.

இ-ள். புட்பாஞ்சலிசெய்து, அவரவர்க்கு இயைந்த புதிய பழம், மிளகு, பானக்கம், பசுவின்பால், மா முதலியவற்றை நிவேதித்து உண்க. பூமியிற் படுக்க. மற்றைநாளிற் சற்பாத்திரப்பிராமணருக்கு உணவையூட்டிப் பாரணைசெய்க. ஒழிவின்றி இவ்வாறுசெய்தல் (சட்டிவிரத) விதியாம். (இனி) இவ்விரதத்தின்பலனைச்சொல்வாம். எ-று. (௧௫)

வேறு.

ஏழையர்வதுவைவேண்டினேற்றகன்னியரைச்சேர்வர்
வாழுநன்மகவுவேண்டின்மக்களைப்பெறுவரென்றும்
பாழிவாய்மணிச்செஞ்சுட்டிப்பஃறலையனந்தன்றாங்கு
மாழிசூழுலகமெல்லாம்வேண்டினுமடைவர்மாதோ.

இ-ள். தரித்திரர் விவாகஞ்செய்யவிரும்பில் இயைந்த கன்னியர்களை மணஞ்செய்வர். வாழ்கின்ற நல்ல புதல்வரைவிரும்பினால் எந்நாளும் அவரைப்பெறுவர். பருத்தவாயையும் இரத்தினம்பொருந்திய சிவந்த சுடிகையையுமுடைய பலதலைகள்பொருந்திய சேடன் சுமக்கின்ற கடல்சூழ்ந்த உலகத்தையெல்லாம் விரும்பினும் பெறுவர். எ-று. (௧௬)

பலன்விழையாதுநோற்கிற்பாவமதொழிந்துசிந்தை
நலமுறமுமுட்சுவாகிக்குருவினான்ஞானம்பெற்றுப்
புலன்வழிச்செலவுநீக்கிப்போதபூரணவானந்த
வலைகடல்வடிவாங்கத்தனடியிணைநீழல்சேர்வார்.

இ-ள். பயனைக்கருதாது அநுட்டிக்கில், பாவநீங்கி மனம் நன்மை மிக மோட்ச இச்சையுடையர்களாய்க் குருவால் ஞானத்தைப்பெற்று, ஐம்புலத்தின்வழிச் செல்கையைநீக்கி, நிறைந்த ஞானானந்தமாகிய திரையையு

டைய சமுத்திரவடிவமாகும் குமாரசுவாமியின் இருபாதநிழலின்கீழ்ச்சேரு வர். எ-று. (கஎ)

பலஞ்செயிவ்விரதவுத்தாபனம்விதிமுறையாலேகி
னலம்பெறுநியமவாண்டினவிலுமீற்றினிலந்நாளிற்
றுலங்குவைகறையில்வேற்கைத்தோன்றலைநினைந்துசேக்கைத்
தலந்தனையகன்றுகந்தன்றன்பெயர்த்தடத்திற்றோய்ந்து.

இ-ள். பலனைத்தருகின்ற இந்த விரதவுத்தியாபனத்தை விதிப்படிகூறில், நலத்தைப்பொருந்தும் நியமித்தவருடத்திற்சொல்லப்பட்ட முடிவில் நிகழும் அந்தினத்தில் பிரகாசிக்கின்ற புலரிக்காலத்தில் வேலை ஏந்திய திருக்கரத்தையுடைய குமாரசுவாமியைச்சிந்தித்து, படுக்கையையீங்கி, சரவணப்பொய்கையில் ஸ்நானஞ்செய்து, எ-று. (கஅ)

காலையிற்கடன்றீர்த்தப்பாற்சிவகதைகழறக்கேட்டு
வேலனைக்குமரர்தம்மைமின்னனார்தம்மைமுன்போற்
சாலவுமழகுவாய்ப்பச்செம்பொனற்றகட்டிற்செய்து
மாலையிற்பூசைசெய்யுமண்டபம்விதியாலாற்றி.

இ-ள். உதயகாலக்கடனைமுடித்து, அதன்பின் சிவகதைகளைச்சொல்லக்கேட்டு, குமாரசுவாமியை ஆறுகுமாரர்களை இருசத்திகளை முன்போல மிகவும் அழகுவாய்க்கும்படி மாற்றுயர்ந்தபொன்னாலாகிய தகட்டிற்சித்திரித்து, மாலைக்காலத்திற் பூசையைச்செய்யும் மண்டபத்தை விதிப்படி இயற்றி, எ-று. (கக)

குருவுடனறுவர்தம்மைக்கூவியங்கிருத்திப்பின்னர்க்
கரிமுகன்றனைப்பூசித்துச்சங்கற்பங்கழறியெல்லாம்
விரவுறச்சுத்திசெய்துநெல்லரிவிரித்துமேலே
முருகவேளெவர்க்குமேலாமுன்னவன்குடத்தைநாட்டி.

இ-ள். ஆசாரியனோடு ஆறுபேரையழைத்து அங்கேயிருத்தி, அதன்பின், விநாயகக்கடவுளைப்பூசைசெய்து, சங்கற்பஞ்சொல்லி, எல்லாவற்றையும்பொருந்தும்படி சுத்திபண்ணி, நெல்லரிசியைப்பரப்பி, அதன்மேலே எவர்க்கும் மேற்பட்ட பழையராகிய குமாரசுவாமியினது கும்பத்தை ஸ்தாபித்து, எ-று. (௨௦)

தேனவிழ்நறும்பூங்கோதைத்தேவியர்கும்பம்பால்வைத்
தானமூவிரண்டுகும்பங்கிழக்குமேற்காகவைத்துந்
தூநறுங்கலையையாதிதுலங்கிடப்புனைந்துதென்பாற்
பானிறமருட்டும்பச்சைவாலரிபரப்பியங்கண்.

இ-ள். தேன்பொருந்திய அலர்ந்த நறிய பூவைமுடித்தகூந்தலையுடைய இருசத்திகளின்கும்பங்களை இருமருங்கும்வைத்து, இயைந்த ஆறுகும்பங்களைக் கிழக்குமேற்காகவைத்து, (அவற்றிற்குச்) சுத்தமான நல்ல வஸ்திர

முதலானவற்றைப் பிரகாசிக்கும்படி தரித்து, தென்பக்கத்தில் பாலினதுநிற த்தையும் வெல்லும் வெண்மையான பச்சரிசியைப்பரப்பி, அதில், எ-று.()

தென்வடக்காகநான்குஞ்செப்பியகிழக்குமேற்காய்
மன்வரைநான்குங்கீறின்மாமனையொன்பதாகு
நன்குகன்படிவந்தன்னை நடுமனைமேவச்சேர்த்தி
யன்புளசத்திமார்தந் தகட்டினையருகின்வைத்தே.

இ-ள். நிலையான ரேகைகளை, தெற்குவடக்காக நான்கும் சொல்லப்பட்ட கிழக்கு மேற்காக நான்குங் கீறினால், பெருமையானவீடு ஒன்பதாம். நல்ல குமாரசுவாமியின் திருவுருவை நடுவீட்டிற்பொருந்தவைத்து, அன்பையுடைய இருசத்திகளின் தகட்டைப் பக்கத்தில் வைத்து, எ-று. (உ௨)

ஆசறுகுமரரென்போராறுவர்பொன்னுருவந்தன்னை
யீசனேமுதலாவாயுவீறதாய்த்திசையின்வைத்து
மாசறவிளங்கிவைகுங்கும்பத்தின்வாமந்தன்னிற்
றேசுறவாறுகோணநடுவணோர்வலையஞ்செய்து.

இ-ள். குற்றமில்லாத ஆறுகுமாரர்களின் அழகிய திருவுருவங்களை ஈசானதிசைமுதல் வாயுதிசையீறாகிய திசைகளில்வைத்து, குற்றமறப் பிரகாசித்திருக்குங் கும்பத்தின் இடப்பாகத்தில் அழகுறச் சட்கோணத்திற்குமத்தியில் ஒருவளையம் இயற்றி, எ-று. (உ௩)

பிரணவமுடனேயோராறெழுத்தையும்பிறங்கத்தீட்டித்
திரமுறுதினையின்பிண்டிதீபமும்வைத்துச்சேற்கண்
மருவிரிகுழலாரோடும்வரைபகவெறிந்தோன்றன்னை
யருடருகுமரர்தம்மையாகமமுறைபூசித்தல்.

இ-ள். பிரணவத்தோடு சடாட்சரத்தையும் விளங்க எழுதி, திடமான தினைமாவிளக்கையும்வைத்து, சேல்மீன்போலுங் கண்ணையும் வாசனைவிரிந்த கூந்தலினையுமுடைய சத்திகளிருவரோடும் கிரௌஞ்சகிரிபிளவாக (வேலால்) எறிந்த குமாரசுவாமியை, அருள்செய்கின்ற ஆறுகுமாரரை, ஆகமவிதிப்படி பூசிக்க. எ-று. (உ௪)

மூவகைச்சத்தியாகி மூக்கணனுவந்ததாகிப்
பாவமதறுக்குஞ்சீர்த்திப்பத்திரமுதன்மைத்தாய
கூவிளமதனையோராயிரம்பெயர்முறையிற்கூறி
யோவறயாமநான்கும்பத்தியினுவந்துசாத்தல்.

இ-ள். (இச்சை ஞானம் கிரியை என) மூவகைப்பட்டசத்திகளாய், சிவபெருமானால் விரும்பப்பட்டதாய், பாவத்தைக்கெடுக்கும் புகழைப்படைத்த பத்திரங்களின் முதன்மையுடைத்தாகிய வில்வத்தை, ஆயிரந்திருநாமங்களை முறைப்படிசொல்லி ஒழிவின்றி நான்குயாமங்களினும் அன்போடுவிரும்பிச்சாத்துக. எ-று. (உ௫)

கந்தனன்மனுவுமேனைக்கழறுமந்திரமும்வாயின்
மந்தனமாகவோதிவலம்வந்துவணங்கியார்க்கும்
பந்தமதகற்றிவீடுபாலிக்குமறிவானந்த
சுந்தரச்சோதியாயதோன்றனின்கருணைவைத்தே.

இ-ள். குமாரசுவாமியினது நல்லமந்திரத்தையும் ஏனையவாய்ச்சொல்லப்படும் மந்திரங்களையும் வாயினால் இரகசியமாக உச்சரித்து, பிரதக்ஷிணஞ்செய்து, நமஸ்கரித்து, எவர்க்கும் பாசத்தைக்கெடுத்து மோட்சத்தைக் கொடுக்கும் அழகிய சச்சிதானந்த சோதிப்பிழம்பாகிய சுவாமீ, தேவரீருடைய கிருபையைப்பாலித்து, எ-று. (உசு)

அடியனேற்கருடியென்னவருக்கியங்கொடுத்துமின்னேர்
மடவரலியானையோடுநீலமாமழைபோன்மேனி
யுடையவல்லியையுஞ்சிந்தித்தருக்கியமுதவவீசன்
வடுவிழிக்கினிமேலோர்குண்டம்வகுத்ததிலோமஞ்செய்தல்.

இ-ள். அடியேற்கு அருள்புரிக என்று அருக்கியத்தைக்கொடுத்து, மின்போன்ற மடமையையுடைய தெய்வநாயகியாரோடு பெருமையாகிய நீலமுகில்போன்ற திருமேனியையுடைய வள்ளிநாயகியாரையுந் தியானித்து, அருக்கியங்கொடுக்க. குற்றமில்லாத ஈசானதிசையில் ஒரு ஓமகுண்டத்தை உண்டாக்கி, அதிலே ஓமஞ்செய்க. எ-று. (உஎ)

பூரணவோமமுற்றிப்புகல்பிறட்கருமமுற்றி
யாரணமுடிவுங்காண்டற்கரியவன்றன்னைமீண்டு
மீரமோடருச்சித்தப்பாற்கும்பநீரெடுத்தாமூழ்கிச்
சீரணிநீழனோக்கியாவினெய்தானஞ்செய்தல்.

இ-ள். பூரணாகுதியைமுடித்து, சொல்கின்ற மற்றைநாட் கருமங்களை முடித்து, வேதசிரசும் அறிதற்கரிய குமாரசுவாமியைத் திரும்பவும் அன்போடுபூசித்து, அதன்பின் கும்பஜலத்தை எடுத்து ஸ்நானஞ்செய்து, பசு நெய்யை, சிறந்த தன்னிழலே (அதனுட்) பார்த்துத் தானஞ்செய்க. எ-று.()

மேதகுகுரவனோடும்வேதியரறுவர்தங்கட்
காதரம்பெருகப்பொன்னினமைத்தவேள்வடிவத்தோடு
பூதலம்பிறவுமீதறம்பதிபூசைமுற்ற
லேதமிறொழிலாறுள்ளமறையவர்க்கன்னமீதல்.

இ-ள். மேன்மைபொருந்திய ஆசாரியனோடு ஆறுபிராமணருக்கு அன்பு மிகப் பொன்னாற்செய்யப்பட்ட குமாரசுவாமியின் திருவுருவோடு பூமியையும் ஏனையவற்றையும் தானஞ்செய்க. தம்பதிகளுக்குப் பூசைசெய்க. குற்றமில்லாத அறுதொழிலையுடைய பிராமணருக்கு அன்னங்கொடுக்க.எ-று. ()

திடமதாய்ச்சட்டியுத்தாபனத்தையிம்முறையாற்செய்தே
யடையுநற்கேளிர்மக்கள்விருந்தொடுமருந்தனன்றும்
நெடியவிவ்விரதசூளாமணியினைநெறியினோற்றோர்
படியினிற்பெரிதுவாழ்ந்துகுகன்பதம்படர்வார்திண்ணம்.

இ-ள். நிச்சயமாகச் சட்டிவிரத உத்தியாபனத்தை இந்தமுறையாகச் செய்து, வருகின்ற நல்ல சுற்றத்தார் பிள்ளைகள் விருந்தினரோடும் உண்ணுதல் நன்றாகும். பெரிய இந்த விரதசூடாமணியை முறையாக அநுட்டித்தோர் பூமியிற் பெருமையுடையராய்வாழ்ந்து குமாரசுவாமியின் பதவியிற் சேர்வர். (இது) சத்தியம். எ-று. (௬௦)

ஆனவிவ்விரதந்தனையணிகெழுபருமவல்குற்
பானலங்கடந்தஇன்சொற்சசிமுலைபாயுமார்ப
னானகுலிசவேற்கையிந்திரனுவப்பின்வைகி
வானவர்பரவும்வண்கைச்சயந்தனைமகிழ்வினீன்றான்.

இ-ள். இயைந்த இந்தவிரதத்தை அழகுபொருந்திய பருமம் என்னும் ஆபரணத்தையணிந்த நிதம்பத்தையும், பாலின்சுவையைவென்ற இனிய சொல்லையுமுடைய இந்திராணியின் முலைகள்தாக்கும் மார்பினனாகிய தசை யைச்சொரிகின்ற குலிசப்படையையேந்திய கையையுடைய இந்திரன் பிரி யத்தினுடன் அநுட்டித்து, தேவர்கள்புகழுங் கொடை மிக்க கையையு டைய சயந்தனை மகிழ்ச்சியோடுபெற்றான். எ-று. (௬௧)

ஆயிரமிதழ்சூழ்செந்தாமரையினிலமருஞ்செங்கே
ழாயிரந்திங்களன்னவலர்முகத்திருவாழ்மார்ப
னாயிரம்பகுவாய்நாகத்தமிதுயிலமர்ந்தோன்வைகி
யாயிரமளிசூழ்பூந்தார்மதனனையளித்திட்டானே.

இ-ள். ஆயிரம் இதழ்கள்சூழ்ந்த செந்தாமரையாசனத்தில்வீற்றிருக் குஞ் செந்நிறம்பொருந்திய ஆயிரஞ்சந்திரரையொத்த அலர்ந்தமுகத்தை யுடைய இலக்குமிவசிக்கும் மார்பினையுடையரும், ஆயிரம் அகன்ற வாயை யுடைய அனந்தசயனத்தில் அறிதுயில்செய்பவரும் ஆகிய விட்டுணு (இவ் விரதத்தை) அநுட்டித்து, ஆயிரம்வண்டுகள்சூழ்கின்ற பூமாலையையுடைய மன்மதனைப்பெற்றார். எ-று. (௬௨)

வசையறுபுகழ்சேர்பார்த்தனினையநல்விரதம்வைகித்
திசையெலாஞ்சென்றுமன்னர்செருக்கறப்பொருதுவென்று
விசையனென்பெயரும்பெற்றுவிளக்குருப்பசியுந்தோய
நசைகொளுமெழிலும்பெற்றுநலம்பெறவிளங்கினனே.

இ-ள். வடுவற்றபுகழையுடைய அருச்சுனன் இந்த நல்லவிரதத்தை அநுட்டித்து, திக்குகடோறும்போய் அரசருடைய களிப்பறப்போர்செ ய்து (அவரை) வெற்றிகொண்டு, விசயனென்கின்ற நாமத்தையும்பெற்று,

பிரகாசிக்கின்ற உருப்பசியும் புணரும்படி விரும்பும் அழகையும்பெற்று, நன்றாகவிளங்கினான். எ-று. (௩௩)

மகவிலான்வழிச்செல்வானோர்வணிகனம்மயூரவெற்பிற்
புகவந்நாட்சட்டியாகப்பொருந்தியபெரியோர்சொல்லா
லகமிலின்னோன்பையாற்றியகன்றனனதனாலன்னோன்
பகருநல்லெழில்சேர்கின்றவொருமகப்பயந்திட்டானே.

இ-ள். பிள்ளையில்லாத வழிப்போக்கனாகிய செட்டியொருவன் அந்த மயூரகிரியிற்போக, அத்தினஞ் சட்டியாக, அவ்விடத்துள்ள பெரியோர் வாக்கால் பாவமில்லாத இந்தவிரதத்தை அநுட்டித்து, (பின் தன் ஊர்க்குப்) போயினான். அதனாலே அவன், சொல்கின்ற பேரழகையுடைய ஒரு புத்திரனைப்பெற்றான். எ-று. (௩௪)

ஏர்பெறவிந்தமூன்றுவிரதத்தினியல்பையெல்லாம்
பார்புகழ்கஞ்சன்விட்டபடுமதக்களிறுமாய்க்குங்
கார்நிகர்மேனிவள்ளல்காதலனிமித்தமாகச்
சீர்திகழ்கயிலையெய்திச்சிவன்திருமுன்னர்ச்சேர்ந்தான்.

இ-ள். அழகுபெற இந்த மூன்றுவிரதங்களின் இயல்பனைத்தையும், உலகம்புகழுங் கஞ்சன் அனுப்பின உண்டாகின்ற மதத்தையுடைய (குவலயாபீடம்) என்னும் யானையைக்கொன்ற மேகம்போன்ற திருமேனியையுடைய கிருட்டிணன் புத்திரனைப்பெறுங்காரணமாகச் சிறப்புவிளங்குங் கைலைமலையையடைந்து, சிவபெருமானது சந்நிதானத்தையடைந்தான். எ-று. (௩௫)

பலமுனிக்கணங்கள்சூழப்படிகமண்டபத்தின்மீதிற்
புலியதண்மீதுவைகிப்போதமேவிளைந்துநின்ற
வலர்முகச்சனகனாதித்தவத்தினர்க்கறிவுதேற்று
மிலகியபுலிக்கால்வாய்ந்தவிருடிதன்மகனைக்கண்டான்.

இ-ள். (அடைந்த அந்தக்கிருட்டிணன்) பல இருடிகளின் கூட்டஞ்சூழப் பளிங்குமண்டபத்தின்மேற் புலித்தோலின்மீதிருந்து, ஞானமே முதிர்ந்துநின்ற அலர்ந்தமுகத்தையுடைய சனகன்முதலான தாபதருக்கு அறிவைத்தெளிவிக்கும் விளங்கிய வியாக்கிரபாதமுனிவருடைய குமாராகிய உபமன்னியுமுனிவரைக்கண்டான். எ-று. (௩௬)

முனிவனைவணங்கிக்கேட்பமொழிந்தனன்மொழிந்தவண்ண
மனையவன்வைகிவேண்டும்பலத்தினையடைந்தானைய
நினைவுடனிதனைக்கேட்போர்நிகழ்த்துவோர்நெடுநாள்வாழ்ந்து
வினையறவீட்டிற்சேர்வர்சத்தியம்விளம்பினேமால்.

இ-ள். அந்தமுனிவரை நமஸ்கரித்துவினவ, அருளிச்செய்தார். அவர் சொன்னபடி அந்தக்கிருட்டிணன் அநுட்டித்து வேண்டியபலனைப்பெற்றான். புதல்வனே, இருவினையுநீங்கத் தவஞ்செய்திருந்த வீணையில்வல்ல

மகாஇருடியே, பிரியத்தோடும் இதனைக்கேட்பவர் சொல்பவர் (இவ்வுல
கில்) நெடுங்காலம்வாழ்ந்து, இருவினையும்நீங்க மோட்சத்திற்சேர்வர். உண்
மையேசொன்னேம். எ-று. ஏர்பெறவிந்தமூன்று விரதத்தினியல்பையெ
ல்லாம் முனிவனைவணங்கிக்கேட்பமொழிந்தனன் எனமுடிக்க. (௩எ)

வினையறத்தவஞ்செய்துற்றவீணைமாமுனிவவென்று
பனிமலர்ப்பொகுட்டுமேயபண்ணவனுரைப்பமீட்டு
மனகவக்குகனைப்பூசையாற்றினர்யாவர்சொல்கென்
றினிதியம்புதனும்வாணிக்கிறையவனிசைக்கலுற்றான்.

இ-ள். என்று குளிர்ந்த தாமரைப்பொகுட்டில்வீற்றிருக்கும் பிரமா
கூற, திரும்பவும் பரிசுத்தரே அந்தக்குமாரசுவாமியைப் பூசைசெய்தவர்
யாவர் அருளிச்செய்க என்று (நாரதமுனிவர்) மகிழ்ச்சியுடன் வினவுதலும்,
சரசுவதிமணாளராகிய பிரமா சொல்வாராயினர். எ-று. வினையறத்தவஞ்
செய்துற்ற வீணைமாமுனிவ என்னுந் தொடர், முற்செய்யுளோடுசேர்த்துப்
பொருளுரைக்கப்பட்டது. (௩அ)

சட்டிவிரதமுரைத்தசருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௩௪அ.

---

எட்டாவது

## அகத்தியச்சருக்கம்.

அருமைசாறவப்புலத்தியனளித்தசெய்வான
முருவவோங்கியவிந்தவெற்படக்கியவுரவோன்
கரியமாலினைக்கண்ணுதலாக்கினோன்றவத்தாற்
பெருமைவாய்த்துறுமகத்தியனென்றுசொல்பெரியோன்.

இ-ள். அருமைமிக்க தவத்தையுடைய புலத்தியமுனிவன்பெற்ற புத
ல்வனும், ஆகாயமும் உருவும்படி உயர்ந்த விந்தமலையைப் (பாதலத்தில்)
அடக்கிய வலியையுடையவனும், கரிய விட்டுணுவைச் சிவலிங்கமாக்கினவ
னும் ஆகிய தவத்தினாற் பெருமையைப்பெற்றிருக்கும் அகத்தியன் என்று
(எவரும்) சொல்கின்ற பெரியவன், எ-று. (க)

காலமூன்றையுமுணர்ந்தவன்மயின்மலைக்கதையின்
மூலந்தேர்ந்திலன்வெள்ளிபொன்மலைமுதுகுன்றஞ்
சீலமாகியகாளத்திசிராமலையருணை
கோலநீடியபரங்கிரிகொடுங்குன்றேமுதலாய்,

இ-ள். திரிகாலத்தையும் அறிந்தவன். (ஆயினும்,) மயூரகிரியினது சரி
த்திரத்தின் மூலத்தையறியாதவனாய், கைலையங்கிரி, மேருகிரி, விருத்தா

சலம், சிறப்பையுடைய திருக்காளத்தி, திருச்சிராப்பள்ளிமலை, திருச்சோணாசலம், அழகுமிக்க திருப்பரங்குன்றம், திருக்கொடுங்குன்றமுதலாக, எ-று. (௨)

வரைகள்பற்பலவைகவிம்மயூரவெற்பதுவே
விரவுதுங்கநற்கிரியெனவிளங்கியதெவனென்
றரியவானந்தபோதத்திலகன்றிடாவுள்ளம்
பிரியுமாறுளமீதினிலாசங்கைபிடித்தான்.

இ-ள். மலைகள் பற்பலவிருக்க, இந்த மயூரகிரியே உயர்ச்சிபொருந்திய நல்லமலையென விளங்கியது என்னையென்று, அருமையான ஞானானந்தத்தில் நீங்காதமனம் (அதினின்றும்) நீங்கும்படி தன்மனத்திற் சந்தேகங்கொண்டான். எ-று. (௩)

ஐயந்தீர்தரவாயிரகோடிசூரியர்போன்
மெய்யுமம்புயமுகமும்பொன்விழுதுவிட்டன்ன
செய்யவேணியுஞ்சிறந்திடுபுலியதளுடையுங்
கையின்மெல்வரதாபயமான்மழுக்கவினும்.

இ-ள். அந்தச் சந்தேகநீங்க ஆயிரகோடி சூரியரைப்போன்ற திருமேனியும், செந்தாமரைமலர்போன்ற திருமுகமும், பொன்விழுதுவிட்டாற்போன்ற சிவந்தசடையும், சிறப்பான புலித்தோலுடையும், திருக்கரங்களில் வரதம் அபயம் மான்மழுவாகிய இவற்றின் அழகும், எ-று. (௪)

நந்தியூர்தியுமாகவேநலங்கனிசோமக்
கந்தமூர்த்தியாய்மகேசனைமனத்திடைக்கருத
வந்திவான்பிறையணிந்திடுமண்ணலாங்கவன்முன்
வந்துதோன்றினனடியவர்க்கெளிவரும்வள்ளல்.

இ-ள். இடபவாகனமுமாக, சிவபெருமானை அழகுமிக்க சோமாஸ்கந்தமூர்த்தமாய் மனத்திற்றியானிக்க, மாலைக்காலத்தில் ஆகாயத்திற்றோன்றும் இளம்பிறையைச்சூடியவரும், அடியார்க்கெளியவருமாகிய அவர் அந்த அகத்தியமுனிவனுக்கு முன்வந்துதோன்றினார். எ-று. (௫)

அலையுலாங்கடலொருகுடங்கையினெடுத்தயின்றோன்
மலர்கள்கைக்கொடுதூவினன்வணங்கியேதுதிப்ப
நிலவுவேணியனுரைசெய்வான்சாந்தியினிறைந்தாய்
புலனைவென்றியால்வேண்டுவதென்னெனப்புகன்றான்.

இ-ள். திரைபரக்குங்கடலையள்ளி ஒரு உள்ளங்கையிற்பானித்த அகத்தியமுனிவன் புட்பங்களைக் கைகளிற்கொண்டுசொரிந்து நமஸ்கரித்துத் தோத்திரஞ்செய்ய, பிறையையணிந்த சடாமுடியையுடைய சிவபெருமான் அருளிச்செய்வார்: சாந்தகுணத்தில்நிறைந்தவனே, ஐம்புலனையுமடக்கினை. (அங்ஙனமாக இனி) உனக்குவேண்டியதென்னையென்று திருவாய்மலர்ந்தருளினார். எ-று. (௬)

கருணைவாரிதிசொற்றமைகேட்டுளக்களித்து
வெருவுறுத்திறலசமுகிமைந்தரைவிட்டும் [ந்
பொருவின்மாமுனி யுரைசெய்வான்பொருப்பெவற்றினுக்கு
தரையின்மேலதாய்மயின்மலைசார்ந்திருந்திறமென்.

இ-ள். அச்சமில்லாதவலியினையுடைய அசமுகியின்புதல்வராகிய வில்வலன்வாதாவி என்னும் இருவரையும் வதைத்த கெரில்லாத அகத்தியமகாமுனிவன், கிருபைக்கடலாகிய சிவபெருமான் அருளிச்செய்தமையைக்கேட்டு, மனமெகிழ்ந்து, விண்ணப்பஞ்செய்வான். மலைகளனைத்திற்கும் பூமியிலே மேன்மையுடைத்தாய் மயூரகிரி இருக்குந்தன்மை என்னை? எ-று. (௭)

வேண்டுநற்பலன்விரைவினிலுதவலென்செவ்வே
ளீண்டகாதலாலீங்குறுதலைவதென்னெனத்துந்
தூண்டல்செய்திடாச்சுடரவதுகளனைத்தெம்மை
யாண்டநாயகவறைந்திடவேண்டுமென்றிரந்தான்.

இ-ள். குமாரசுவாமி வேண்டிய நல்லபயன்களை விரைவிற்கொடுப்பதென்னை? மிக்கவிருப்பினால் நீங்காமல் (அதனில்) வீற்றிருப்பது என்னை? (இவை) அனைத்தையும் தூண்டாமணிவிளக்கைப்போன்றவரே, பாசத்தைநீக்கி இச் சிறியேனை அடிமைகொண்டதலைவரே, அருளிச்செய்தல்வேண்டும் என்று வேண்டிக்கொண்டான். எ-று. (௮)

செந்தமிழ்க்கொருகுரவகேளெனச்சிவன்செப்புங்
கந்தனேறியமயிலினைமுன்னொருகாலம்
வந்தகோபத்திற்சபித்தனனதங்கனவணங்கி
யெந்தையுய்யுமாறருள்கெனவருதுமென்றிசைத்தான்.

இ-ள். (அப்பொழுது) செந்தமிழுக்கு ஒரு ஆசாரியனேகேள் என்று சிவபெருமான் அருளிச்செய்வார். நமதுகுமாரன் (வாகனமாகக்கொண்டு) ஏறிய மயிலை, முன்னொருகாலத்தில் உண்டானகோபத்தாற் சாபமிட்டான். அம்மயில் நமஸ்கரித்து, எம்பெருமானே உய்யும்வழியை அருளிச்செய்க என்று பிரார்த்திக்க, (நீபோவாய்) அவ்விடத்தில் யாம் வருவேமென்று கூறினான். எ-று. (௯)

தோகைவெற்புருவாகுமருள்செயத்துணிந்து
வாகைவெற்குகன்சென்முகவடிவமாய்வந்து
வேகமார்திறற்சூரனைத்தடிந்துபின்விளங்க
மாகமோங்கியமயின்மலைவந்துவீற்றிருந்தான்.

இ-ள். மயில், மலைவடிவமாகுதலும், (அதற்குத்) திருவைபுரியத்துணிந்து, வெற்றியையுடைய வேலையேந்திய நமதுகுமாரன் அறுமுகவடிவையுடையனுயவதரித்து, வேகம்நிறைந்த வலியினையுடைய சூரனைவதைத்து, அதன்பின் பிரகாசமாக, ஆகாயம்வரைக்கும் உயர்ந்த மயூரகிரியில்வந்து வீற்றிருந்தான். எ-று. (௧௦)

கோதைவேற்குகற்காதியிலளித்துயாங்கொடுத்த
காதலான்மயிலதிகமிவ்வரையுமிக்கதிக
மோதுபண்டையநட்பினுற்சேயுமாங்குவந்துற்
றேதமில்பயன்விரைவினின்விழைந்தவர்க்கீந்தான்.

இ-ள். மாலையணிந்த வேற்படையையுடைய நமதுகுமாரனுக்கு யாம் முன் உண்டாக்கி கொடுத்தது ஆதலினுல், மயில் விசேடித்ததாம். (அது பற்றி) இந்த மயூரகிரியும் மிகவிசேடித்ததாம். சொல்லப்பட்ட பழைய உறவால் நமதுகுமாரனும் அங்கே விரும்பியிருந்து, விரும்பினவர்க்குக் குற்றமில்லாத பயன்களை விரைவிற்கொடுத்தான். எ-று. (கசு)

வீறுசேர்படைவீட்டினிலதிகமிவ்வீடாங்
கூறுமுற்பதிக்கதிகமீதென்னெனக்குறிக்கின்
மாறிறன்பெரும்பதிகுறித்தேகுமோர்வள்ளற்
காறுதங்கியபதியெலாமுயர்வெனலாமோ.

இ-ள். பெருமைபொருந்திய படைவீடுகளில் இந்தவீடு அதிகவிசேடமுடைத்தாம். சொல்லப்படும் முந்தியபடைவீடுகளுக்கு இந்த மயூரகிரி விசேடமாவதென்னையென்று கருதில், நிகரில்லாத தன்னகரைக்குறித்துப் போகின்ற ஒருதலைவனுக்கு வழியிற்பொருந்திய நகரமெல்லாம் உயர்வென்றுசொல்லுதல் கூடுமோ! எ-று. (கஎ)

வேறு.

மதியிற்சிறந்தகார்த்திகையில்வருகார்த்திகைநாளெவருமந்தப்
பதியிற்புகுந்தன்றுபவசியாப்பகர்மாமலையைவலங்கொண்டு
புதியவிரைசேர்மலர்க்கடம்புபுனைநங்குமரற்பணிந்தனரே
லதிருங்கழல்சூழமதுமைந்தனடிமாமலர்க்கீழகலாரே.

இ-ள். மாதங்களிற்சிறந்த கார்த்திகைமாதத்தில்வருகின்ற கார்த்திகை நட்சத்திரத்தில் எவர்களும் அந்த மயூரகிரியென்னும் ஸ்தலத்திற்போய், அற்றைநாள் உபவாசஞ்செய்து, சொல்லப்பட்ட பெருமையுடைய அக்கிரியைப் பிரதட்சிணஞ்செய்து, அன்றலர்ந்த வாசனைசேர்ந்த கடப்பமலரையணிந்த நமதுகுமாரனை வணங்குவாராயின், ஆரவாரிக்கும் வீரக்கழலையுடைய அவன் கால்களாகிய தாமரைமலரின்கீழ்ப் பிரியாதிருப்பர். எ-று.()

வினைதீரனையதினஞ்சிறப்புச்செய்தோரவரேயறவித்தா
மனையோர்பெருமையளப்பரிதாலமரர்க்கிறைவரவரன்றே
கனமாமலரோன்பசியபயறரிசிற்கலந்துபதஞ்செய்து
நினைவினிவேதித்தம்புயத்தினருச்சித்தமரரொடுநிற்பான்.

இ-ள். குற்றநீங்கிய அத்தினத்தில் (நமதுகுமாரனுக்கு) உபசாரஞ்செய்தவரே தருமவித்தாவர். அவருடையபெருமை அளவிடல்கூடாது. தேவர்களுக்குத்தலைவர் அவர்களன்றே! மேலாகிய தாமரை ஆசனனுன பிரமன் பச்சைப்பயற்றை அரிசியுடன்கலந்து அன்னமாக்கி அன்போடு நிவேதனஞ்

செய்து, தாமரைமலர்களாற்பூசித்து, தேவர்களோடு (சேவித்து) நிற்பான். எ-று. சிறப்புச்செய்தோர் என்பதற்கு நமது குமாரனுக்குத் திருவிழாச்செய்தவர் எனினும்பொருந்தும். (௧௪)

அதனுலசுரர்நலிவின்றியரியபதத்தினினிதிருந்தான்
விதியான்மனிதர்பூசைசெய்யில்வேலாவலையமுழுதளித்துச்
சிதையாப்பிரமன்மால்பதங்கள்சிதையும்பொழுதுஞ்சிதையாநங்
கதியேபெறுவரெனவருளிக்கயிலைமலையிற்போயினனுல்.

இ-ள். அதனுலே (அப்பிரமன்) அசுரர்செய்யும் வருத்தமின்றி அரிய நிலைமையில் மகிழ்ச்சியுடனிருந்தான். விதிப்படி மானுடர்பூசைசெய்தால், பூமிமுழுதையும் ஆண்டு அழியாத பிரமவிட்டுணுக்களின் பதவிகள் அழியும்பொழுதும் அழியாத நமது பதவியைப்பெறுவரென்று (சிவபெருமான்) அருளிச்செய்து, கைலையங்கிரியிற்போயினுர். எ-று. (௧௫)

தென்பாருயராவகைநிறுத்துஞ்சிறுமாமுனிவன்சிவபெருமா
னன்பான்மொழிதலாற்சிரத்தையடைந்துமேகமறைத்தகலு
மின்பாய்பரிதியெனவுளத்தினையமகன்றுமிகவிளங்கி
யென்பாற்கருணையிருந்தபடியிதுவோவென்றுவினிதுவந்தான்.

இ-ள். தட்சணபூமி உயராதபடி (சமமாக) நிறுத்திய வாமனனுகிய அகத்தியமகாமுனிவன் சிவபெருமான் (இவ்வாறு தன்னிடத்துவைத்த) அன்பினுலே அருளிச்செய்தமையால் விசுவசித்து, மேகபடலம்மறைத்துப் (பின்) நீங்கப்பெற்ற ஒளிபரந்த சூரியனைப்போல மனத்திற் சந்தேகநீங்கி மிகப்பிரகாசித்து, அடியேன்மாட்டு (இப்பெருமானது) கிருபையிருந்தபடி இதுவோ என்று மிகமகிழ்ந்தான். எ-று. (௧௬)

பழுதில்சிறப்பினயிராணிபருமுத்தணிந்துவீங்கியெழில்
வழியுங்குரும்பைமுலையுழுதமார்பன்முதலோர்மணிமுடிக
ளுழுதுதழும்புபடும்பெரியபசுந்தாட்கமலத்துயர்முருகற்
றொழுவானடைந்துகுறுமுனிவன்றேகைமலையினுறச்சென்றான்.

இ-ள். குற்றமில்லாத அழகையுடைய இந்திராணியின் பருத்த முத்துவடத்தையணிந்து பூரித்து அழகுவழிகின்ற குரும்பைபோலும் முலைகள் உழுத மார்பினையுடைய இந்திரன்முதலாயினோரின் இரத்தினமழுத்திய கிரீடங்கள் தாக்குதலாற் றழும்புபடும் பெருமைபொருந்திய பசிய பாததாமரைகளையுடைய உயர்ந்த குமாரசுவாமியை அகத்தியமுனிவன் வணங்கும்படி அடைந்து மயூரகிரியினது சமீபமாகச்சென்றான். எ-று. (௧௭)

வேறு.

காதம்வீசியசந்தனங்கடமுகிலலைத்துக்
கோதிலாதபொன்மின்னுமிழ்குலமணிவரன்றிப்
போதுலாவரவானயாறிறங்குவபோலச்
சீதவார்புனலருவியாமிறங்குவசிறப்ப.

இ-ள். காததூரம்வரைக்கும் (நறுமணத்தை) வீசுகின்ற சந்தனமரங்களையும் மணங்கமழ்கின்ற அகிலமரங்களையும் முரித்து, குற்றமில்லாத பொற்பொடியையும் ஒளியைக்காலுந் திரளான இரத்தினங்களையுங்கொழித்து, புட்பங்கள்பரம்ப ஆகாயகங்கை இறங்குமாறுபோல (அம்மலையில்) அழகாக, குளிர்ச்சியையுடைய வடிகின்ற நீரருவியாறுகள் இறங்குவன. எ-று. (௧௮)

தும்பிபாட்டயர்மாமலர்களுலியசுனையிற்
றும்பியின்றொகைபிடியொடுந்துறைதொறுந்தோயு
மம்பைநேர்விழியரம்பையர்தம்முடனெயின
ரம்பைநேர்கடிதடத்தினராடியேயகல்வார்.

இ-ள். வண்டுகள் (கீதங்களைப்) பாடுகின்ற பெருமையாகிய புட்பங்கள் நெருங்கிய சுனைகளிலுள்ள துறைகள்தோறும் யானைக்கூட்டங்கள் பெண்யானைகளோடும் முழுகும். பாணத்தையொத்த கண்ணையுடைய தெய்வப்பெண்களோடும் அழகிய பாம்பின் படத்தைப்போன்ற நிதம்பத்தையுடைய வேட்டுவப்பெண்கள் விளையாடிப்போவார்கள். எ-று. (௧௯)

புலவராமெனக்கொடாவிடிற்கொடுத்திடிற்புகலும்
புலவர்தங்கவிமதக்குறும்படக்கெழில்புனைவிட்
புலவரம்பையர்வானவர்புகுந்துநின்பாதம்
புலவரந்தருகெனக்குகற்றொழுதனர்போவார்.

இ-ள். (தமக்குக்) கொடாவிடினும், கொடுத்திடினும், (அவர்களைப்) புலவராமெனச்சொல்லுஞ் (சொற்சித்திரத்தையுடைய) கவிஞர்களது கவிமதமாகிய குறும்பை அடக்குகின்ற அழகைப்பொருந்திய விண்ணுலகத்திலுள்ள தெய்வமகளிரும் தேவர்களும்வந்து, தேவரீருடையபாதத்தை அணையும்படி வரத்தைத்தந்தருளுக என்று குமாரசுவாமியை வணங்கிப்போவார்கள். எ-று. கொடாவிடில் என்பதனோடு புலவர் என்பதனையியைத்துப் பொருள்கொள்ளுங்கால், புல்லவர் ஆமெனப் பிரித்துப் பொருள்கொள்க. (௨0)

மாலையாமொருகுழையனேர்மருதின்பாலிளைய
மாலையேநிகர்த்தெழிறிகழ்பூவைபூமலரு
மாலமஞ்ஞையம்மகளிரஞ்சாயலேமானும்
மாலையோதியர்வாயெனவாம்பல்வாய்மலரும்.

இ-ள். கிருட்டிணனது தமையனாகிய ஒற்றைக்குண்டலத்தையுடைய பலராமனைப்போன்ற (வெண்மையான) மருதமரத்தின்பக்கத்தில் அவனுடைய தம்பியாகிய கிருட்டிணனையொத்து அழகுவிளங்கும் காயா, புட்பங்கள் அலரும். ஒழுங்கான மயில்கள் அழகிய மகளிரது சாயலைப்போலும். மாலையையணிந்த கூந்தலையுடைய பெண்களின் வாயைப்போலச் செவ்வாம்பல்விரியும். எ-று. (௨௧)

வேங்கைபுன்னைசெஞ்சந்தனஞ்சந்தனம்வில்வங்
கோங்குபாடலஞ்சண்பகங்கொன்றையாமலகந்
தீங்கில்சம்புமாப்பலவிலவோடுசேணுயர்ந்தே
யாங்குமேவலினதன்மிசைத்தவழ்வனமழைக்கார்.

இ-ள். வேங்கைமரமும், புன்னைமரமும், செஞ்சந்தனமரமும், சந்தன மரமும், வில்வமரமும், கோங்கமரமும், பாதிரிமரமும், சண்பகமரமும், கொன்றைமரமும், நெல்லிமரமும், குற்றமில்லாத நாவல்மரமும், மாமர மும், பலாமரமும், இலவமரமும் ஆகாயம்வரைக்கும் உயர்ந்து அவ்விட த்திலிருத்தலால், சூற்கொண்டமுகில்கள் அதன்மீது தவழுவன. எ-று. (உஉ)
கோங்குகற்பகம் எனவும்பாடம். கற்பகம் - வாழை.

இன்னதன்மையவளந்திகழ்மயின்மலையெய்தி
யுன்னிலோதிடிலொருமுறைகாண்குறிற்றீண்டின்
மன்னுபாவம்போய்முத்தியைவழங்குசீர்வாய்ந்த
தன்னைநேரிலாச்சரவணதடத்தின்மூழ்கினனால்.

இ-ள். இத்தன்மையான வளங்கள்விளங்குகின்ற மயூரகிரியை அடை ந்து, சிந்திக்கில் பேசில் ஒருதரங்காண்கில் பரிசிக்கில் நிலையானபாவங்கழிய மோட்சத்தைக்கொடுக்கும் சிறப்புவாய்ந்த தனக்கு நிகர் பிறிதில்லாத சர வணப்பொய்கையில் ஸ்நானஞ்செய்தான். எ-று. (உ௩)

குறியகாலினன்மலைவலஞ்செய்துதேன்றுளிக்கு
நறியமாமலர்த்தாரினன்சினகரநண்ணி
யறிவினுக்கறிவாய்நிறையமுதவாரிதியைப்
பிறிவிலன்பொடுபூசனைபுரிந்தனன்பெரியோன்.

இ-ள். குறியகாலாற் கிரியைப்பிரதட்சிணஞ்செய்து, தேனைச்சொரி கின்ற நறுமணங்கமழும் பெருமையான பூமாலையையணிந்த குமாரசுவாமி யினது கோயிலையடைந்து, அறிவுக்கும் அறிவாகவியாபித்த அமுதசாகரத் தை நீங்காத அன்புடன் அகத்தியமுனிவன் பூசைசெய்தான். எ-று. (உ௪)

தன்மம்வேண்டிலன்றனிவிசும்பாண்டுமீள்வதனாற்
பொன்னைவேண்டிலன்மூப்பகைகொண்டுபோதலினான்
மின்னைவேண்டிலன்யவ்வனமகறலின்மேலோய்
மன்னுநின்பதம்வேண்டினன்வழங்கிடவேண்டும்.

இ-ள். (அடியேன்) ஒப்பற்ற சுவர்க்கபோகத்தை அநுபவித்துத் திரும் புதலால் தருமத்தைவிரும்பேன். (தாயத்தார், கள்வர், அரசர்) என்னும் மூன்றுபகைகொண்டுபோதலினால் பொன்னைவிரும்பேன். யௌவனதசை நீங்குதலினால் பெண்ணைவிரும்பேன். மேலவரே, நிலையான தேவரீருடைய பாதத்தையே விரும்பினேன். (அதனைத்) தருதல்வேண்டும். எ-று. (உ௫)

காவின்மூட்படைப்பூத்தலைக்கடுஞ்சினச்சேவற்
கோலமல்கியபதாகையாரெனக்குகன்பதத்திற்
சீலமில்கிரவுஞ்சநற்கிரியினைச்சினக்குஞ்
சாலுமன்புடைமாமுனிசாந்தினன்பணிந்தான்.

இ-ள். மூட்பொருந்திய காலாகிய படையினையும், (தோன்றிப்) பூப்போன்ற குட்டுத்தலையையும், கடிய கோபத்தையுமுடைய சேவலாகிய அழகுநிறைந்த கொடியையுடையவரே என்று, குமாரசுவாமியின்பாதத்தில் வஞ்சனைபொருந்திய கிரவுஞ்சமாகிய சிறந்தமலையைக்கோபித்த நிறைந்த அன்பையுடைய அகத்தியமகாமுனிவன் விண்ணப்பஞ்செய்து நமஸ்கரித்து, எ-று. (உகூ)

நிறைந்தபேரருள்பெற்றனவ்விடைநீங்கி
யுறைந்தபிப்பலவனத்தினினுத்தரதிசையி
னறைந்தகன்னலோரிரண்டுநன்னெறியெனவடைந்து
சிறந்தசீர்ச்சிவகுறியினைப்பதிட்டைசெய்தனனால்.

இ-ள். நிறைவான பெருங்கிருபையைப்பெற்று, அவ்விடத்தினின்று நீங்கி, (தான்) இருந்த அரசவனத்தின் வடதிசையில் இது நல்வழியென்று சொல்லப்பட்ட இரண்டுநாழிகைவழிபோய், சிறந்த புகழையுடைய சிவலிங்கத்தைப் பிரதிட்டைசெய்தான். எ-று. (உஎ)

பாவனையாவாகித்தன்முதலனபரிவிற்செய்து
தீவியநறுந்தேன்கொண்டுசிறப்புறச்சிரந்தொட்டாட்டி
யோவில்சாத்துவனைநிவேதனமுதனுவந்தாகல்கிப்
பூவினாலருச்சித்தேத்திவணங்கினன்புணரியுண்டான்.

இ-ள். கடலையுண்ட அகத்தியமகாமுனிவன், தியானம் ஆவாகனம் முதலியவற்றை அன்போடுசெய்து, இனிய நறியதேனால் சிறப்புமிகச் (சிவலிங்கத்தின்) சிரசிற்றீண்டி அபிஷேகஞ்செய்து, ஒழிவின்றி அணியற்பாலனவற்றையும் நிவேதனமுதலானவற்றையும் விரும்பிச்செய்து, புட்பங்களால் அருச்சனைபுரிந்து துதித்து நமஸ்கரித்தான். எ-று. சிரந்தொட்டாட்டி என்பதற்குச் சிரமுதலாக அபிஷேகஞ்செய்து எனவும் பொருள்கொள்ளலாம். (உஅ)

கொய்ம்மலர்க்குழலுலோபாமுத்திரைகொழுநனாட்டுந்
தெய்வநாயகன்றன்மேனிச்செழுமதுவழிந்துவீழ்ந்து
வையமீததிரவோடிவைகையுமகிழும்வண்ணஞ்
செய்குளம்பெருக்கிநீடுந்திருநதியாயிற்றன்றே.

இ-ள். கொய்யப்படும் பூவைமுடித்தகூந்தலையுடைய லோபாமுத்திரைக்கு நாயகனாகிய அகத்தியமுனிவன் அபிஷேகஞ்செய்யும் தேவநாயகராகிய சிவபிரானது திருமேனியிற்பொருந்திய செழுமையாகிய தேன், வழிந்து விழுந்து பூமியின்மீது ஒலியுண்டாக ஓடி, வைகைநதியும் மகிழ்ச்சிகொள்ளும்படி வயல்கள் குளங்கள் பெருகச்செய்து, பெரிய அழகிய நதியாயிற்று. எ-று. (உகூ)

வேறு.

முள்ளிலையமுடைத்தாழையிருமருங்குமொய்த்திலகும்
வெள்ளமதுமாறாதுவெண்டரளங்கொழித்தெறியுந்
துள்ளுதிரையலைத்தோங்குமணற்குன்றினலந்தோயுந்
தெள்ளமுதவிசைபாடுந்தேனாறுதேனாறு.

இ-ள். ஒழியாமல் வெண்மையாகிய முத்துக்களைக் கொழித்துவீசுந் தேன்பெருக்கிலே துள்ளுகின்ற அலைகள் அலைத்தலினால் உயருகின்ற முட்கள்செறிந்த இலைகளையுடைய வளைந்ததாழைகள் இருபக்கமும் நெருங்கிவிளங்கும் மணற்குன்றுகளினழகுபொருந்திய தேனாற்றில், வண்டுகள் (இசைநூல்) முறைப்படி தெளிந்த அமுதுபோன்ற இன்னிசைகளைப்பாடும். எ-று. அலைகளலைத்தலினால் ஓங்கும் மணற்குன்று, தாழை இருமருங்கும் மொய்த்திலகு மணற்குன்று எனத் தனித்தனிகூட்டுக. (௬0)

பொன்னிநதிச்சிரகபணிபொற்கரத்துமாமுனிவன்
வன்னமயின்மலையிடத்துவந்துமீளவுங்குகனைப்
பின்னமிலன்பொடும்வணங்கியரிதின்விடைபெற்றகன்று
தென்னிசைவண்டமிழ்மணக்கும்பொதியவரைதனிற்சேர்ந்தான்.

இ-ள். காவிரிநதிபொருந்திய கமண்டலத்தையேந்திய அழகிய கையையுடைய அகத்தியமகாமுனிவன், சிறந்தமயூரகிரியிற் பின்னரும்வந்து, குமாரசுவாமியை மெய்யன்புடன் நமஸ்கரித்து, அரிதாக விடைபெற்றுப் போய், அழகிய இசையையுடைய வளவிய தமிழ்விளங்கும் பொதியகிரியிற் சேர்ந்தான். எ-று. (௬க)

அகத்தியச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௩எ௬.

---

ஒன்பதாவது

## வசிட்டர்கதையும் விசுவாமித்திரர்கதையும் உரைத்தசருக்கம்.

---

தெய்வவகத்தியனற்கதையீதுதெரித்தோமாற்
சைவவசிட்டனியற்றியபூசைதனைச்சொல்வாம்
பைவரியாடரவம்புனைகின்றபரன்றன்னை
யைவகையாயபுலன்களடக்கியகங்கொண்டோன்.

இ-ள். தெய்வத்தன்மையினையுடைய அகத்தியமுனிவனது நல்லகதையாகிய இதனைச்சொன்னோம். சைவனாகிய வசிட்டமுனிவன் செய்தபூசனையை (நாரதமுனிவனே) இனிச்சொல்வோம். படத்தையுடைய வரிபொ

ருந்திய ஆடுகின்ற பாம்பையணிந்த சிவபெருமானை, ஐம்புலன்களையடக்கித் தியானித்தவனும், எ-று. (க)

இரவிகுலக்குருவானவசிட்டனெனுஞ்செல்வன்
மருவினன்மாநிலம்வைகியருந்தவமாற்று
புரிபொழுதவ்வழிவந்தனனீண்டபுவிக்கெல்லா
மொருகுடைநீழலளித்திடுகாதிதனோர்மைந்தன்.

இ-ள். சூரியகுலத்துக்கு ஆசாரியனுமாகிய வசிட்டமுனிவன் என்னும் அருட்செல்வன் பெரியபூமியில்வந்திருந்து அரியதவத்தை நீங்காது செய்யும்பொழுதில், நீண்ட பூமிமுழுதுக்கும் ஒருகுடையால் நிழலைத்தரும் காதிமகாராசனுடைய ஒப்பற்ற குமாரனாகிய கௌசிகன் அவ்விடத்தில்வந்தான். எ-று. (உ)

வாட்டிறல்வீரரொள்வேற்றிறல்வீரர்மருங்கெய்த
வேட்டமதாடிமெலிந்தவணெய்தியமேலோனுங்
கோட்டமில்கற்பினருந்ததிவெஃகியகொண்கன்றன்
றாட்டுணைவீழ்ந்துபணிந்தனன்மன்றறருந்தாரான்.

இ-ள். வலியவாள்வீரரும் ஒள்ளிய வலியவேல்வீரரும் பக்கத்தில்வர, வேட்டையாடி மெலிவடைந்து அவ்விடத்தில்வந்த வாசனையைத்தரும் மாலையையணிந்த மேலோனாகிய கௌசிகனும், கோடாத கற்பினையுடைய அருந்ததிவிரும்பிய நாயகனாகிய வசிட்டமுனிவனுடைய இரண்டு கால்களில்விழுந்து நமஸ்கரித்தான். எ-று. (ங)

ஆசிவழங்கியிருக்கெனவாசனமாங்கீந்து
வாசனைநீர்கொடுதாகமகற்றிமகிழ்ந்துண்ணும்
போசனமானதருத்திநலந்திகழ்பொற்பூணுந்
தூசுமளித்துபசாரமுமன்பொடுசொற்றானல்.

இ-ள். (வசிட்டமுனிவன்) அப்பொழுது ஆசிகள்கூறி, இருக்க என்று ஆசனத்தைக்கொடுத்து, வாசனைபொருந்தியநீரால் தாகத்தைநீக்கி, விரும்பி உண்ணுமுணவை உண்பித்து, அழகுவிளங்கும் பொன்னாபரணத்தையும் வஸ்திரத்தையுங்கொடுத்து, அன்போடு நயமொழிகளையுங்கூறினான். எ-று.

பல்வகையாயகறித்திரணெய்ததிபாலாறு
யெல்லையில்சேனையொருங்குணநல்கியதென்னையென்
றெல்லையின்மீண்டுதவச்செயலேநலமென்றுன்னிச்
செல்ககடற்படைநாட்டிடையென்றுரைசெய்தானே.

இ-ள். பலவகைப்பட்ட கறிக்கூட்டத்தோடு நெய் தயிர் பாலாகிய இவற்றை ஆறாக அளவற்றசேனைகள் ஒருசேர உண்ணும்படிகொடுத்தமை என்னை என்று, திரும்ப விரைவில் தவச்செய்கையே நலம் என்றுகருதி, (கௌசிகன்) கடல்போன்றசேனைகள் நாட்டிற்செல்க என்று சொன்னான். எ-று. (ரு)

அரசரறம்பெரிதன்றுதவம்பெரிதாமென்று
மருவிரிகின்றமலர்த்தருவார்ந்தவனத்தெய்தி
யொருபொழுதூண்ணாலுணவறல்வீழ்சருகுணல்காலைப்
பருகுதல்செய்துசெல்வாயுவையோட்டாவகைபற்றி.

இ-ள். இராசதருமம்பெரிதல்ல, தவமே விசேடித்ததாம் என்று, வாசனைவிரிகின்ற புஷ்பங்கள்பொருந்திய மரங்கள்நிறைந்த காட்டையடைந்து, ஒருநேரமூண்ணுதல், தண்ணீரைப்பருகல், விழுகின்ற சருகைப்புசித்தல், வாயுவையுண்ணல் ஆகிய இவற்றை (முறையே) செய்து, செல்லுகின்ற பிராணவாயுவை ஓடாதபடி தம்பித்து, எ-று. (௬)

விகற்பமிறந்தசமாதியிருந்தனன்விண்ணோர்க
ளகத்தினிலற்புதமெய்தினரங்கணியார்தோன்றி
முகத்தின்மலர்ந்துமுதுக்குறைவெய்தியமுனியாகிச்
சகத்தினைதிர்ந்தனையாவர்நினக்கிணைதக்கோயே.

இ-ள். நிருவிகற்பசமாதியிலிருந்தான். தேவர்கள் மனத்தில் அதிசயமுற்றார்கள். அவ்விடத்தில் யாம் வெளிப்பட்டு முகத்தில் மலர்ச்சிகொண்டு தகுதியுடையானே, பேரறிவையுடைய முனிவனாய் உலகில் சிகரற்றாய், யாவர் உனக்கு ஒப்பாவார். எ-று. (௭)

என்றுமொழிந்தனமேகினமன்னனெனும்பேர்போய்
யன்றுமுதற்றவமாமுனியாகியமர்ந்தானுன்
மின்றிகழாதவன்மாமரபுற்றவன்வீறுற்றோன்
குன்றுறழ்தோளினன்மெய்த்திரிசங்குவெனுங்கொண்டல்.

இ-ள். என்று கூறி (யாம்) போயினோம். அன்றுமுதலாக அரசன் என்னும் பெயர்போய்த் தவத்தையுடைய பெரிய முனிவனாயிருந்தான். (அந்நாளில்) ஒளிவிளங்கும் சூரியனது பெருமையாகிய குலத்தில் அவதரித்தவனும், பெருமையுடையோனும், மலைபோன்ற புயங்களையுடையோனும் ஆகிய மெய்ம்மையுடைய திரிசங்கு என்னும் (பிரதியுபகாரங் கருதாது கொடுத்தலினால்) மேகம்போன்றவன், எ-று. (அ)

வேறு.

மும்மதம்பொழியுமோடைமாகளிறுமொய்யுளைப்பரிபரந்துதித்
தும்முவெங்கொலைசெய்வாளர்வேலரணிதோமரத்தினர்கள்சூழ்வர
விம்முகம்பலையியந்துவைப்பவெழுதூளிவிண்ணகமறைப்பவே
செம்மைவாளிரவிநாணவேபரிகொடேரினேறிநனியேகினான்.

இ-ள். மும்மதத்தைச்சொரியும் நெற்றிப்பட்டத்தையுடைய கரியயானைகளும், கூட்டமான பிடர்மயிரையுடைய குதிரைகளும், பரம்பி அக்கினியைச்சொரியும் கொடியகொலைசெய்கின்ற வாளையுடையவீரரும், வேல்வீரரும், அழகிய இருப்புலக்கைவீரரும் சூழ்ந்துவர, மிக்க ஒலிபொருந்திய

வாத்தியங்கள்முழங்க, எழுகின்ற தூளி ஆகாயத்தைமறைக்க, செவ்வொளியையுடைய சூரியன் வெட்கமடைய, குதிரைபூண்ட தேரின்மீதேறி விரைவாய்ச்சென்றான். எ-று. (கூ)

கண்டமன்னவருளம்பதைத்துலவுகாலயர்ந்தெதிர்புகுந்துநின், றண்டகோளகையளந்தசீர்திகழுமண்ணனிற்கெதிர்கொல்யாமென, வொண்டளிர்க்கைதலைமேற்புனைந்துதொழ வொல்லைசென்றுபரமுனியே, மண்டுமன்பினுளமுருகுகின்றதொர் வசிட்டமாமுனியை யெய்தினான்.

இ-ள். பார்த்த அரசர்கள் மனம்பதைத்து நடக்கின்ற கால்களயர்ந்து முன்சென்றுநின்று, அண்டகடாகத்தையுமளந்த புகழ்விளங்கும் அரசனே, உனக்கு நிகர் சிறியோமா என்று ஒள்ளிய தளிர்போன்ற கைகளைச் சிரமேல்வைத்து வணங்க, விரைவிற்போய்ப் பரம்பொருளைத்தியானித்து மிக்க அன்பினால் மனம் உருகுகின்ற ஒப்பற்ற வசிட்டமகாமுனிவனை அடைந்தான். எ-று. (கo)

அதிருமோசையினின்யோககன்றுமுனியமாவங்கதுதெரிந்துபோய், விதியினிற்சரணமிசைவணங்கிடலுமெழுகவென்றுரைவிளம்பியே, மதிவலோயிவணடைந்ததென்னையெனமன்னர்மன்னனிவை பன்னுவான், பதுமமேலவனைநிகருமெம்மடிகண்ஞானநோக்கையுறு பான்மையாய்.

இ-ள். அதிர்கின்ற ஒலியினால் வசிட்டமுனிவன் யோகத்தைநீங்கி இருக்க, அதனைக்கண்டு சென்று பாதங்களில் விதிப்படிநமஸ்கரித்தலும், எழுகவென்று கூறி, புத்தியில் வல்லபத்தையுடையானே இங்குவந்தமை என்னையென்னுமிவை, அரசர்க்கரசனாகிய திரிசங்கு இவற்றைச்சொல்வான். பிரமாவைநிகர்த்த எமதுகுருவே ஞானக்கண்ணைப்பொருந்திய தன்மையையுடையவரே, எ-று. (கக)

தரணியாசையொருமூவகைத்தாநிதிநிறையல்பூமியெனநிதியமோ வரைவில்கோடியுளமறையவர்க்குதவியறம்வளர்த்தனன்மாதரோ கரையிலாரவர்கண்மாயசாலமதிலேசுழன்றுகரைகண்டனன் [மேனன் புரவுபூண்டதரை யாவுமெய்தினனிம் மூம்மையாசைகள் போக்கி

இ-ள். பூமியிலுள்ள ஆசை பொன், பெண், மண் என்று மூன்றுவகையினையுடைத்து: (அவற்றுள்,) பொன்றோ அளவற்றகோடி இருக்கின்றன; (அவற்றைப்) பிராமணருக்குத் தானஞ்செய்து தருமத்தைவளர்த்தேன். நல்லபெண்களோ அளவிறந்தோர்; அவர்களுடைய மாயாசாலத்தின்கண்ணே உழன்று கரைகண்டேன். (வளங்களைக்) கொடுக்கின்ற பூமிமுழுவதையும்பெற்றேன், இவ்வாறு இந்த மூன்றாசையையும் நீக்கினேன். எ-று. (கஉ)

இன்னுமையவொருகாதலென்னுளமிருந்ததிங்ஙனுறுமறனெலாந்
துன்னுமேலுலகினண்ணியிந்தவுடலோடுதுய்த்திடுதல்வேண்டுமா
லன்னதாகும்வழிமாமகம்புரிதியடிகளென்னவுரையாடலுங்
தன்னன்மென்றனைய சொல்லருந்ததிகவின்கொழுநனிவைகழறுவா [ன்.

இ-ள். குருவே, இன்னுமொரு ஆசை அடியேன் மனத்திலிருந்தது; (அது என்னையெனில்,) இவ்வுலகத்திலுள்ள போகங்களையெல்லாம் (தருமஞ்செய்தோர்) அடையும் சுவர்க்கத்திற்பெற்று, இம்மானுடசரீரத்தோடு அனுபவித்தல்வேண்டும். அது கைகூடும்படி பெரியயாகத்தை சுவாமிகாள் செய்தருளுக என்று கூறுதலும், கரும்பைமென்றாற்போன்ற இனியமொழிகளையுடைய அருந்ததியின் அழகிய நாயகனாகிய வசிட்டமுனிவன் இவற்றைக்கூறுவான். எ-று. (௧௩)

வேறு.

நூலறிபெரியோர்நீதிநூலினிற்புகன்றவண்ணஞ்
சால்பொடுநலமேசெய்தறருமத்தின்பாலதாகுஞ்
சீலநூல்பழித்தகன்மம்பெரியவர்விரும்பாச்செய்கை
பாலவாய்ச்செய்தலேபாவத்தின்பாலதாமே.

இ-ள். சாத்திரங்களையறிந்த பெரியோர்கள் நீதிநூல்களிற்சொல்லியபடி பெருமையோடு நன்மைகளையேசெய்தல் தருமத்தின்பகுதியதாம். ஒழுக்கத்தையுடைய சாத்திரங்கள் விலக்கியகருமங்களே பெரியோர் விரும்பாதசெய்கைகளாம். இவற்றைச் செயற்பாலவாகச்செய்தலே பாவத்தின்பகுதியதாம். எ-று. (௧௪)

தன்மமேசெய்வோர்தேவராவர்கடருமபாவ
கன்மமிவ்விரண்டுஞ்செய்தோர்காசினிமனிதராவர்
புன்மையாம்பாவஞ்செய்தோரிழிபுயிராகிப்போவார்
சின்மயமுணர்ந்துகன்மமகன்றவர்முத்திசேர்வார்.

இ-ள். தருமத்தையேசெய்பவர் தேவராகுவர். தருமம் பாவமாகிய இவ்விரண்டையும்செய்தவர் பூலோகவாசிகளாகிய மானுடராவர். எளிமையான பாவத்தையேசெய்தவர் இழிபிறப்பையுடைய உயிர்களாவர். ஞானசொரூபத்தையறிந்து இருவினைநீங்கினவர் மோட்சத்தையடைவர். எ-று. பாவகன்மம் என்பதற்குப் பாவத்தொழில் எனினும் அமையும். (௧௫)

நரர்கணற்சுவர்க்கமெய்திநற்பலன்றுய்த்தல்வேண்டிற்
சுரரெனவச்சுமாறித்துய்த்திடல்வேண்டுமன்றி
நரரெனப்போதலாகாநண்ணிடில்வானநாட்டிற்
சுரர்களிங்கிவரையின்பந்துய்க்கவொட்டார்கண்மாதோ.

இ-ள். மானுடர்கள் நல்ல சுவர்க்கத்தையடைந்து சிறந்தபோகங்களை அனுபவிக்கவிரும்பினல், தேவர்களாகவடிவமாறி அனுபவித்தல்வேண்டும் அன்றி, மானுடராக (விண்ணுலகிற்) போதல்கூடாது; போனல், விண்ணுல

கிலிருக்குந்தேவர்கள், இம்மானுடரை (அங்கே) இன்பம் அனுபவிக்கவிடார்கள். எ-று. (கசு)

அச்சுமாறுவதுமாயுட்கமைத்தநாண்முடிவினன்றி
யிச்சையினாிதுசாதலிதுமுழுப்பாவமீது
நிச்சயம்புரிதலாகாவின்னுநீநெடுநாள்வாழ்ந்து
கச்சமார்களிற்றாய்பின்னர்க்கருதுதன்முடித்தியென்றான்.

இ-ள். உடம்புமாறுவதும் ஆயுளுக்கு அமைத்தநாளின் அந்தத்தில் அன்றிச் சுயேச்சையினாற்கூடாது. சுயேச்சையினால் மரணித்தலாகிய இது பெரும்பாவமாம்; இது சத்தியம். இதனைச்செய்தல்கூடாது. கழுத்திடுகயிறுபொருந்திய யானையையுடைய அரசனே, இன்னும் நீ நெடுங்காலம்வாழ்ந்து, அதன்பின் எண்ணியதைமுடிக்க என்று கூறினான். எ-று. (கஎ)

மாமுனியுரைப்பக்கேட்டமன்னனுமுரைப்பானைய
நாமகண்மைந்தநீயேநங்குருவாகிவைக
வேமுறுசுவர்க்கத்திந்தவுடலொடுமியான்செல்வண்ண
மாமகம்புரிதற்கியாதுசூழ்ச்சியென்றடியின்வீழ்ந்தான்.

இ-ள். மகத்துவத்தையுடைய வசிட்டமுனிவன் சொல்லக்கேட்ட திரிசங்குமகாராசனுஞ்சொல்வான். சுவாமீ, சரசுவதியின்குமாரரே, தேவரீரே நமது குல ஆசாரியராகி இருக்கவும், இன்பத்தை அநுபவிக்குஞ் சுவர்க்கத்தில் இந்த மானுடதேகத்தோடும் அடியேன் போகும்படி பெரியயாகத்தைச்செய்தற்கு (வேறு) உபாயம் என்னை என்று அவனதுகால்களில் நமஸ்கரித்தான். எ-று. (கஅ)

உலகியல்வழுவாவண்ணமுனக்கியானுரைத்தகூற்றை
நலமெனக்கொண்டாயல்லையெனமுனிநவின்றானாகச்
சிலையணிபுயத்துவேந்தன்சிறப்புறுமுனியைநீங்கிக்
கலைதெரிவேள்விவல்லகவுசிகனுழைச்சென்றுற்றான்.

இ-ள். உலகநடைதவறாதபடி (அரசனே) உனக்கு யான் கூறியவாக்கை நன்மை என்று அங்கீகரித்தாயல்லை என்று வசிட்டமுனிவன் சொன்னானாக, வில்லைத்தாங்கிய புயத்தையுடைய திரிசங்குமகாராசன் சிறப்பையுடைய அம்முனிவனைநீங்கி, கலைஞானத்தையறிந்த யாகத்தில்வல்ல விசுவாமித்திரமுனிவன்மாட்டுப் போயடைந்தான். எ-று. (ககூ)

உருட்டுருசகடுபோலும்பிறவிநோயொழியும்வண்ண
மருட்டைழமுனிநீஞானமளித்தியென்றடைந்திடாதே
பொருட்டுருசுவர்க்கம்வேண்டியிலையெனமுனிந்துபோனான்
குருட்டனெமுதன்மையன்றிக்கோல்கொண்டோன்முதன்மையாமோ

இ-ள். உருளுகின்ற சகடத்தைப்போலும் பிறவித்துன்பம் நீங்குமாறு, இருளைதழைந்த முனிவரே தேவரீர் ஞானத்தை உபதேசித்தருளுக என்று வசிட்டமுனிவனை அடையாதபடி, போகத்தைத்தருகின்ற சுவர்க்கவுலகத்

தைவேண்டி, (அவன்) இல்லை என்றுகூறக் கோபித்துச்சென்றான். (இவன்கொள்கைக்கு) குருடன் முதன்மையுடையனன்றி, குருடன் கையிலுள்ள கோலைப்பற்றி அவனுக்கு வழிகாட்டுவான் முதன்மையுடையனவனே ஆகான். எ-று. இதனால் திரிசங்குமகாராசனது அறியாமை இழித்துரைக்கப்பட்டது. (உ०)

பருந்துசூழ்நெடியவைவேற்பார்த்திவன்காதிசேயா
மிருந்தவன்சரணந்தாழ்ந்துவந்தவாறியம்பநேயம்
பொருந்தியிவ்வுடலினோடுசுவர்க்கமீபுகுதுமாறு
திருந்தநான்யாகஞ்செய்வேன்வருத்தந்தீரென்றான்.

இ-ள். பருந்துகள்சூழ்கின்ற நெடிய கூரியவேலையேந்திய திரிசங்குமகாராசன் காதியின்புதல்வனாகிய விசுவாமித்திரமுனிவனுடைய கால்களில்வணங்கி, தான் வந்தமையைக்கூற, (அவனிடத்து) அன்பைப்பொருந்தி, இம்மானுடதேகத்தோடு நீ சுவர்க்கத்திற்போம்படி யான் நன்றாக யாகத்தைச்செய்வேன். நீ வருத்தத்தை நீங்குக என்றான். எ-று. (உக)

அக்கணமுனிவர்தம்மையழைத்தனன்றவத்தோர்யாரும்
புக்கனர்வசிட்டன்மைந்தர்பழித்தவண்புகுந்தாரில்லைத்
தக்கவங்கவரைநீசர்தங்குணநணுகிக்காம
மிக்குறவலைகவென்னாச்சபித்தனன்வீறுதோன்ற.

இ-ள். அந்தக்கணப்பொழுதில் முனிவர்களை அழைத்தான். அவர்களனைவரும்வந்தார்கள். வசிட்டமுனிவனுடைய புதல்வர்கள் தூஷித்து அவ்விடத்தில் வந்திலர். தகுந்த அப்புதல்வரை நீசரின்குணத்தைப்பொருந்தி காமம் மிக உழல்க என்று தன்பெருமைதோன்றச் சாபமிட்டான். எ-று.()

கோசிகன்சபித்தவண்ணங்கோதுறுகுணத்தராகி
யாசுறுகாமங்கைமிக்கலைதலுமைந்தர்தம்மைத்
தேசுடைவசிட்டனோக்கியாரிதுசெய்தாரென்னா
வூசலினுளத்தனாகிவருந்திமற்றிதனையோதும்.

இ-ள். விசுவாமித்திரமுனிவன் சபித்தபடியே குற்றம்மிக்க மனத்தினராய், பாவம்பொருந்திய காமம்மேற்பட்டு உழலுதலும், அப்புதல்வரை ஞானத்தையுடைய வசிட்டமுனிவன்பார்த்து, இதனை யாவர்செய்தாரென்று ஊஞ்சல்போன்ற மனத்தினனாய் வருந்தி இதனைச்சொல்வான். எ-று.

சாந்தமுமறமும்வல்லீர்மதஞ்சினஞ்சார்தலில்லீர்
காந்தியும்புனிதமுள்ளீர்காமத்தினினைவுநீத்தீ
ரேய்ந்ததெனுமக்கிவ்வாறிவ்வாகுலம்யானுமெய்தி
மாய்ந்திடல்புரிவேனென்றுவசிட்டனுமிதனைச்செய்தான்.

இ-ள். சாந்தகுணத்திலும் தருமத்திலும் வல்லபத்தையுடையீர். தருக்கையும் கோபத்தையும்பொருந்தீர். தேக அழகையும் பரிசுத்தத்தையுமுடையீர். காமத்தின் எண்ணத்தையும் ஒழித்தீர். உங்களுக் கிவ்வாறு பொ

ருந்தியது என்னை? இந்தவருத்தத்தை யானுமடைந்து இறப்பேனென்று வசிட்டமுனிவனும் இதனைச்செய்தான். எ-று. (௨௪)

அத்திரியதனிமேலேறித்தலைகீழ்க்காகவீழ்ந்தான்
றுத்திவாளரவின்வாயிற்றுன்னினன்றரையிற்பாய்ந்தா
னித்திறமுலகம்பொய்யென்றெண்ணியவசிட்டன்செய்தாற்
புத்திரசோகம்யாவர்பொறுப்பவருலகிலம்மா.

இ-ள். மலையில் ஏறித் தலைகீழாகவிழுந்தான். படப்பொறியையுடைய ஒளிபொருந்திய பாம்பின்வாயிற்புகுந்தான். நிலத்திற்பாய்ந்தான். உலகம் பொய்யெனக்கருதிய வசிட்டமுனிவன் இவ்வாறுசெய்தால், உலகத்திற் புத்திரசோகத்தை யாவர்சகிப்பவர். எ-று. (௨௫)

ஒன்றினுமுயிர்போக்கின்றியுவரிபுக்கொழிப்பானெண்ணி
மன்றலங்கைதைவேலிவாரியின்கரையைநண்ணி
நின்றனனங்ஙன்யாம்போய்நெடிதுநீவாடலென்கொ
லன்றுநின்றனக்குச்சொல்லுஞானமுமறந்தாய்போலும்.

இ-ள். ஒன்றானும் உயிர்போதலின்றி, கடலிற்புகுந்து அவ்வுயிரை நீக்கும்படிகருதி, வாசனைபொருந்திய தாழைவேலியினையுடைய கடலின் கரையை அடைந்துநின்றான். அவ்விடத்தில் யாஞ்சென்று மிக நீவாடுதல் என்னை? இது மிகநன்று! உனக்கு (நாம்) போதித்த ஞானத்தையும் மறந்தனைபோலும், எ-று. (௨௬)

அவரவர்செய்யுங்கன்மமவரவர்புசிக்கவேண்டு
மெவரிடைத்தடுக்குநீராரிசைக்குதும்புதல்வகன்மம்
புவியிடையவர்துய்க்கின்றாரேகுநாளகன்றுபோகுங்
கவலையுற்றிரங்கலென்னேயிதற்குநீஞானக்கண்ணாய்.

இ-ள். அவரவர்செய்த வினைப்பயன்களை அவரவரே அநுபவிக்கவேண்டும். யாவர் இடையே (அநுபவியாமல்) தடுக்கும் நீர்மையினையுடையார். புதல்வனே சொல்வோம். வினைப்பயனைப் பூமியில் அப்புதல்வர்கள் அநுபவிக்கின்றார்கள். (அது) நீங்குங்காலத்தில்நீங்கும். ஞானக்கண்ணையுடையானே, இதற்கு நீ கவலைமிக்குவருந்துதல் என்னை? எ-று. (௨௭)

முனிவுடன்சபித்தோர்தீர்வுமொழியலாவினையகன்ம
நினைவுடன்புசித்துத்தீர்வதாயினுநீயிச்சோகந்
துனையகல்பொருட்டுச்சொல்வன்றண்டமிழ்வழங்குநாட்டில்
வனைகழற்குமரன்வைகுமயூரநற்கிரியொன்றுண்டால்.

இ-ள். கோபத்தினுடன்சாபமிட்டோர் முடிவைக்கூறாத இந்தக்கன்மம் கருத்தோடு அநுபவித்து முடிவதே ஆயினும், நீ இந்தச்சோகத்தை நீங்கும்பொருட்டு (ஒரு உபாயத்தைச்) சொல்வேன். தண்ணியதமிழ் வழங்குநாட்டில் அலங்கரிக்கப்பட்ட வீரக்கழலினையுடைய குமாரசுவாமி எழுந்தருளியிருக்கும் நல்ல மயூரகிரியென்று ஒன்றுண்டு. எ-று. (௨௮)

முருகுறைதலங்கடம்பின்முதற்றலமதுவாமூர்த்தி
திருவுறைவெற்புமிக்கதீர்த்தமுச்சிறப்புமேவு
மருவுமைந்தெழுத்தையார்க்குமந்தணமுரைக்குமாபோற்
பெருமைநின்போல்வார்க்கன்றிப்பேசொணுவியல்பிற்றுமால்.

இ-ள். அது மூர்த்திவிசேடம், அழகுபொருந்திய ஸ்தலவிசேடம், மேலான தீர்த்தவிசேடமாகிய மூன்றையும்பொருந்தும். ஆதலினால், (மயூரகிரி) குமாரசுவாமிவீற்றிருக்கின்ற ஸ்தலங்களில் விசேடித்ததலமாம். பொருந்திய பஞ்சாக்ஷரத்தை எவர்களுக்கும் இரகசியமாக உபதேசிக்குமாறு போல, அதன்பெருமை உன்னைப்போல்வார்க்கன்றி (ஏனையோர்க்குச்) சொல்லத்தகாத இயல்பினையுடையது. எ-று. திருவுறைவெற்பு என்பது ஸ்தலத்தை உணர்த்திநின்றது. (உகூ)

கொலைகெழுகஞ்சன்விட்டகுவலயாபீடக்கோட்டை
யலைதரப்பிடுங்குங்கொண்டலந்தணன்புதல்வன்வேண்ட
விலகுறவளித்தாமேலோன்றனக்கொருமைந்தனின்றிப்
பலமுறுமனையவெற்பிற்படர்ந்துமைந்தனைப்பெற்றுனே.

இ-ள். கொலைத்தொழிலையுடைய கஞ்சன் என்பவன் அனுப்பிய குவலயாபீடம் என்னும் யானையின் கோட்டை அசையும்படிபிடுங்கின கிருட்டிணன், ஒரு பிராமணன் (இறந்த) புத்திரனை (எழுப்பித்தரும்படி) வேண்டுதல்செய்ய பிரகாசமுண்டாக, (அவனுக்கு அப்புத்திரனை எழுப்பிக்) கொடுத்தும், மேன்மையினையுடைய அந்தக்கிருட்டிணன் தனக்கு ஒருபுத்திரன் இல்லாமல், பயன்மிக்க அந்த மயூரகிரியிற்போய்ச் (சாம்பன் என்னும்) புத்திரனைப்பெற்றான். எ-று. (௩0)

தேவர்மூவருக்குந்தீராப்பகையுமக்குகனேதீர்ப்பன்
யாவராலகற்றவொண்ணுப்பிணியுமிங்கவனேதீர்ப்பன்
மேவுமைந்தொழிலின்மேலாந்தொழிலுடைவிமலனன்னேன்
பாவமென்றுரைக்கும்பஞ்சுக்கெரியெனப்பகருநீரான்.

இ-ள். மும்மூர்த்திகளுக்கும் நீக்கமுடியாத பகையையும் அந்தக் குமாரசுவாமியே நீக்குவர். எவராலும் நீக்கமுடியாத நோயையும் இம்மையில் அவரேநீக்குவர். அவர், பொருந்திய பஞ்சகிருத்தியத்திற்கும் மேலான தொழிலையுடைய மலரகிதர். பாவமென்றுசொல்லப்படும் பஞ்சிற்கு நெருப்பென்றுசொல்லுந் தன்மையினையுடையர். எ-று. (௩க)

உற்றநின்வருத்தந்தீர்ப்பன்குமரனேயுனைப்போன்மேன்மை
பெற்றவாகற்றுக்கன்மம்பெயர்க்குமோவவனேயொன்னிற்
குற்றமுற்றடியுண்டோர்கண்மன்னனைக்குறுகியோதின்
மற்றவன்றீர்ப்பனேனோமாக்களாலகற்றலாமோ.

இ-ள். அக்குமாரசுவாமியே மிக்க உன்வருத்தத்தைநீக்குவர். உன்னைப்போல மேன்மைபொருந்தினோர்கள் நீக்குதல்கூடாத கன்மங்களை

அவர் நீக்குவரோ என்றால், அடிபட்டவர்கள் (அதனாற்) குற்றத்தைப்பொருந்தி அரசனை அடைந்து (தங்குறையைச்) சொல்லில் அவ்வரசனே (அதனை) நீக்குவன். ஏனைமானுடர்களால் நீக்கமுடியுமோ. எ-று. (௩உ)

ஆதலாலவனேதீர்க்கும்போதியென்றருளவந்தோர்
மாதவவசிட்டன்றானுமைந்தரோடங்கணண்ணிக்
கோதைவேலுழவன்றன்பேர்கொண்டநற்றடத்தின்மூழ்கிப்
பூதிகண்டிகையைமேனிபொருந்துறப்புனைந்துவைகி.

இ-ள். ஆதலினால், அக்குமாரசுவாமியே நீக்குவார் போவாய் என்று (யான்) கூற, அழகிய மகத்துவம்பொருந்திய தவத்தையுடைய வசிட்ட முனிவனும் புதல்வரோடு அவ்விடத்தைவந்தடைந்து, மாலையையணிந்த வேலையுடைய குமாரசுவாமியின்நாமத்தை வகித்த நல்லதடாகத்தில்முழுகி, விபூதியையும் ருத்திராக்ஷவடத்தையும் சரீரத்திற்பொருந்த அணிந்திருந்து, எ-று. (௩௩)

ஆறெழுத்தெண்ணிப்பூசைக்காவனதெரிந்துகைக்கொண்
டூறுகொள்புதல்வர்தம்மையொருங்கவணிறுவிமேற்போய்
வீறுகொள்வடிவேலோனைவிதிமுறைபூசித்தென்று
மீறிலாயெமக்குவந்தவிடுக்கணீர்த்தியென்றான்.

இ-ள். சடட்சரத்தைத்தியானித்து, ஆராதனைக்கு ஆவனவற்றைத்தெரிந்து தேடி, இடையூற்றையடைந்த புத்திரர்களை ஒருசேர அவ்விடத்தில் நிறுத்தி மேலேபோய், பெருமைபொருந்திய கூரிய வேற்படையினையுடைய குமாரசுவாமியை விதிப்படிபூசைசெய்து, என்றும் அழிவில்லாதவரே, அடியேங்கட்குவந்த துயரைத் தேவரீர் நீக்கியருளுக என்று விண்ணப்பஞ் செய்தான். எ-று. (௩௪)

கந்தவேள்காயவாக்காற்கருதுமாமுனியேயுன்றன்
மைந்தர்கள்சாபந்தீர்ந்துவைகினர்சென்றுகாண்டி
சிந்தையினவலந்தீர்தியென்றெதிர்செப்பக்கேளா
வுய்ந்தனனென்றுவேலோனருணினைந்துருகிச்சொல்வான்.

இ-ள். குமாரசுவாமி அசரீரிவாக்கினால், எவருமதிக்கின்ற பெருமை பொருந்திய முனிவனே உனதுபுதல்வர்கள் சாபம்நீங்கி இருந்தார்கள். (அவர்களை) நீபோய்க்காண்பாய். மனத்தில் வருத்தந்தீருதி என்று அவனுக்கெதிரே அருளிச்செய்ய, அதைக்கேட்டு உய்ந்தேனென்று குமாரசுவாமியின் அருளைநினைந்து மனமுருகி விண்ணப்பஞ்செய்வான். எ-று. (௩௫)

வேறு.

ஆராலுந்தீர்க்கரிதென் றழுங்கியுனைச்சரணடைந்தேன் வருந்தமாற
நீராதவினைதீர்த்தாய்நினக்கடியேன்பிறிதுநலஞ்செய்வதுண்டோ [தி
வீராவென்றடிதொழுதுவரைப்புறம்வந்தருஞ்சாபம்விட்டுநீங்கிச்
சீராரும்புதல்வரொடுந்தன்னிருக்கைதனைநோக்கிச்சென்றானால்

இ-ள். ஒருவராலும் நீக்குதல்கூடாதென்று வருந்தித் தேவரீரையே புகலிடமாக அடைந்த அடியேனுடைய வருத்தம் நீங்க, நீங்காதசாபத்தை நீக்கியருளினீர்; தேவரீருக்கு அடியேன் (அதற்காகப்) பிரதியுபகாரஞ்செய்வதுண்டா! வீரரே என்று பாதங்களைவணங்கி, மலைப்பக்கத்தில்வந்து; அரிய சாபத்தைவிட்டொழிந்து சிறப்பைப்பொருந்தும் புத்திரர்களோடும் தன் இருப்பிடத்தைநோக்கிப்போய்ச்சேர்ந்தான். எ-று. (ருசு)

கற்பினொருவருநிகராவருந்ததிதன்கணவனுயர்கதையைச்சொ
ற்றும், வெற்புறழுந்திணிதடந்தோட்காதிபுதல்வன்கதையைவிளம்
புகிற்பா, முற்புகன்றகவுசிகன்றான்வசிட்டமுனிபுதல்வர்தமைமுனி
ந்தபின்னர்ப், பொற்புடையமகநிரப்பித்திரிசங்குமன்னனைவிண்போ
க்கினனே.

இ-ள். (நாரதமுனிவனே,) கற்பில் ஒருவரும் ஒவ்வாத அருந்ததியினது நாயகனாகிய வசிட்டமுனிவனுடைய உயர்ந்த சரித்திரத்தைக்கூறினோம். மலைபோன்ற திண்ணிய விசாலித்த புயத்தையுடைய காதிராசனது புதல்வனாகிய விசுவாமித்திரமுனிவனது சரித்திரத்தைக்கூறுகின்றோம். முன்சொன்ன விசுவாமித்திரமுனிவன் வசிட்டமுனிவனுடைய புத்திரர்களைக் கோபித்தபின்னர் அழகினையுடைய யாகத்தைமுடித்துத் திரிசங்குமகாராசனை விண்ணுலகத்துக்கு அனுப்பினன். எ-று. (ருஎ)

மன்னவர்க்குநாகமதேதுருவமெனுமுலகியல்புவழக்கநீக்கி, ய
ன்னவர்க்குச்சுவர்க்கமதேதுருவமெனும்படிநிறுவு மன்னான்ஞான
ந், தன்னையுணர்பொருட்டிமையகிரியடைந்துசிவன்றனிருதாளைநெ
ஞ்சி, லுன்னியருந்தவம்புரிந்தான்முதலுகத்திற்றெய்வவாண் டொ
ருநூறம்மா.

இ-ள். அரசருக்கு (முதுகிடாமற்போர்செய்து இறக்கின்றமையால்) வீரசுவர்க்கமே நிச்சயம் என்னும் உலக நடையின்வழக்கத்தை நீக்கி, அவ்வரசருக்குச் சுவர்க்கலோகமே நிச்சயம் என்னும்படி நிறுவிய விசுவாமித்திரமுனிவன், ஞானத்தையுணருமாறு இமையமலையையடைந்து சிவபெருமானுடைய இருபாதங்களையும் மனத்தில்நினைந்து, கிருதயுகத்தில் ஒருநூறு தேவயாண்டு அரியதவத்தைச்செய்தான். எ-று. துருவம் - நிச்சயம். (ருஅ)

கவினொழுகுதிருமுகமுங்கண்மூன்றுங்குழைக்காதுங்கடுக்கைசூடு
மவிரொளிபாய்செஞ்சடையுமழுமானும்வரதமுடனபயக்கையுந்
தவமுனிவருளமகலாத்திருப்பதமும்விளங்கவிடைதன்னிலேறிச் [ல்
சிவபெருமானுமையினொடுங்காதிபுதல்வனுக்கெதிரேசென்றுற்றுன

இ-ள். சிவபெருமான் அழகு ஒழுகுந் திருமுகமும், திருக்கண்மூன்றும், குண்டலத்தையணிந்த திருச்செவியும், கொன்றைப்பூமாலையைச்சூடும் பிரகாசிக்கின்ற ஒளிபரந்த சிவந்த திருச்சடையும், மழுவும் மானும் வரதத்தோடு அபயம்பொருந்திய திருக்கரங்களும், தவத்தையுடைய முனிவரது

மனத்தைவிட்டு நீங்காத திருப்பாதங்களுந்தோன்ற பார்வதியாரோடும் இடபவாகனத்திலேறி விசுவாமித்திரமுனிவனுக்கு நேரே எழுந்தருளிவந்தார். எ-று. (௧௯)

துன்றியசாக்கிரங்கனவுசுழுத்தியிவைகடந்துநின்றதுரியமூர்த்தி, யின்றெனக்குவெளிப்பட்டாயென்னதவஞ்செய்தேனெனவேயுவகையெய்தி, மன்றினடம்புரியரனைமலர்தூவிக்கவிசனும்வணங்கிக்கண்ணீர், துன்றனியார்பிடைவீழமயிர்பொடிப்பநின்றினைய சாற்றுகின்றான்.

இ-ள். (அப்பொழுது) விசுவாமித்திரமுனிவனும், பொருந்திய சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி என்னும் மூன்று அவத்தைகளையும் கடந்து நின்ற துரியமூர்த்தியானவர் இன்றைக்கு நாயேனுக்கு வெளிப்பட்டருள நாயேன் என்னதவத்தைச்செய்தேனோ என்று மனமகிழ்ச்சியுற்று, கனகசபையில் திருநடனஞ்செய்யும் அச்சிவபெருமானைப் புஷ்பங்களைச்சொரிந்து நமஸ்கரித்து, ஆனந்தபாஷ்பம் தனது ஒப்பற்ற மார்பிற்சொரிய, ரோமாஞ்சங் கொள்ளநின்று இவற்றை விண்ணப்பஞ்செய்கின்றான். எ-று. (௨௦)

இம்மையுறுபோகமெலாமுற்காத்தவன்னமெனவெண்ணிநீத்தேன், பொம்மல்கொள்வான்பதமுமதேவெள்ளியணிந்தோர்பொன்னைப்பூணல்போலா, மம்மநினையன்றியொன்றுமில்லாதென்றறிந்தனைம்புலனுஞ்செற்றேன், செம்மநினதானந்தக்கடலினிடைக்குளிக்கவுளஞ்சிந்தித்தேனால்.

இ-ள். இப்பிறப்பிலனுபவிக்கின்ற போகங்கள் எல்லாவற்றையும் உவாந்தித்த சோற்றைப்போலக்கருதிவெறுத்தேன். பொலிவைக்கொண்ட சுவர்க்கலோகபோகமும் அத்தன்மைத்தே. (இவற்றின்றன்மை) வெள்ளிவிலங்கை அணிந்தோர் பொன்விலங்கை அணிதல்போலாகும். தேவரீரை அன்றி ஒருபொருளும் இலையாது என்றறிந்தேன். ஐம்புலனையும் அடக்கினேன். பெருமையிற்சிறந்தவரே தேவரீருடைய ஆனந்தக்கடலின்கண் அமிழ்ந்த மனத்திற்கருதினேன். எ-று. வெள்ளி பொன் என்பன அவற்றாலாகிய விலங்கை உணர்த்தின. உற்காத்தல் - உவாந்தித்தல். (௨௧)

என்றுமுனிபுகன்றிடலுமீசனுரைப்பான்றவத்திலிணையிலாத, மின்றிகழ்செஞ்சடைவசிட்டன்மைந்தர்கட்குக்கொடுஞ்சாபம் விளைத்ததீங்கு, நின்றதுநின்னிடத்தத்தப்பவம்போக்கிஞானமதுநிகழ்த்தவேண்டின், தென்றிசையிற்பாண்டியன்றன்றமிழ்நாட்டின்மயூரகிரிசிறந்துவைகும்.

இ-ள். என்று விசுவாமித்திரமுனிவன் விண்ணப்பஞ்செய்தலும் சிவபெருமான் அருளிச்செய்வார். தவத்தில் நிகரில்லாத மின்னைப்போல விளங்குகின்ற சிவந்த சடையினையுடைய வசிட்டமுனிவனது புதல்வர்களுக்குக் கொடியசாபங்கூறிய தீமை உன்மாட்டிருந்தது. அந்தப்பாவத்தைநீக்கி

ஞானத்தை உனக்கு உபதேசித்தல்வேண்டும். (அதற்கு உபாயஞ்சொல்வேம்.) தெற்குத்திக்கிலுள்ள பாண்டியனது தமிழ்நாட்டின்கண்ணே மயூரகிரி சிறந்துவிளங்கும். எ-று. (சஉ)

ஆயகிரியிற்குமாரனிருந்தனனங்கெய்தியருச்சனைசெய்தேத்தின்
மாயமுறும்பவமகலுமம்முருகன்ஞானமெலாம்வழங்கும்போதி [ஞ்
தூயவுளஞ்செறிமுனிவவெனமொழிந்தமுனிவரருஞ் சுருதிநான்கு
சேயுயருநெடுமாலுந்தேடரியசிவன்கயிலைசேர்ந்தானன்றே.

இ-ள். அந்த மயூரகிரியில் நமது குமாரனாகிய சுப்பிரமணியன் இருந்தான். பரிசுத்தமாகிய மனத்தையுடைய முனிவனே, அவ்விடத்திற்போய் (அவனைப்) பூசித்துத்துதிக்கில் நிலைமிக்க பாவம் நீங்கும்; அந்தக்குமாரன் ஞானமுழுதையும் உபதேசிப்பன். போ என்று அருளிச்செய்த இருடிகளும் நான்குவேதங்களும் மிக உயர்ந்த நெடியவடிவத்தையுடைய விட்டுணுவும் தேடுதற்கரிய சிவபெருமான் கைலாசகிரியை அடைந்தார். எ-று.()

கடைந்தெடுத்ததெள்ளமுதங்கைகடந்தாலெனமுனிவர்கணங்
கடேறவு, வடைந்தனம்வெங்கொடுங்கோபம் போதசாதனசாந்தி
யடைந்திலமால், விடந்தவழுமணிமிடற்றோனெய்தியும்விடுதவா
தேவெள்ளிவெற்பி, னடந்தனன்வெங் கடுஞ்சினம்போல் வேறுண்
டோவுயிர்ப்பகைதானிவிலென்றே.

இ-ள். இருடிகளின் கூட்டம் வருந்த வெவ்விய கொடியகோபத்தைப் பொருந்தினேம்; ஞானசாதனத்தால் சாந்தகுணத்தைப்பெற்றிலேம். (வருந்திக்) கடைந்தெடுத்த தெளிவான அமிர்தங் கைகடந்தவாறுபோல நஞ்சு விளங்கும் நீலகண்டராகிய சிவபெருமான் எழுந்தருளிவந்தும் முத்தியைத் தாராது கைலாசகிரியிற்சென்றருளினார். சொல்லில், உயிருக்குப்பகை வெவ்விய கடியகோபம்போல வேறொன்று உண்டோ! என்று, எ-று. அமுதங் கைகடந்தவாறுபோலச் சிவபெருமான் எழுந்தருளிவந்தும் முத்தியைத் தாராது கைலைசென்றார் என்பது கருத்து. (சச)

கடவுண்முனியிவ்வாறுகருதியினிமஞ்ஞைவெற்பிற்கந்தனன்றி,
யொடிவில்கதியில்லையெனவாங்ககன்றுபலகாதமொல்லைநீங்கித், தட
மயிலின்வரைநண்ணிச்சரவணமாம்புனிதநறுந்தடத்திலாடி, வடுவ
றுவெண்பொடியணிந்து கண்டிகைபூண்டஞ்செழுத்து மனத்தினெ
ண்ணி.

இ-ள். தேவ இருடியாகிய விசுவாமித்திரமுனிவன் இப்படிச்சிந்தித்து, இனி மயூரகிரியிலெழுந்தருளியிருக்குங் குமாரசுவாமியேயன்றி அழிவில்லாத புகலிடம் வேறில்லையென்றுகருதி அவ்விடத்தைநீங்கி, பலகாதங்களை விரைந்து கடந்து பெருமைபொருந்திய மயூரகிரியையடைந்து, பரிசுத்தமான நல்ல சரவணப்பொய்கையிலே ஸ்நானஞ்செய்து, குற்றமில்லாத விபூதியையணிந்து, ருத்திராக்ஷவடத்தைத்தரித்து, பஞ்சாக்கரத்தை மனத்திற்சிந்தித்து, எ-று. (சரு)

அம்புலியினிளமானை மறிமான்கன்றுறத்தாவு மசலஞ்சூழ்வந், தெம்பெருமானருச்சனைக்குவேண்டுவகொண்டுச்சிமிசையெய்திவே ற்கை, நம்பிதனைநீராட்டியாடையங்கராகமணிபிறவுநல்கி, வம்புசெ றிநறுமலர்கொண்டருச்சித்துப்பழிச்சுகின்றான்மறைநூல்வல்லோன்.

இ-ள். சந்திரனிலிருக்கும் இளையமானை, மான்கன்றுபார்த்துத் (தன்னினமென்று அதனைச்) சேரும்படி தாவுகின்ற மயூரகிரியைப் பிரதக்ஷிணஞ்செய்து, நமது பெருமானாகிய குமாரசுவாமியினது பூசனைக்குவேண்டிய உபகரணங்களைக்கைக்கொண்டு சிகரத்தின்மீதுபோய், வேலையேந்திய திருக்கரத்தையுடைய குமாரசுவாமிக்கு அபிஷேகஞ்செய்து, வஸ்திரத்தையும் மெய்ப்பூச்சையும் ஆபரணத்தையும் ஏனையவற்றையுஞ்சேர்த்தி, வாசனைமிக்க நல்ல புஷ்பங்களால் அருச்சனைசெய்து, வேதங்களில்வல்லனாகிய விசுவாமித்திரமுனிவன் தோத்திரஞ்செய்கின்றான். எ-று. (சசு)

பெருமணியின்சுடர்கொழிக்குமெழின்மவுலிசிரம்புனைந்தபிற ங்குவானோர், முருகுகமழ்நறுந்தோட்டுநறைமலர்கொண்டருச்சித் துமுன்னின்றேத்தும், பொருவில்செழுமலர்ப்பதத்தோய்வலாரிமக ண்முலைமணக்கும்புனிதமார்பா, வெரிமணிச்சூட்டரவுபடப்புடைக் குமயில்வாகனத்தோயெனைக்காவாயே.

இ-ள். பெரிய இரத்தினத்தின்பிரபைவீசும் அழகியகிரீடத்தைத் தலையிலணிந்த பிரகாசத்தையுடைய தேவர்கள், வாசனைகமழும் நல்ல இதழ்களையுடைய தேன்பொருந்திய புஷ்பங்களைக்கொண்டு பூசித்துத் திருமுன்னின்று துதிக்கின்ற ஒப்பில்லாத செழுமையாகிய தாமரைமலர்போன்ற பாதங்களையுடையவரே, இந்திரகுமாரியாகிய தெய்வநாயகியாரின் தனங்களைச் சேரும் பரிசுத்தமாகிய திருமார்பையுடையவரே, ஒளிசெய்கின்ற இரத்தினம்விளங்குஞ் சுடிகையினையுடைய பாம்புகள் அழியத்தாக்கும் மயில்வாகனத்தையுடையவரே, அடியேனை இரட்சித்தருளுக. எ-று. (சஎ)

மந்தாரமலருகந்தோய்வாரிசமலர்முகத்தோய்பகைவர்மாள, ந ந்தாதவேலெடுத்தோயெனைக்காவாய்சிவன்றனுதனயனல்குங், கந் தாவொண்கவின்வடிவோய் கருணைபொழிமலர்விழியா யடியேற்கா வாய், சந்தாருமுலைக்குறத்திதன்கணவனினையடைந்தேன் றனைக்கா வாயே.

இ-ள். மந்தாரத்தின்மலரை விரும்பினவரே, செந்தாமரைமலர்போன்ற திருமுகத்தையுடையவரே, சத்துருக்களிறக்கும்படி (வலிமை)கெடாத வேற்படையை எடுத்தவரே, அடியேனைக்காத்தருளுக. சிவபெருமான் தமது நெற்றிக்கண்ணினின்றுந்தோற்றுவித்த கந்தசுவாமியே, ஒள்ளிய அழகிய திருவடிவையுடையவரே, கிருபைபொழிகின்ற அலர்ந்த திருக்கண்களையுடையவரே, அடியேனைக் காத்தருளுக. சந்தனஞ்சேர்ந்த முலைகளையுடைய வள்ளிநாயகியாருக்கு நாயகரே, தேவரீரையடைந்த சிறியேனைக் காத்தருளுக. எ-று. (சஅ)

சுகம்விளையும்வியனிலமேயிமவான்றன்பேரவுமைசுதனேகாவாய், புகலுறுமெண்ணறுகோடிபிரமாண்டம்படைத்தழிக்கும் புனிதாகாவாய், தகவுபெறுபழையோனேமயூரகிரிதனிலுவந்துதங்கிவாழ்வோ, யகமிலடியாரகத்தினகலாதோய்நினையடைந்தேன் றனைக்காவாயே.

இ-ள். பேரின்பசுகம்விளைகின்ற சிறந்தநிலமே, மலையரசன துபேரரே, பார்ப்பதியாருடைய திருக்குமாரரே காத்தருளுக. சொல்லப்படுகின்ற அளவிறந்த கோடியென்னும் எண்ணையுடைய உலகங்களைச்சிருட்டித்துச் சங்கரிக்கும் பரிசுத்தரே காத்தருளுக. தகைமைபொருந்திய பழமையையுடையவரே, மயூரகிரியில்மகிழ்ந்து வீற்றிருந்து வாழ்கின்றவரே, பாவமில்லாத அன்பர்களது மனத்தில் நீங்காதவரே, தேவரீரையடைந்த அடியேனைக் காத்தருளுக. எ-று. அகம் - ஆணவம் எனினும்பொருந்தும். (சகூ)

என்றுதுதிகூறிமுனமிறைஞ்சுதலுங்காங்கேயனெழில்விம்பத்தி,னின்றுமுகமிருமூன்றினுடன்வெளிவந்தம்முனிமுன்னிகழ்த்துகின்று, னன்றுனதுதுதியிதனை நவின்றோர்க்குப்புத்திமுத்திநல்குவோநீ, மன்றவிழைந்தனவுரைத்தியென்றுகுகனுரைப்பமுனிவழங்குமன்றே.

இ-ள். என்று தோத்திரஞ்செய்து திருமுன்னே நமஸ்கரித்தலும், குமாரசுவாமி அழகிய திருவுருவில்நின்று, அந்த முனிவரனுக்குமுன் ஆறு திருமுகங்களோடு வெளிப்பட்டு அருளிச்செய்கின்றார். உனது துதி (மிக) நன்று. இதனைத் தோத்திரஞ்செய்தவர்களுக்குப் போகமோக்ஷங்களைக் கொடுப்போம். நீ நிச்சயமாக விரும்பினவற்றை விண்ணப்பஞ்செய்கவென்று அவர் அருளிச்செய்ய, விசுவாமித்திரமுனிவன் விண்ணப்பஞ்செய்வான். எ-று. (ருo)

அருள்பெருகுந்திருவிழியாயான்செய்யும்பவமெனைவிட்டகறல்வேண்டும், பிரியமுறுமெய்ஞ்ஞானம்பெறல்வேண்டுமளித்தியெனப்பேசக்கேட்டுத், திருவுறுமென்றலத்திலென்றுசேர்ந்தனையன்றேபாவமகன்றுசென்ற, துரிமைபெறுமெய்ஞ்ஞானமோதுவங்கேளெனமுனிவற்குரைக்குமாதோ.

இ-ள். கிருபைபெருகுந் திருக்கண்களையுடையவரே, அடியேன்செய்த பாவம் சிறியேனைவிட்டு நீங்குதல்வேண்டும். அன்புமிகும் மெய்ஞ்ஞானத்தைப்பெறுதல்வேண்டும். (இவற்றை) அருளுக என்று விண்ணப்பஞ்செய்ய, (குமாரசுவாமி அதனைக்) கேட்டருளி (முனிவனே,) செல்வம்மிக்க எனது க்ஷேத்திரத்தில் என்று வந்தனையோ அன்றைக்கே பாவம் உன்னைவிட்டுக்கழிந்துபோயது. உரிமையைப்பொருந்தும் மெய்ஞ்ஞானத்தை அருளிச்செய்வேம் கேள் என்று விசுவாமித்திரமுனிவனுக்கு அருளிச்செய் (ருக)
வார். எ-று.

வேறு.

பதிபசுபாசமூன்றும்பதியுயிர்க்குணர்வதாகித்
துதிகொள்பூரணமாய்நின்றசுயம்பிரகாசநாமாங்
கதிகொள்சிற்றறிவாய்க்காட்டக்கண்டிடுந்தன்மைத்தாகித்
துதையுமும்மலத்தின்மூழ்குஞ்சதசத்தாம்பசுநின்போல்வார்.

இ-ள். பதியும், பசுவும், பாசமும் (எனப்பதார்த்தம்) மூன்றாகும். (அவற்றுட்) பதியாவது ஆன்மாக்களுக்கு அறிவாய், துதிக்கப்படும் பரிபூரணமாய்நின்ற தானேவிளங்குமியல்பினதாம். அது நாமே. பசுவாவது பலகதிகளையும்பொருந்துஞ் சிற்றறிவையுடைத்தாய் அறிவிக்க அறியும் இயல்பினையுடைத்தாய் நெருங்கிய மும்மலத்தில் அமிழ்ந்தும் சதசத்தாகும். (அது) உன்னைப்போன்றவர்களே. எ-று. (௫௨)

உலகினையுண்மையாக்கியெமையுணர்ந்திடவொட்டாது
தொலைவறுபோகஞ்சீவன்றுய்த்திடநிறுத்தல்பாச
நிலவுமிவ்வுயிரைப்பாசநீக்கியேயருளவெண்ணி
மலபரிபாகமெய்தத்தனுவினைவழங்குவேமால்.

இ-ள். பாசமாவது (பொய்யாகிய) பிரபஞ்சத்தை மெய்யாக்கிப் பதியாகிய எம்மை அறியவிடாது அழிவில்லாதபோகங்களை ஆன்மா அனுபவிக்கும்படி நிறுத்துவதாம். விளங்குகின்ற இந்த உயிருக்குப் பாசத்தைநீக்கி அருள்புரியக்கருதி, மலபரிபாகம் உண்டாகும்வண்ணந் தேகத்தைக்கொடுப்போம். எ-று. நிறுத்தல் தொழிலாகுபெயர். (௫௩)

மானுடப்பிறவிபெற்றின்வருவித்துச்சரியையோடே
யானநற்கிரியையோகமநுட்டிப்பித்தழிவிலாத
ஞானசாதனத்தைச்சேர்த்திநல்லருட்குருவாயெய்தி
யூனமில்பிரமமீதுமலமிதென்றுணரக்காட்டி.

இ-ள். முடிவில் மானுடப்பிறவியைவருவித்து, சரியையுடனே இசைந்த நல்லகிரியை யோகமாகிய இவற்றை அநுட்டிக்கச்செய்து, (பின்) அழிவற்ற ஞானசாதனையைக்கொடுத்து, நல்ல அருளையுடைய ஆசாரியனாக எழுந்தருளிவந்து, (அந்த ஞானசாதனையையுடைய ஆன்மாவுக்கு) குற்றமில்லாதபதிப்பொருள் இது, மலம் இது என்றறியும்படி (பகுத்துக்) காட்டி, எ-று. (௫௪)

பொத்துமம்மலத்தைநீக்கிப்போதமாமமலசத்தி
லுய்த்திடுவோமன்னோர்களசத்தினிலுறார்கள்பின்னை
வைத்திடுஞானத்தாமாய்ஞேயத்திலழுந்திவாழ்வார்
சுத்தமாம்பதமிதாகுந்தொலைவில்பேரின்பமீதே.

இ-ள். பொதிந்த அந்தமலசத்தியைக்கெடுத்து, ஞானமயமாகிய மலமற்ற பதித்தலத்தில்விடுவோம். பின் அவர்கள் பாசத்தலத்திற்பொருந்தார்

கள். (ஆசாரியராகிய நம்மாற்பதிக்கப்பட்ட) ஞானந்தாமாகிச் சிவத்திலழுந்தி வாழ்வார்கள். சாயுச்சியம் இதுவேயாகும். இதுவே அழிவற்றபேரின்பம். எ-று. (ருரு)

முன்னைநல்வினையினுலேசரியையேமுதலமுற்றி
யென்னைவந்தடைந்தாய்நீயாயியைந்ததத்துவநீயல்லை
சொன்னதத்துவங்கடம்மையெம்மருளதனுற்சோதித்
தன்னவைவேறாய்க்கண்டவறிவுநீயாகக்காண்டி.

இ-ள். முற்பிறப்பிற்செய்த நல்வினையினுலே சரியைமுதலியவற்றை அநுட்டித்து முடித்து நீயாய் நம்மை வந்துசேர்ந்தாய். பொருந்திய தத்துவப்பொருள்நீயல்லை. சொல்லப்பட்ட தத்துவங்களை நமது அருளினுற் பரிசோதித்து, அவைகளை வேறாகக்கண்ட அறிவே நீயாக அறிதி. எ-று. நீயாய் இயைந்த தத்துவநீயல்லை எனக்கூட்டித் தானுய்விளங்குந் தத்துவப்பொருள் நீயல்லை என்பது அதனுற்போந்த பொருள் எனக் கூறுதலுமுண்டு. (ருசு)

தாவறுமந்தஞானந்தன்னிலேநிலைமைபெற்றுச்
சீவனுநின்றனிச்சைமுதலனசிதைத்துமேலா
மாவலோடெமதுரூபத்தழுந்துவாயெமதுபக்கத்
தோவினற்பத்திநீங்காதுயிலுனக்கிவையுண்டாமே.

இ-ள். கெடுதலில்லாத அந்தஞானத்திலே நிலைமையைப்பொருந்தி, ஆன்மாவாகிய உனது ஆசைமுதலியவற்றைக்கெடுத்து, மேலாகியவிருப்பினேடு எமது திருவுருவின்கண் அழுந்துவாய். எம்மாட்டு இடைவிடாத நல்ல அன்பு நீங்காதிருக்கில் உனக்கு இவைகள் உண்டாம். எ-று. (ருஎ)

வேலவனினையஞானம்விளம்பியவண்ணங்கேட்டுச்
சாலவின்றுய்ந்தேனென்னமாமுனிதாழ்தலோடுங்
கோலநின்னிருக்கைசேர்திதவமுனியென்றுகூறி
யேலுறுதன்விம்பத்திலெய்தினுன்குமரமூர்த்தி.

இ-ள். குமாரசுவாமி இந்தஞானத்தை உபதேசித்த தன்மையைக்கேட்டு, இன்றைக்கு மிக உய்ந்தேன் என்று பெருமையான விசுவாமித்திரமுனிவன் வணங்குதலும், அவர் தவத்தையுடையமுனிவனே அழகிய உனது இருக்கையை அடைகுதியென்று அருளிச்செய்து, பொருந்துகின்ற தமது விக்கிரகத்தில் மறைந்தருளினுர். எ-று. (ருஅ)

குமரனதருளையுன்னிக்குரைகழறாழ்ந்துபின்னு
மமலனதருளினுலேயாணவவித்தைநீங்கி
விமலமாய்விளங்கியந்தவெற்பினைச்சூழ்ந்துபோற்றிக்
கமையுடன்காதிசேயுங்கருதுதன்னிருக்கைபுக்கான்.

இ-ள். விசுவாமித்திரமுனிவனும் குமாரசுவாமியினது திருவருளைக் கருதி ஒலிக்கின்ற வீரக்கழலையுடைய பாதங்களைப் பின்னரும்வணங்கி,

மலரகிதராகிய அவருடைய கிருபையினாலே ஆணவத்தாலாகிய அஞ்ஞானத்தைநீங்கி, நிருமலமாய்ப் பிரகாசித்து, அந்த மயூரகிரியைப் பிரதக்ஷிணஞ்செய்து துதித்து, சாந்தகுணத்தோடு மதிக்கப்படுந் தன்னிருக்கையிற் போனான். எ-று. (௫௩)

வசிட்டர்கதையும் விசுவாமித்திரர்கதையுமுரைத்தசருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௬௩௮.

---

பத்தாவது

## பிரமாவின்கதையுங் கருடேசன்கதையும் உரைத்தசருக்கம்.

முதிருமின்னிசையாழ்வல்லோய்கோசிகமுனிவன்
கதைதனையோதினன்முன்னொருகாலையவ்வரைவாய்ப்
புதியமாமலர்க்கடம்பணிப்பூசையான்புரிந்தே
னதனையோதுவன்கேளெனநான்முகனறைவான்.

இ-ள். முதிர்ந்த இன்னிசைபொருந்திய யாழில்வல்ல நாரதமுனிவனே, விசுவாமித்திரமுனிவனது கதையைச்சொன்னேன். முன்னொரு காலத்தில் அந்த மயூரகிரியில் அன்றலர்ந்தபெருமையாகிய கடப்பம்பூமாலையையணிந்த குமாரசுவாமியை யான் பூசைசெய்தேன். அந்தக்கதையைச் சொல்வேன் கேளென்று பிரமா சொல்வார். எ-று. (௧)

அமரர்சாத்தியர்விஞ்சையர்கின்னரரசுரர்
திமிரநெஞ்சுடையிராக்கதரியக்கர்கள்சித்தர்
கமலவாண்முகப்பிதிர்க்களோர்கவின்றகிம்புருடர்
நமதுகாதலிவிபற்றிடவந்துநண்ணினரால்.

இ-ள். தேவர்கள், சாத்தியர்கள், விஞ்சையர்கள், கின்னரர்கள், அசுரர்கள், வஞ்சநெஞ்சையுடைய இராக்கதர்கள், இயக்கர்கள், சித்தர்கள், செந்தாமரைமலர்போன்ற ஒளிபொருந்திய முகத்தையுடைய பிதிரர்கள், அழகுமுதிர்ந்த கிம்புருடர்கள் ஆகிய இவர்கள் நமது விருப்பினுற் சிருட்டிக்க வந்து (உலகிற்) செறிந்தார்கள். எ-று. சாத்தியர், கணங்களாய் நியமிக்கப்பட்டுள்ளோர். இனிச்சிலர் தேவகணங்களுக்கதிபர் எனவுங்கூறுவர். ()

சோதியாகியவுருத்திரன்றோன்றினனுதலின்
வேதநான்குசொல்லெழுத்திசையெண்கணுால்வேள்வி
யோதுமாமுகத்துதித்தனவுண்மையாந்தருமந்
தீதுதோய்சினம்பாவமென்மேனிமேற்செனித்த.

இ-ள். சோதிமயமாகிய உருத்திரமூர்த்தி (எனது) நெற்றியிற்றோன்றினார். நான்குவேதங்களும், எண்பத்துநாலுபதங்களும், ஐம்பத்தொரு அக்ஷரங்களும், சந்தசுராங்களும், தருக்கமும், சாத்திரங்களும், யாகமும் ஆகிய

இவைகள் சொல்லப்படும்பெருமையாகிய முகத்திற்றோன்றின. உண்மை யானதருமமும், தீமைபொருந்திய கோபமும், பாவமும் ஆகிய இவைகள் என்னுடையமேனியிலேதோன்றின. எ-று. இசை என்பதற்கு வியாகர ணம் எனவும், எண் என்பதற்குக் கணிதம் எனவும் பொருள்கூறலுமுண்டு.()

மரீசியங்கிராத்தக்கன்வாழ்புலத்தியன்வசிட்டன்
பிருகுவத்திரியாதியோருடம்பினிற்பிறந்தா
ருரியமைந்தரினத்திரிமதிதனையுயிர்த்தான்
பரவுமம்மதிமகனெனப்புந்தியைப்பயந்தான்.

இ-ள். மரீசி, அங்கிரா, தக்கன், வாழ்கின்ற புலத்தியன், வசிட்டன், பிருகு, அத்திரிமுதலானோர் சரீரத்திற்றோன்றினர். உரிமையான இப்புதல் வர்களில் அத்திரி சந்திரனைப்பெற்றான். துதிக்கப்படுகின்ற அந்தச்சந்திரன், புதல்வனாகப் புதனைப்பெற்றான். எ-று. (ச)

புந்திபெற்றனன்புரூரவாவினையவன்மரபிற்
சிந்துறாத்திறற்காதிகோசிகன்றிகழ்யாதி
வந்துதோன்றினர்மரீசியென்றுரைக்குமாதவத்தோன்
சுந்தமார்தருகாசிபன்றன்னைநல்கினனால்.

இ-ள். புதன் புரூரவாவினைப்பெற்றான். அவன்வம்மிசத்தில் அழியாத வலிமையுடைய காதிராசன், கௌசிகன், விளங்குகின்ற யயாதி ஆகிய இவ ர்கள்வந்தவதரித்தார்கள். மரீசியென்றுசொல்லப்படும் பெருமையான தவ த்தையுடைய முனிவன் அழகுநிறைந்த காசிபன் என்னு முனிவனைப்பெற் றான். எ-று. (ரு)

காசிபற்குறுகாதலியார்கள்பன்மூவ
ராசிலன்னவர்தங்களிலதிதியீன்றிடுவோன்
வீசுவெங்கதிராகியவிவச்சுவானவன்சேய்
பேசுகின்றவைவச்சுதமனுவெனும்பெரியோன்.

இ-ள். காசிபனுக்குரிய மனைவியர் பதின்மூவர். குற்றமில்லாத அவர் களில் அதிதியென்பவள் பெற்றவன் வீசுகின்ற உஷ்ணகிரணத்தையுடைய விவச்சுவான் என்னுஞ் சூரியன். அவனுடையபுதல்வன் (எவரும்வியந்து பேசுகின்ற வைவச்சுதமனு என்கின்ற பெருமையையுடையோன். எ-று. காசிபனுடையமனைவியர் பதின்மூவர்: அதிதி, திதி, தனு, அருட்டை, சுலசை, கழை, சுரபி, வினதை, மதி, இளை, கத்துரு, குரோதவசை, தாம்பிரை. (சு)

பன்னுமன்னவன்பயந்தசேயிக்குவாகென்போ
னன்னவன்மரபறைந்திடிற்பெருகுமோரணங்கு
துன்னுதாவரங்கொடிகளோர்தோகைநீருயிர்க
ளுன்னுமோரணங்கான்முதலிருகுளம்புயிர்த்தாள்.

இ-ள். சொல்லப்பட்ட அவன்பெற்ற புதல்வன் இக்குவாகு என்ப வன். அவனது வம்மிசத்தைச்சொன்னால் அடங்காது. ஒருபெண் நெரு ங்கிய விருக்ஷங்களையுங் கொடிகளையும் (பெற்றாள்.) ஒருபெண் நீர்வாழ்வன

வற்றைப் (பெற்ருள்.) மதிக்கப்படும் ஒருபெண் பசுமுதலான இரண்டுகுள ம்பையுடைய மிருகங்களைப்பெற்ருள். எ-று. (எ)

ஒருத்திவான்செலும்பறவையையுயிர்த்தனடனுவா
மருத்திகூரிளவனிதைசம்பரன்றனையளித்தாள்
வருத்தமாய்த்திதியிரணியன்றனைமகிழ்ந்தளித்தாள்
பெருத்தவன்பினுற்பிரகலாதனையவன்பெற்ருன்.

இ-ள். ஒருத்தி ஆகாயத்திற்பறக்கும் பறவைகளைப்பெற்ருள். தனுவென்கின்ற விருப்பமிக்க இளமையையுடையபெண் சம்பரனைப்பெற்ருள். (வயா) வருத்தம் உண்டாகி திதியென்பாள் இரணியன் என்பவனை மகிழ்ச்சியுடன்பெற்ருள். அந்த இரணியன் மிக்க அன்பினுடன் பிரகலாதனைப் பெற்ருன். எ-று. (அ)

அங்கிராவினிதளித்தனன்குருவையாய்மறைநாத்
தங்குசீர்ப்பிருகிலக்குமியோடுதாதாவை
மங்குருதுயிர்த்தானவன்மகன்மிருகண்டு
துங்கமாமவன்மகவுமாற்கண்டனுஞ்சொலிலே.

இ-ள். அங்கிரா குருவை மகிழ்ச்சியுடன்பெற்ருன். ஆராய்கின்ற வேதங்கள் நாவிற்குடிகொண்டிருக்கின்ற சிறப்பையுடைய பிருகு இலக்ஷுமியோடு தாதா என்பவனைப் (புகழ்) குறையாதுபெற்ருன். அவனுடையபுதல்வன் மிருகண்டு என்பவனும். உயர்ச்சிபொருந்திய அவனுடையபுதல்வன் மார்க்கண்டனும்; எடுத்துச்சொல்லில். எ-று. (கூ)

புலத்தியன்மகாரகத்தியன்புகழும்விச்சிரவா
நலத்தவிச்சிரவாவருள்புதல்வனற்குபேரன்
பெலத்தசத்தியைப்பெற்றனன்வசிட்டன்மற்றவன்சேய்
விலக்கருந்தவப்பராசரனவன்மகன்வியாசன்.

இ-ள். புலத்தியனுடைய புதல்வர்கள் அகத்தியனும் புகழப்படும் விச்சிரவாவுமாம். (அவருள்) நன்மைபொருந்திய விச்சிரவா என்பவன்பெற்ற புதல்வன் நல்லகுபேரன். வசிட்டன் தவவலியையுடைய சத்தி என்பவனைப்பெற்ருன். அவனுடையபுதல்வன் (எவராலும்) விலக்குதற்கரிய தவத்தையுடைய பராசரன். அவனுடையபுதல்வன் வியாசன். எ-று. (க0)

சினமிறக்கனைம்பானெனுஞ்சிறுமியர்ப்பெற்ருன்
மனுவெனுஞ்சுவாயம்புவென்ஞெருபுறம்வந்தா
னனையவன்றருபுதல்வனுத்தானபாதன்ருன்
வனைபொலங்கழற்றுருவனைமற்றவனீன்ருன்.

இ-ள். கோபமில்லாத தக்கன் என்பவன் ஐம்பது என்னும் எண்ணையுடைய புதல்விகளைப்பெற்ருன். சுவாயம்புமனு என்பவன் என்று ஒருபுறத்தில் அவதரித்தான். அவன்பெற்ற புதல்வன் உத்தானபாதன். அவன் அலங்கரிக்கப்பட்ட பொன்னுற்செய்த வீரக்கழலையுடைய துருவனைப்பெற்ருன். எ-று. (கக)

இன்னவாறுலகெவற்றையும்படைத்தனனிதனை
முன்னமெண்ணிியமுழுச்செருக்கெனுங்கடன்மூழ்கி
யன்னையாய்த்தந்தைகுருவுமாயன்பினலளித்த
கன்னியந்துழாய்க்கருமுகிலிருக்கைபுக்கேனல்.

இ-ள். இப்படி உலகமெல்லாவற்றையுஞ் சிருட்டித்தேன், இதனை முன்னரேகருதிப் பெருஞ்செருக்காகிய சமுத்திரத்தில் அமிழ்ந்தி, மாதாவாய், பிதாவுங்குருவுமாய், அன்பினல் என்னைப்பெற்ற அழகற்ற துழாய் மாலையையணிந்த கரியமேகம்போன்ற விட்டுணுவினது இருக்கையையடைந்தேன். எ-று. (கஉ)

மலர்கடூவுதல்வணங்குதல்வாழ்த்துதலின்றி
யலர்துழாய்முகிலமலன்முன்னினையனவறைந்தே
னுலகெலாம்படைத்துன்னையும்படைத்தவையளித்தேன்
'குலவுமேலவனுனன்றிக்குறிக்கில்வேறுளரோ.

இ-ள். புஷ்பங்களைச்சொரிதல், நமஸ்கரித்தல், தோத்திரஞ்செய்தல் ஆகிய இவை சிறிதுமின்றி, அலர்ந்த துழாய்மாலையையணிந்த பரிசுத்தராகிய விட்டுணுவின்முன்னரே இவற்றைச்சொன்னேன்: உலகமனைத்தையுஞ்சிருட்டித்து, உன்னையுஞ்சிருட்டித்து, அவற்றைக்காத்தேன், சிந்திக்கில் விளங்குகின்ற மேன்மையுடையேன் நானேயன்றி வேறொருவர் உளரோ. எ-று. (கங)

மைந்தனுமிவனென்றொருமகிமையைவாய்ந்தாய்
தந்தவிப்பியோதரளமோவுயர்வெனுந்தன்மைத்
தந்தமேன்மையையகற்றியெம்போற்றியேயமர்தி
யுந்துதெண்டிரைக்கடலிடையொருவயினென்னு.

இ-ள். இவன் எம் புதல்வனுமென்று ஒரு மேன்மையைப்பொருந்தினய். ஈன்ற இப்பியா (ஈனப்பட்ட) முத்தா உயர்ந்தது என்று சொல்லப்படுந் தன்மையையுடையது! (இதனல்,) அந்த மேன்மையைநீக்கி என்னைத் துதித்துக்கொண்டு வீசுகின்ற தெளிவாகியதிரையையுடைய பாற்கடலின் ஒருபக்கத்தில் இரு என்று, எ-று. (கச)

ஓதல்கேட்டலுமுன்னையாம்படைத்தளித்ததனுற்
கோதிலாவுலகியற்றினைகுமரநன்றுணராப்
பேதையோரெனவுரைத்தனைபொறுத்தனம்பெயர்ந்து
போதியென்றனன்மீட்டுநின்றளப்பிலபுகன்றேன்.

இ-ள். (யான்) சொல்லுதலை விட்டுணுகேட்டலும், உன்னை நாம் படைத்துக்காத்ததனுற் குற்றமில்லாத உலகங்களைச்சிருட்டித்தனை. புதல்வனே, நன்மையையறியாத மூடரைப்போலப்பேசினய். (அதனைப்)பொறுத்தேம். (இவ்விடத்தை) விட்டுப் போ என்றார். திரும்பவும் நின்று அளவில்லாதனவற்றைச்சொன்னேன். எ-று. (கரு)

அரிபரந்தகன்றம்பலைத்தருள்பொழிநெடுங்கட்
டிருமகிழ்ந்துறைமார்பினிற்கவுத்துவந்திகழ
மருமலர்த்துழாய்விளங்கியேதுயல்வரவைகுங்
கருணைவாரிதிமாயனுங்கழறினன்சிலவே.

இ-ள். செவ்வரிபரந்து விசாலித்து அம்பை அலைவுசெய்து கிருபையைப்பொழிகின்ற நெடியகண்களையுடைய இலக்குமிமகிழ்ந்து வீற்றிருக்கின்ற மார்பிற் கௌத்துவமணிவிளங்கவும் வாசனைபொருந்திய மலரையுடைய துழாய்மாலைபிரகாசித்து அசையவும் வீற்றிருக்குங் கிருபைக்கடலாகிய விட்டுணுவுஞ் சில வசனங்களைக்கூறினார். எ-று. (கசு)

அறிவின்மேம்படுபிரமற்கேயிவ்வகையடுத்தா
லுறையுமேனையோர்க்கெவ்வகைசெருக்குறாதென்ன
நிறையுமிவ்வுலகுள்ளவர்நிகழ்த்தவிவ்வகையே
குறைவுறாவமராடியேகுறுகினம்நிலமேல்.

இ-ள். அறிவில்மேற்பட்ட பிரமனுக்கே இக்குணம்பொருந்தினால் (உலகில்) வசிக்கின்ற மற்றையோருக்குச் செருக்கு எவ்வாறு அடையாதுவிடும் என்று நிறைந்த இவ்வுலகத்துள்ளவர்கூற, (நாமிருவேமும்) இவ்வாறு குறைவில்லாதபோரைச்செய்து பூமியில்வந்தேம். எ-று. (கஎ)

ஆங்குநின்றமராடுழியவ்விடையமலன்
றாங்குசோதியந்தூணமாயெல்லையிறார
மோங்கிநின்றனனுட்பணைவிலக்குவாரொப்ப
வீங்கிதுற்றதையெவனெனவிருவரும்பாரா.

இ-ள். அங்குநின்று (நாங்கள்) போர்செய்யும்பொழுது சிவபெருமான் அவ்விடத்தில் ஒளிவிளங்குகின்ற அக்கினித்தம்பமாய் அளவற்றதூரம் உயர்ந்து (அப்போரை) விலக்குவாரைப்போல (எங்கள்) மத்தியில் நின்றருளினார். (அப்பொழுது) இதுவந்தமை என்னையென்று நாமிருவேமும்பார்த்து, எ-று. (கஅ)

அயர்ந்துநின்றனமாயிரகோடிசூரியர்போ
லுயர்ந்தசோதியுமந்தரவாணியாலுரைக்கும்
வயஞ்செய்வீரமும்வல்லபமேன்மையும்வல்லீர்
நயந்தநுங்களிலுயர்பிழிபியாவரோநவில்வார்.

இ-ள். சோகித்துநின்றேம். (அப்பொழுது) ஆயிரகோடி சூரியரைப்போல உயர்ந்த அக்கினித்தம்பமும் அசரீரிவாக்கால் அருளிச்செய்யும். வலிமையாலாகிய வீரத்திலும் வல்லபத்திலும் மேன்மையிலும் மிக்கவர்களே, (பரம்பொருளென்று) மதித்த உங்களுக்குள் உயர்வையுந் தாழ்வையும் எவர்சொல்வார். எ-று. (க௯)

ஆதலாலிதனடிமுடிகண்டவர்பெரியோ
ரீதலாதுவேறிலையெனப்பரமனுங்கியம்ப
மாதுபாகனைவழுத்தியேமணிமுடியானும்
பாதமாயனுங்காண்கவென்றியைந்தனம்பரிவால்.

இ-ள். ஆதலினால், இந்த அக்கினித்தம்பத்தின் அடியையும் முடியையும் கண்டவரேபெரியோர். இஃதன்றி வேறு (உபாயம்) இல்லையென்று சிவபெருமான் அப்பொழுது அருளிச்செய்ய, உமையொருபாகராகிய அவரைத்துதித்து, அழகியமுடியை நானும், பாதத்தை விட்டுணுவும் காண்போம் என்று அன்புடனே உடன்பட்டேம். எ-று. (உ0)

வேறு.

நுதிமுகத்துவெஞ்சினத்துவலிகெழுதாட்பன்றியுருநொய்தினெய்திக், கதிர்பொழியுமடலாழிகைபுனைந்துபுவியளிக்குஞ்சருடப்பாகன், மதிநிகர்வெண்கூர்ங்கோட்டான்மண்கொழுதிக்குடைந்துதிணிவன்பாரெல்லை, யதுகடந்துவெள்ளிடைச்சென்றாடகேசன்பதத்தையகன்றுபோகி.

இ-ள். (அப்பொழுது,) கிரணங்களைச்சொரியும் வலியசக்கரத்தைக் கையிலேந்தி உலகத்தைப் பாதுகாக்கின்ற கருடவாகனராகிய விட்டுணு, கூரியமுகத்தையும், கொடியகோபத்தையும், வலிபொருந்திய கால்களையும் உடைய பன்றிவடிவை விரைவிற்கொண்டு, இளம்பிறையைநிகர்த்த வெண்மையாகிய கூரிய எயிற்றினால் பூமியை அகழ்ந்துகுடைந்து, கடினமான வலியபூமியின் எல்லையைக்கடந்து (அப்பாலுள்ள) வெளியிடத்திற்போய் ஆடகேசருத்திரபதவியைக்கழிந்துபோய், எ-று. (உக)

பாதலம்போயதலமுதலேழுலகுங்கடந்துவெளிப்படர்ந்துநீங்கி
யேதமில்கூர்மாண்டபதங்கடந்துநிரையங்கடமையிகந்துகீழ்போ
யோதுபுகையழற்பிழம்புகாலங்கியுருத்திரனையரல்லைநீங்கிச்
சோதிநெடுந்திரட்பிழம்பினீறுருததுநோக்கித்துயரங்கொண்டான்

இ-ள். பாதலத்திற்போய் அதலமுதலாகிய ஏழுலகத்தையுங்கடந்து, (அப்பாலுள்ள) வெளியிற்சென்று அதனைநீங்கி, குற்றமில்லாத கூர்மாண்டருத்திரபதவியையுங்கடந்து, நரகங்களையுங்கடந்து கீழேபோய், சொல்லப்படும் புகையை அக்கினிப்பிழம்பு காலுகின்ற காலாக்கினியுருத்திரரை விரைவிலேநீங்கி, அக்கினிச்சோதியி னெடிய திரண்டபிழம்பினது அடி (தமக்குச்) சமீபியாமையைப்பார்த்துத் துன்பத்தைப்பொருந்தினார்.எ-று.()

அண்டகடாகமுமற்றையண்டமதுபலவுமகன்றறியானுகிக்,கொண்டல்வணன்ஞானமதுபயில்வோர்க்குநசைகோபங்குறையுமாபோல், வெண்டிரட்கோடதுதேயநன்றுடையோர்செல்வமெனவுயிர்ப்புவீங்கிக், கண்டிடுதலரிதென்னப்பழிச்சிவரும்வழிமீண்டான்கமலக்கண்ணன்.

இ-ள். மேகவண்ணருந் தாமரைக்கண்ணருமாகிய விட்டுணு, அண்ட கடாகத்தையும் ஏனை அண்டங்கள் பலவற்றையும்நீங்கி (அடியைக்) காணாதவராய், ஞானத்தைச் சாதிக்கின்றவர்களுக்கு விருப்பு வெறுப்புக்குறையுமாறுபோல வெண்மையான திரண்ட எயிறுதேய்ந்துபோக நன்மையையுடையோரின் செல்வமிகுமாறுபோலப் பெருமூச்சுமிகுந்து (இனி) அடியைக்காணல் அரிதென்று தோத்திரஞ்செய்து வந்தவழியேதிரும்பினார். எ-று. (௨௩)

அன்னமெனயான்பறந்துபுவலோகஞ்சுவலோகமகன்றுபோகிச்
சொன்னமகலோகமொடுசனலோகந்தவலோகந்துனைவினீங்கி
மன்னியசத்தியவுலகமாலுலகஞ்சிவபெருமான்மலையமீன்ற
கன்னியுடனுவந்துறையுஞ்சிவலோகங்கடந்தண்டகடாகநீங்கி.

இ-ள். அன்னவடிவங்கொண்டு நான்பறந்து புவலோகத்தையுஞ் சுவலோகத்தையுங்கழிந்துபோய், சொல்லப்பட்ட மகலோகத்தோடு சனலோகத்தையுந் தவலோகத்தையும் வேகத்தோடுகடந்து, (நான்) இருக்கின்ற சத்தியலோகத்தையும் வைகுண்டலோகத்தையும் சிவபெருமான் பார்வதியாருடன்மகிழ்ந்து வீற்றிருக்குஞ் சிவலோகத்தையுங்கடந்து, அண்டகடாகத்தையும்நீங்கி, எ-று. (௨௪)

இவ்வண்டம்போன்மற்றை யண்டங்கள்சிலகடந்து மெல்லைகாணு, தவ்வழலினெடுந்தூணத்தடியுற்றேன்மாலவனுமாங்குற்றுற்றான், செவ்விதிகழ்சிவன்றிருமுன்முடிகண்டேனென்றுபொய்ம்மை செப்பினேனான், மவ்வன்முகைநகைபாகன்சரண்கண்டேனிலையெனமால் வழங்கினானே.

இ-ள். இந்த அண்டத்தைப்போல ஏனையண்டங்கள் சிலவற்றைக்கடந்தும் (அச்சோதியின் முடியின்) எல்லையைக்காணாது அந்த நெடிய அக்கினிஸ்தம்பத்தின் அடியில்வந்தேன். விட்டுணுவும் அவ்விடத்தில்வந்தார். (அப்பொழுது; அழகுவிளங்கும் சிவபெருமானது திருமுன்னர் முடியைக் கண்டேனென்று யான் பொய்மையைச்சொன்னேன். விட்டுணு முல்லையரும்பையொத்த பற்களையுடைய உமையொருபாகராகிய சிவபெருமானுடைய அடியைக்கண்டிலேனென்று (உண்மையையே) கூறினார். எ-று. (௨௫)

நஞ்சுபொதிதுளையெயிற்றுநாகமரைக்கசைத்துமன்றினடனஞ்செய்யும், பிஞ்சுமதியணிந்தோனுமுண்மைசொலுமாயவன்மேற்பிரியங்கூர்ந்து, மஞ்ஞானேயோயெமைப்போலவுன்னையும்பூசனையுலகம்வழாதுசெய்க, கஞ்சமலரோய்பொய்ம்மையுரைத்தனைபூசனையின்றிக் கவல்கவென்றான்.

இ-ள். நஞ்சுபொதிந்த துளைபொருந்திய பற்களையுடைய சர்ப்பத்தைக் (கச்சாகத்) திரு அரையிற்கட்டிக் கனகசபையிலே திருநடனஞ்செய்யும் இளம்பிறையையணிந்த சிவபெருமானும் உண்மையைச்சொன்ன விட்டுணு

வின்மீது பிரியம்மிருந்து, முகிலைப்போன்றவனே, நம்மைப்போல உன்னையும் உலகம் பூசனையைத்தவறாதுசெய்க. பிரமனே, பொய்கூறினாய் (அதனால் உலகிற்) பூசனையில்லாமல் வருந்துக என்றருளிச்செய்தார். எ-று. (உசு)

வேறு.

அருணாசலமேயமரர்க்கிறைவா
மருவாய்மலராய்மனமாய்ப்புலனா
யிருவான்வளிதீயறன்மண்ணெனுமைந்
துருவாய்நிறையும்மொருவாசரணம்.

இ-ள். சிவந்தமலையே, தேவநாயகரே, வாசனையாயும், (அந்தவாசனை தோன்றுதற்கிடமாகிய) பூவாயும், மனமாயும், (அம்மனமறியும்) அறிவாயும், பெருமையான ஆகாசம் வாயு தேயு அப்பு பிருதுவி என்னும் பஞ்சபூதவடிவாயும் வியாபித்திருக்கும் ஏகரே நமஸ்காரம். எ-று. (உஎ)

வண்டேறியயாமலர்தோய்முடியைக்
கண்டேனெனவேகழறுஞ்சடமுட்
கொண்டேகுறைகொண்டுமுனிந்தனையேற்
றொண்டேனையளிக்குநரேவர்சொலாய்.

இ-ள். வண்டுகள்விழுகின்ற பெருமையாகிய (கொன்றைப்பூப்) பொருந்திய திருமுடியைக்கண்டேனென்று (சிறியேன்) கூறும்பொய்யைத் திருவுளத்தடைத்துத் தவறாகக்கொண்டு கோபித்தீராயில், அடியேனைரக்ஷிப்பவர் யாவர் (அதனை) அருளிச்செய்க. எ-று. (உஅ)

இதுவேகுறையென்னினுயிர்த்தொகைதாம்
மதிசூடியநின்செயலாமதியா
தெதுசெய்யினுமெஞ்செயலென்றுசெயும்
விதியுங்குறைகொள்ளுதியோவிமலா.

இ-ள். மலரகிதரே, இதுவே ஒரு குறையாயில், ஜீவராசிகள் எதனைச் செய்யினும் சந்திரனை அணிந்த தேவரீருடைய செயலாகக்கருதாது எமது செயலென்று கருதிச்செய்கின்ற நியதியையும் குறையாகக்கொண்டருளுகின்றீரோ! எ-று. (உகூ)

வனமார்தவமாமுனிவோருமலே
னனலார்கணிலங்கையரக்கனலேன்
மனைகாவெனவைத்திடும்வாணனலே
னெனையோவுயர்சாபமியம்புவதே.

இ-ள். காட்டிற்சஞ்சரிக்குந் தவத்தையுடைய முனிசிரேட்டர்களும் அல்லேன்; அக்கினியைச்சொரியுங் கண்களையுடைய இலங்கைக்கரசனாகிய இராவணனும் அல்லேன்; (தன்) மாளிகையைக் காவல்புரிகவென்று (தேவரீரை) வைத்த வாணாசுரனும் அல்லேன்; நாயேனையா (ஒருபொருட்படுத்தி) பெருஞ்சாபத்தை அருளிச்செய்வது! எ-று. (ஙo)

வேறு.

இவ்வாறுசாபம்விளைவுற்றவேலையிறைமுன்னிறைஞ்சிமொழியச்
செவ்வாய்திறந்துசிவனோதுமேன்மைசெறிகின்றதோகைமலையின்
வெவ்வாட்படைக்கையசுரேசர்மாளவிடுவேற்கைநம்பியெவரு
மொவ்வாதவென்றிமுருகேசன்வைகுமவணெய்தியூறுதவிர்வாய்.

இ-ள். சாபம்நிகழ்ந்தபொழுதில் இவ்வாறு சிவபெருமானது திருமுன் நமஸ்கரித்து (யான்) விண்ணப்பஞ்செய்ய, சிவந்த திருவாயைத்திறந்து சிவபெருமானருளிச்செய்வார்: மேன்மைமிக்க மயூரகிரியில் வெவ்விய வாட்படையைத்தாங்கிய கையையுடைய அசுரத்தலைவர்கள் அழியத் தூண்டிய வேற்படையை ஏந்தியகையையுடைய நமது குமாரனாகிய ஒருவரும் நிகரில்லாத வெற்றிபொருந்திய சுப்பிரமணியன் இருப்பான். அவ்விடத்தையடைந்து உன்சாபத்தை நீக்குதி. எ-று. (௩௧)

என்னப்புகன்றவருளுக்கொர்வள்ளலெனுமண்ணறன்னையிறையோய், மன்னும்நசோதிசிறுவெற்பதாகவரைமுன்னிலிங்கவடிவாய்த், துன்னச்சிறந்தவரமீதியென்று தொழுதோமவ்வண்ணமுறலுந், தென்னுற்றமஞ்ஞைவரையெய்தவீசன் விடைகொண்டுசென்றனனரோ.

இ-ள். என்று அருளிச்செய்த கிருபைக்கு ஒரு வள்ளற்றன்மையினர் எனக்கூறுஞ் சிவபெருமானை, கடவுளே! நிலையான (இந்தச்) சோதி சிறுமலையாகவும், அந்தமலையானது தியானிக்கப்படும் சிவலிங்கவடிவாகப்பொருந்தவும், சிறப்பானவரத்தைத் தந்தருளுகவென்று வணங்கினோம். அப்படியேநிகழவும், (யான்) புகழையுடைய மயூரகிரியையடையும்படி சிவபெருமானது விடையைப்பெற்றுச்சென்றேன். எ-று. (௩௨)

வானோருமண்ணின்வதிவோரும்வந்துவடிவேல்வலங்கொள்குகனை
யானுமெய்யன்பினடிமேல்வணங்கியகல்கின்றவாறுதெரியாத்
தேனுறுகஞ்சமலர்வாவிதோய்ந்துதிருநீறணிந்துபரிவா
னுறுகுமண்ணுறிருவாறெழுத்துமுளமீதுநண்ணநவிலா.

இ-ள். தேவரும் மானுடரும்வந்து கூரிய வேற்படையினை வலத்திருக்கரத்தில் ஏந்திய குமாரசுவாமியை ஒழியாத மெய்யன்போடு பாதங்களில் வணங்கிப் போகின்றமையைக்கண்டு, தேன்பொருந்திய தாமரைமலர்கள் செறிந்த சரவணப்பொய்கையில் ஸ்நானஞ்செய்து விபூதியையணிந்து அன்பினால் நானுய்விளங்குகின்ற குமாரசுவாமியினது ஸ்ரீசடக்ஷரத்தையும் மனத்திற்பொருந்த உச்சரித்து, எ-று. முருகக்கடவுளாற் சாம்பவிதீக்ஷைசெய்யப்பெற்றுத் தன்னையுந் தலைவராகிய அவரையும் உள்ளபடியறிந்து தான் என்றும் அவரொன்றும் வேற்றுமை சிறிதுமின்றிப் பாவனைசெய்யும் விசிட்டாத்வைதபத்தி நானுகுமன்னல் எனப் பிரமன்கூறினான். (௩௩)

வரைமேலிவர்ந்துவரைகீறும்வேற்கைவரைவில்லிசேயைநணுகி
விரையார்நறுந்தண் மலர்தூவிவாழ்த்தி வேண்டிக்கொள்போதினுவ
வொருவாதவென்றியெமதையளேதுமுயர்சாபநீக்குவமெனுப் [வா
பரையாடன்மைந்தனெனை நோக்கியீதுபரிவான்மொழிந்திடுவனால்.

இ-ள். (யான்) மலைமேலேறிக் கிரவுஞ்சகிரியைப்பிளந்த வேலையேந்திய திருக்கரத்தையுடைய மேருகிரியை வில்லாக ஆண்ட சிவபெருமானது திருக்குமாரரையடைந்து வாசனைநிறைந்த நறுமையாகிய குளிர்ந்த புஷ்பங்களைச்சொரிந்து துதித்து வேண்டுதல்செய்கின்றகாலத்தில், பார்ப்பதியாரின் புதல்வராகிய அவர்மகிழ்ந்து, (பிரமனே, உனக்கு) நீங்காத வெற்றியையுடைய நமதுபிதா அருளிச்செய்த உயர்ந்தசாபத்தை நீக்குவேமென்று என்னைப்பார்த்து இதனை அன்பினோடு திருவாய்மலர்ந்தருளுவார். எ-று. (௩௪)

வேறு.

கருதுநித்தியந்திறேடுநைமித்திகத்தின்
மருவுகாமியகன்மத்தின்மறையவருருவினின்னை
யொருவறப்பூசைசெய்கநன்றுநின்னுலகுசேர்ந்து
பருவரலின்றியாவும்படைத்தனையிருத்தியென்றான்.

இ-ள். (நமதுபிதா அருளிச்செய்தபடி உலகில் உனக்கு ஆராதனைநடவாதாயினும்) மதிக்கப்படும் நித்தியகன்மத்தினும், சொல்லப்படும் நைமித்திககன்மத்தினும், பொருந்திய காமியகன்மத்தினும், பிராமணருடையவடிவத்தில் உன்னைத் தள்ளாது பூசைசெய்குக. (இனித்) துன்பமின்றி நன்றாக உன் உலகையடைந்து எல்லாவற்றையுஞ்சிருட்டித்து இருப்பாய் என்றருளிச்செய்தார். எ-று. (௩௫)

பெண்ணொருபாகங்கொண்டபின்னுகன்றவத்தாற்பெற்ற
வண்ணறனருளைநோக்கியாதரம்பெருகப்போற்றி
விண்ணவர்முனிவர்சூழவிழுப்பெருஞ்சிறப்பினோடு
மெண்ணுமிவ்வுலகுநண்ணியிருந்தனனினிதுமாதோ.

இ-ள். பார்ப்பதியாரை ஒருபாகத்தில்வைத்தருளிய சிவபெருமான் தவத்தினாற்பெற்றருளிய குமாரசுவாமியினது திருவருளைக்கருதி, அன்புமிகத்துதித்து, தேவர்களும் இருடிகளுஞ்சூழ மிகப் பெரிய சிறப்பினோடும் மதிக்கப்படும் இந்த உலகையடைந்து மகிழ்ச்சியுடனிருந்தேன். எ-று. ()

என்னுடைப்பூசைத்தன்மையிசைத்தனனினிமேன்மிக்க
பன்னகவயிரிபூசைபண்ணியவியல்புசொல்வேன்
மன்னனுந்தக்கனீன்றமடந்தையரைம்பான்றம்மில்
வின்னுதற்கருங்கட்செவ்வாய்வினதையென்றொருத்தியாமால்.

இ-ள். எனது பூசையின்றன்மையைச்சொன்னேன். இனி, மேலான கருடன் பூசனையைச்செய்த இயல்பைச்சொல்வேன். தலைவனான தக்கன்

பெற்ற ஐம்பது என்னும் எண்ணையுடையபெண்களில் விற்போன்ற நெற்றியினையும் கரியகண்ணினையும் சிவந்த வாயினையும் உடைய வினதை என்று ஒருத்தி உண்டு. எ-று. ஐம்பான்மடந்தையர் தம்மில் என இயையும். (கள)

ஆங்கவளுயிர்த்தமைந்தனஞ்சிறைக்கலுழனுரு
மோங்கெழிலவடான்றன்னோடொருவயிற்றுதித்தநங்கை
மாங்குயின்மருட்டுந்தீஞ்சொற்கத்துருவென்பாளோடுந்
தேங்கமழ்மலர்கள்கொய்வான்காவினிற்சென்றுபுக்காள்.

இ-ள். அவள்பெற்றபுதல்வன் அழகிய சிறையையுடைய கருடனும். உயர்ந்த அழகையுடைய அந்தவினதை, தன்னோடு ஒருவயிற்றிற்பிறந்த பெண்ணாகிய மாமரத்திலிருக்குங் குயிலையும் மயக்கும் இனிய சொல்லையுடைய கத்துரு என்பவளோடும் நறுமணங்கமழும் புஷ்பங்களைக்கொய்யும்படி சோலையிற்போய்ப்புகுந்தாள். எ-று. (கஅ)

வேறு.

அண்டர்கோனிவர்பரிநிறமுண்மையாவறையிற்
றொண்டுசெய்குவனின்னுழைநானதுசொல்லிற்
கண்டுபோன்மொழிக்காரிகையென்னுழையேவல்
விண்டசெய்கெனக்கத்துருவிளம்பினளன்றே.

இ-ள். (அப்பொழுது) கத்துரு என்பவள் இந்திரன் ஏறுகின்ற குதிரையின் நிறத்தை (நீ) உண்மையாகச்சொல்லில் உன்மாட்டு அடிமைத்தொழில்செய்வேன், நான் அந்த உண்மையைச்சொன்னால், கற்கண்டுபோன்ற சொல்லையுடையபெண்ணே நான்சொன்ன ஏவலை (நீ) என்மாட்டுச்செய்குக என்றுசொன்னாள். எ-று. (ககூ)

பாலைநேர்தருவெண்மையாமிந்திரன்பரியென்
றேலவார்குழல்வினதைமாதிசைத்தனள்விறலால்
வேலைநேர்விழிமின்னிடைக்கத்துருவென்பாள்
கோலவப்பரிகரிதெனக்கூறினளன்றே.

இ-ள். (கத்துரு இப்படிச்சொன்னபொழுதில்) மயிர்ச்சாந்தையணிந்த நீண்ட கூந்தலையுடைய வினதையானவள், இந்திரனுடைய குதிரை பாலையொத்த வெண்மைநிறமுடையது என்று கூறினாள். வேலையொத்த கண்ணையும் மின்னையொத்த இடையையும் உடைய கத்துருவென்பவள், வலிமையினால் அழகிய அந்தக்குதிரை கரியது என்றுசொன்னாள். எ-று. (௬0)

வினதைநாளைநாங்காண்டுமென்றுரைத்திடமீண்டு
மனையின்வந்தனரிருவருங்கத்துருமகாரா
சினவுநாகரையழைத்துநீர்சென்றுவானவர்கோன்
புனையும்வெண்பரிகறைகொளப்புரிந்துமீள்கென்றாள்.

இ-ள். (அதனைக்கேட்ட) வினதை, நாளைக்கு நாம் பார்ப்போமென்று கூற, இருவருந்திரும்பி வீட்டில்வந்தார்கள். (அப்பொழுது) கத்துரு என்பவள் பிள்ளைகளாகிய கோபத்தையுடைய நாகர்களை அழைத்து, நீங்கள்

போய் இந்திரனது அலங்கரிக்கப்பட்ட வெண்மையையுடைய (உச்சயிச்சிரவா என்னுங்) குதிரை கருமையைப்பொருந்தும்படிசெய்து திரும்புக என்றாள். எ-று. (௪௧)

மாகமீதுபோயன்னைசொன்மறாதுவாம்பரியை
வேகவெவ்விடமுகுத்துவெண்ணிறத்தினைக்கருமை
யாகவாக்கியேயன்னைதன்னிடத்தஃதறைந்து
நாகர்யாருமங்குற்றனர்பின்னைநன்னாள்வாய்.

இ-ள். நாகரனைவரும் விண்ணுலகிற்போய்த் தாயினதுசொல்லைமாறாமல், பாய்கின்ற குதிரையை வேகத்தையுடைய கொடியநஞ்சைச்சொரிந்து, வெண்மைநிறத்தைக் கருமைநிறமாகச்செய்து, மாதாவாகிய கத்துருவினிடத்தில் அதனைக் கூறி, அங்கே இருந்தார்கள். நன்மையாகிய மற்றைநாளில், எ-று. (௪௨)

முல்லையங்குழற்பிறைநுதன்மூரிவாட்டடங்கட்
சில்லரிச்சிலம்பரற்றுபூஞ்சீறடிவினதை
வில்லைநேர்நுதற்கத்துருவோடும்விண்படர்ந்து
சொல்லுமும்பர்கோன்பரியெதிர்தோன்றுறக்கண்டாள்.

இ-ள். முல்லைப்பூவைமுடித்த கூந்தலையும், பிறைபோலும் நெற்றியையும், வலிய வாள்போலும் விசாலித்தகண்ணையும், ஆரவாரிக்கின்ற பருக்கைக்கற்கள்பொருந்திய சிலம்பொலிக்குந் தாமரைமலர்போன்ற சிறுத்த கால்களையுமுடைய வினதையானவள், வில்லையொத்த நெற்றியையுடைய கத்துரு என்பவளோடு விண்ணுலகிற்போய், சொல்லப்பட்ட இந்திரனது குதிரை எதிராகவரக் கண்டாள். எ-று. அம் - சாரியை. (௪௩)

வாவுவான்பரிகரிதியான்கத்துருமடந்தா
யேவல்செய்குவனினக்கெனவினதைமாதிசைப்பப்
பூவையன்னவரிருவரும்புவியினிற்புகுந்தார்
தூவியன்னமென்னடையினாள்வினதையாந்தோகை.

இ-ள். பாய்கின்ற மேலாகியகுதிரை கரியது. (ஆதலினால்,) கத்துருவே யான் உனக்கு ஏவல்செய்வேன் என்று வினதை என்பவள்சொல்ல, (இனியமொழியால்) நாகணவாயையொத்த இருவரும் பூமியில்வந்தார்கள். (அவர்களில்) தூவிபொருந்திய அன்னம்போன்ற மென்மையான நடையினையுடைய வினதை என்பவள், எ-று. (௪௪)

பறவையாவையும்வெருக்கொளப்பாய்ந்துபாய்ந்தெற்று
மெறுழ்கொள்வான்றவக்கருங்குரீஇகூய்த்துயிலெழுப்புஞ்
சிறுகுமாரிருட்புலரியிற்கத்துருவிடைச்சென்
றறையுமேவல்செய்தில்வயின்மாலைவாயடைவாள்.

இ-ள். பட்சிகளனைத்தும் அஞ்சும்படி தாவித் தாவித் தாக்கும் வலிமைபொருந்திய பெருமையான தவத்தையுடைய கரிக்குருவிகூவி (ஊரிலுள்ளாரை) நித்திரையினின்றெழுப்புகின்ற நிறைந்த இருள்குறைகின்ற வைகறை

க்காலத்தில் கத்துருவினிடத்திற்போய் (அவள்) கற்பித்த வேலைகளைச்செய்து மாலைக்காலத்தில் தன்வீட்டில்வருவாள். எ-று. மதுரையிலே ஒரு கரிக்குருவிக்குச் சோமசுந்தரக்கடவுள் மிருத்தியுஞ்சயமந்திரவுபதேசஞ்செய்து அச்சாதி வினைப் பக்ஷிசாதிகளினும்பார்க்க வலியுடைத்தாயிருக்கும்படி வரங்கொடுத்தமையினால் 'எறும்கொள்வான்றவக்கருங்குரீஇ' எனப்பட்டது. ()

கொடுமைதங்கியசரக்கறைவஞ்சமார்குடம்பை
நெடுமதஞ்செறிகடுவனமாதர்நெஞ்சென்னத்
தொடிகொள்கத்துருவுடன்பிறப்பென்றுளந்தோற்று
ளடிமையாதரிலேவல்கொண்டமர்ந்தனளன்றே.

இ-ள். பெண்களதுமனம் கொடுமையாகிய சரக்கு இருக்கும் அறை, வஞ்சமாகிய (பறவை)நிறைந்தகூடு, மிக்க மூர்க்கமாகிய (மிருகஞ்)செறிந்த கடியகாடு என்று (எவருங்) கூற, வளையலையணிந்த கத்துரு என்பவள் (வினதையைச்) சகோதரி என்று மனத்தில்நினையாதவளாய் தாதியரைப்போல வேலைச்செய்வித்திருந்தாள். எ-று. வஞ்சமார்குடம்பை என்பதற்கு வஞ்சகமாகிய தானியம்நிறைந்த குதிர் எனினும், நெடுமதஞ்செறிகடுவனம் என்பதற்கு மிக்க மூர்க்கமாகிய முட்செறிந்த காடு எனினும்பொருந்தும். (௬௬)

நெடிதுகாலமித்தன்மையாநிகழ்வுழியொருநாட்
புடையின்வைகியேபுள்ளரசன்னைமுன்புகலும்
விடியுங்காலையிலேகுதிமாலைவாய்மீள்தி
துடிமருங்குலாய்யாண்டுப்போய்வருதிசொல்லென்றான்.

இ-ள். நெடுங்காலம் இத்தன்மையாகநிகழும்பொழுதில் ஒருநாள் கருடன் பக்கத்திலிருந்து தாயினிடத்திற்சொல்வான். விடியற்காலத்திற்போகின்றாய். மாலைக்காலத்தில்வருகின்றாய். உடுக்குப்போன்ற இடையையுடைய மாதாவே, எங்கேபோய்வருகின்றாய். சொல்லுதி என்றான். எ-று. ()

வந்தவாற்றினையுள்ளவாறியம்பிடமாழ்கித்
தந்தைதாயினுக்கிடுக்கண்வந்துற்றுழித்தவிரா
மைந்தர்மைந்தரன்றிதற்கொருசூழ்ச்சியான்வகுப்பன்
சிந்தைமாழ்கலென்றுரைத்திதுசெப்பினன்மன்றே.

இ-ள். (வினதை) நிகழ்ந்தசம்பவத்தை யுள்ளபடிசொல்ல வருந்தி பிதாமாதாக்களுக்கு வருத்தம்வந்தபொழுது (அதனை) நீக்காதபுதல்வர்கள் புதல்வர்களல்ல. இதற்கு ஒரு உபாயத்தை யான்சொல்வேன் மனம் மயங்கற்க என்று கூறிப் (பின்) இதனைச்சொன்னான். எ-று. (௬௮)

யாதுவேண்டினுந்தருகுவல்சிறைவிடுகெனவம்
மாதுமைந்தர்பால்வழங்குதிமற்றிடாரவர்கள்
காதலோடெனவுரைக்குவர்கடிதுவந்தென்பா
லோதிலாரமுதாயினுங்கொணர்வனென்றுரைத்தான்.

இ-ள். எதனைவிரும்பினுந்தருவேன் (என்) சிறையைவிடுக என்று அந்தக் கத்துருவினுடைய புதல்வர்களிடத்தில் சொல்லுதி. அவர்கள் (அத

ற்கு) உடன்பட்டவர்களாய் விரும்பியது இது என்றுசொல்வார்கள். (நீ) விரைந்துவந்து என்னிடத்தில் (அதனைச்) சொல்லில் அரிய அமுதமாயினுங் கொண்டுவருவேன் என்று கூறினான். எ-று. (௪௯)

தாயுமவ்வணஞ்சாற்றலுமமுதநீதந்தா
லோதுமச்சிறைவிடுதுமென்றுரகராங்கியம்ப
வேயையன்னதோள்வினதையும்மகனொடுவிளம்பத்
தூயவெஞ்சிறைக்கலுழனுமிவ்வகைதுணிந்தான்.

இ-ள். (கருடனது) தாயாகிய வினதையும் அவ்வாறுசொல்லுதலும், அமுதத்தை நீதரில் சொல்லுகின்ற அச்சிறையைநீக்குவேம் என்று நாகர்கள் அப்பொழுதுசொல்ல, மூங்கில்போலுந்தோளையுடைய வினதையுந் தன்புதல்வனோடு (அதனைச்) சொல்ல, சுத்தமான வேகம்பொருந்திய சிறையையுடையகருடனும் இவ்வாறுதுணிந்தான். எ-று. (௫௰)

வேறு.

எஞ்சாமதுகைச்சூரர்படையென்னுங்கமஞ்சூற்கருமேக
மஞ்சாதொருங்குவளைத்திடவங்கதனையொருநேமியிற்காற்றிற்
பஞ்சாச்சிதறிவெளிவந்தபரமன்குமரன்மயில்வரைவாய்த்
துஞ்சாவிளக்கேபோல்வைகியடியார்துயரந்தீர்க்கின்றான்.

இ-ள். குறையாத வலியினையுடைய சூரனது சேனையாகிய நிறைந்த கருவையுடைய கரியமேகம் அச்சமின்றி ஒருசேரச்சூழ, அதனை ஒரு சுழல்காற்றின்முற்பட்ட பஞ்சாகச்சிதறி வெளியேவந்த சிவகுமாரர், மயூரகிரியில் அவியாததீபம்போலவீற்றிருந்து அன்பர்களின்துன்பத்தை நீக்கியருள்கின்றார். எ-று. சூரர் - இழிப்பின்கண்வந்தது. நேமியிற்காற்று என்பதில் இல் - சாரியை. (௫௧)

இம்மையதனின்முனிவர்சித்தரிமையோர்மண்ணோரெவர்கட்கு
மம்மவிழைந்தவிழைந்தவெலாமளித்தவ்வரைவாயினிதிருக்குஞ்
செம்மலிடைப்போய்வரம்பெற்றுத்தேவரமுதந்தருவனென
விம்முமுடலன்னையடிவீழ்ந்துவிடைகொண்டெழுந்தனனால்.

இ-ள். இப்பிறப்பில் இருடிகள் சித்தர்கள் தேவர்கள் மானுடர்கள் ஆகிய அனைவருக்கும் விரும்பியவிரும்பியவற்றையெல்லாம் கொடுத்தருளி அம்மலையில் மகிழ்ச்சியுடன்வீற்றிருக்குங் குமாரசுவாமியினிடத்திற்போய் வரத்தைப்பெற்றுத் தேவர்களுக்கு உரிய அமுதைத்தருகுவேன் என்று பூரிக்கும் உடம்பையுடையனாய், மாதாவினது கால்களில் நமஸ்கரித்து விடைபெற்று எழுந்தான். எ-று. (௫௨)

காற்றுமனமும்புறங்கிடப்பக்கடிதுபறந்தவ்வரைநணுகிப் [கொண்
போற்றிப்படிந்துசரவணத்தைப் பொருப்பைநூற்றெண் காலவலங்
டேற்றினமர்ந்தோன்மகன்றிருமுனெய்திமனத்தாலருச்சனைசெய்
தாற்றல்சான்றகுமரேசனருள்பெற்றாதினவணிங்கி.

இ-ள். வாயுவும் மனமும் பின்கிடக்கவிரைந்துபறந்து அம்மலையைய டைந்து, சரவணப்பொய்கையைப்புகழ்ந்து அதில் ஸ்நானஞ்செய்து, மலையை நூற்றெட்டுத்தரம் பிரதக்ஷிணஞ்செய்து, இடபவாகனத்தில் எழுந்தருளிய சிவபெருமானுடைய குமாரரின்றிருமுன்னேபோய் அன்போடு அருச்சித்து வலிமிக்க குமாரசுவாமியுடைய கிருபையைப்பெற்று அருமையாக அவ்விடத்தில்நின்று நீங்கி, எ-று. மனத்தாலருச்சனைசெய்து என்பதற்கு மானதபூசைசெய்தெனினுமமையும். (ருரு)

மண்ணோர்நடுங்கவரைகுலுங்கமாநாகங்களுளம்பதைப்ப
விண்ணூடெழுந்துகற்பகநாடகன்றுமேற்செல்பொழுதினைமை
யெண்ணாதமுதமெடுத்திடுவான்புகுதிநீயோவெனவமர்க்குக்
கண்ணாயிரத்தோனமரருடன்றவளக்களிறூர்ந்தேகினனால்.

இ-ள். உலகிலுள்ளோர்நடுங்கவும், மலைகள்குலுங்கவும், பெரியசர்ப்பங்கள் மனம்பதைக்கவும், ஆகாயத்தினூடேயெழும்பி விண்ணுலகைநீங்கி மேலே போகும்பொழுதில், இந்திரன் நம்மைமதியாது அமுதை எடுக்கும்படி நீயோவருகின்றாய் என்று தேவர்களுடன் ஐராவதயானையை வாகனமாகக்கொண்டு செலுத்தி போருக்குப்போனான். எ-று. (ருசு)

கடைநாண்முகில்போற்சிலைவளைத்துக்கணைமாமழைகள்பொழிந்திடலும், படவாளரவுபடப்புடைக்கும்பாழிச்சிறையின்பெருங்காற்று, லடையவகற்றியப்பாற்சென் றமுதமெடுத்துத்தனிமீண்டு, கொடுவாழரவுக்களித்தன்னை கொளும்வெஞ்சிறையின் றுயர்தீர்த்தான்.

இ-ள். ஊழிக்காலமுகிலைப்போல வில்லைவளைத்து மிக்க பாணமழைகளைச்சொரியவும், படத்தையுடைய கொலைத்தொழில்பொருந்திய சர்ப்பம் அழியவீசுகின்ற விசாலமாகிய சிறையின் பெரியகாற்றினால் ஒருசேர (அவற்றைத்) தவிர்த்து அப்பாற்போய் அமுதையெடுத்துத் தனியேதிரும்பிக் கொடிய (புற்றில்) வாழ்கின்ற சர்ப்பங்களுக்குக்கொடுத்து, மாதாவாகிய வினதை கொண்டிருக்கின்ற வெவ்வியசிறையாலாகிய துன்பத்தைநீக்கினான். எ-று. வாள் - கொலை. (ருரு)

பிரமாவின்கதையும் கருடேசன்கதையுமுரைத்தசருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் சகசுஅ.

---

பதினொராவது

## இந்திரன்கதையும் ஆதித்தன்கதையும் மன்மதன்கதையுமுரைத்தசருக்கம்.

இகலேய்கொடுவெஞ்சினக்கலுழன்கதையையியம்பினமினிமேன்
மகவான்முனம்போயருச்சனைசெய்வண்ணமதனைவழங்கிடுவாஞ்
சகமீதசுரர்குலத்துதித்தோன்றளராத்திறலோன்றழற்கண்ணா
னகுதாரமரர்க்கடலரியேறனையோன்முசிநாமமுளான்.

இ-ள். (நாரதமுனிவனே,) மாறுபாடுபொருந்திய கொடிய வெவ்விய கோபத்தையுடைய கருடனதுசரித்திரத்தைச்சொன்னோம். இனி இந்திரன் முற்காலத்திற்போய்ப் பூசித்த தன்மையைச்சொல்வோம். பூமியில் அசுரர் குலத்திற்பிறந்தவன், தளர்ச்சியில்லாத வலியினையுடையவன், அக்கினிசொலிக்கின்ற கண்ணையுடையவன், பிரகாசிக்கின்ற மாலையையணிந்த தேவர்களுக்கு வீரத்தையுடைய ஆண்சிங்கம்போன்றவன், மூசி என்னும் நாமத்தையுடையவன், எ-று. (௧)

பெரியோர்நயந்துசெயுஞ்செய்கைபிழையாதியற்றல்புதல்வர்தமக்
குரியகடனெனக்கான்போயெம்மையுளத்தினுறச்சேர்த்தி
யரியதவத்தைநிரப்பியுமவன்பாலருள்வான்யாமணுகி
யொருவராலும்வெலற்கரியதிறலுஞ்சிருமுதவினமால்.

இ-ள். தம் முன்னோர்விரும்பிச்செய்கின்ற செய்கையைத் தவறுமற் செய்தல் புத்திரர்களுக்கு உரிமையானகடனும் என்று காட்டிற்போய் நம்மை மனத்திற்பொருந்தத்தியானித்து, அரியதவத்தைச்செய்து இருக்க, நாம் அன்பினால் (அவனுக்கு) அருள்புரியும்படிபோய் ஒருவராலும் வெல்லுதற்கு அரிய வலியையுஞ் செல்வத்தையுங்கொடுத்தோம். எ-று. (௨)

அதனாலமரர்பதிபுகுந்துவளைத்தான்சுரரையடலயிரா
வதமேல்வலாரியிமையவர்தங்குழுவோடடைந்துபகழிமழை
யுதவாவிடியினார்த்திடவுமொளிரும்வடிவேன்மூசியென்னு
மதுவார்தெரியலசுரேசன்வாளிமழையாலவைமாற்றி.

இ-ள். அதனாலே விண்ணுலகிற்போய் (அதில்வசிக்கின்ற) தேவர்களைச்சூழ்ந்தான். (அப்பொழுது) இந்திரன் வலியினையுடைய ஐராவதத்தின் மேல் ஏறித் தேவர்கூட்டத்தோடுவந்து பாணமழைகளைப்பொழிந்து இடிபோல ஆரவாரிக்கவும், விளங்குகின்ற கூரிய வேற்படையினையுடைய மூசி என்னும் தேன்சொரியும் மாலையையணிந்த அசுரராசன் பாணமழையால் அவைகளைநீக்கி, எ-று. (௩)

எண்ணில்கணைகண்மழைபோலச்சொரிந்தானிரிந்தாரிமையோர்க
ளண்ணலயிராவதப்பாகன்வெருவியோடியாசான்மு
னண்ணிநிகழ்ந்ததிறநவின்றான்மூசியசுரன்கொடுங்கோலால்
விண்ணினொடுமண்ணுலகாண்டானவன்சீரெவரேவிளம்புவார்.

இ-ள். அளவிறந்தபாணங்களை மழைபோலப்பொழிந்தான்; தேவர்கள் ஓடினார்கள். பெருமைபொருந்திய ஐராவதயானையைச் செலுத்துகின்ற இந்திரன் அஞ்சியோடிக் குருவாகிய வியாழனுக்குமுன்போய்ச் சம்பவித்ததன்மைகளைச்சொன்னான். (அப்பொழுது) மூசி என்னும் அசுரன் கொடுங்கோலினால் விண்ணுலகத்தோடு மண்ணுலகத்தை அரசாண்டான். அவன்புகழை எவர்சொல்லவல்லர்! எ-று. (௪)

சுருதிமிருதிநியாயநூற்றெல்லைமீமாமிசையுணர்ந்த
குருவும்மகவான்றனைநோக்கிக்கூறும்நமக்கேயருளளிக்கும்
பிரமனசுரற்கருள்புரிந்தாற்பிறர்யாரளிப்பார்நங்குலத்துக்
கருள்வைத்தளிக்குங்குமரேசனல்லாலெனவிவ்வகைபணிப்பான்.

இ-ள். வேதங்களையும் மிருதிகளையும் தருக்கசாத்திரங்களையும் பழைய மீமாஞ்சைநூல்களையும் அறிந்த வியாழனும் இந்திரனைப்பார்த்துச்சொல்வான்: எங்களுக்கே கிருபையைப்புரியும் பிரமா அசுரனுக்குக் கிருபைசெய்தால் எங்கள்குலத்திற்குக் கிருபையேவைத்து ரக்ஷிக்கின்ற குமாரசுவாமியன்றி வேறு யார்(நம்மை)ரக்ஷிப்பார் என்று இவ்வாறுகூறுவான். எ-று.()

கந்தக்கடவுடனைவேண்டிலளிப்பன்மனநீகவலலவன்
சொந்தத்தலமாய்ப்புவியிலுறைதொல்லைவீடுபலவவற்றிற்
சிந்தைக்கியைந்தவரம்விரைவிலளிக்கும்மயூரகிரிதிகழு
மந்தக்கிரியினெய்தியவனடிபோற்றுவதேநலமாமால்.

இ-ள். குமாரசுவாமியை வேண்டிக்கொண்டால் (அவர்) கிருபைபுரிவர். நீ மனம்வருந்தற்க. அவருக்கு உரியக்ஷேத்திரங்களாய்ப் பூமியிலிருக்கின்ற பழைய படைவீடுகள் அநேகமாம். அவைகளில் மனத்திற்கியைந்த வரங்களை விரைவிற்கொடுக்கும் மயூரகிரி (மேலாக) விளங்கும். அந்தமலையிற்போய் அவருடையபாதங்களைத் துதிப்பதே நன்மையாம். எ-று. (௬)

இன்னேயெழுகவெனவுரைப்பவெழுந்துவிடைகொண்டாங்ககன்று
மின்னார்மௌலியிந்திரன்றான்மஞ்ஞைவரையிற்றனிமேவி
நன்னீர்மலர்தோய்சரவணத்தினண்ணிப்படிந்துபூதியுடன்
பொன்னுருத்திராக்கமணிபுனைந்தாறெழுத்தும்புகன்றனனால்.

இ-ள். இப்பொழுதே எழும்புக என்று (வியாழன்)கூற, எழும்பி, விடைபெற்று அவ்விடத்தில்நின்று நீங்கி, ஒளிபொருந்திய கிரீடத்தையுடைய இந்திரனைவன் மயூரகிரியிலே தனியேசென்று, நல்ல புட்பங்கள்செறிந்த நீரையுடைய சரவணப்பொய்கையிற்போய் ஸ்நானஞ்செய்து, விபூதியோடு அழகுநிறைந்த ருத்திராக்ஷமணியை அணிந்து சடக்ஷரத்தையும் உச்சரித்தான். எ-று. (௭)

பணையொன்றினினுற்றொன்றின்மிசைக்கமஞ்சூன்மந்திபாயவிழு
மிணையில்பலவின்கனியுடைந்ததீஞ்சாறருவியுடனிறங்குந்
தணவாவலத்தவரைவலங்கொண்டுச்சிமிசைபோய்த்தண்டைசிலம்
பணிபொற்சரணபங்கயத்துமுருகன்றிருமுன்னடைந்தனனால்.

இ-ள். ஒருகொம்பிலிருந்து ஒருகொம்பின்மீது நிறைந்த சூலையுடைய மந்திபாய, விழுகின்ற நிகரில்லாத பலாப்பழம்வெடித்தலினால் வருகின்ற இனிய தேன், அருவி நீருடன்சொரியும் நீங்காத இடங்களையுடைய மலையைப் பிரதக்ஷிணஞ்செய்து சிகரத்தின்மீதுபோய், தண்டையையுஞ் சிலம்

பையும் அணிந்த அழகிய பாதாரவிந்தங்களையுடைய குமாரசுவாமியினது சந்நிதானத்தையடைந்தான். எ-று. வலம்-இடம். (அ)

மறைநூன்மொழிந்தவிதிப்படியைந்தமுதங்கவியமதுவிளநீர்
முறையாலாட்டிக்கலைபலபூண்முருகார்தொங்கலுறப்புனைந்து
நிறையும்புழுகுசாந்தமணிந்தமுதமதனைநிவேதித்து
நறுமெல்லடைகாய்மணித்தூபந்தீபமுதலநயந்தளித்தே.

இ-ள். ஆகமங்கூறிய விதிப்படி பஞ்சாமிர்தத்தையும் பஞ்சகௌவியத்தையும் தேனையும் இளநீரையும் முறைப்படி அபிஷேகஞ்செய்து, வஸ்திரத்தையும் பல ஆபரணங்களையும் வாசனைநிறைந்த மாலையையும் மிக அணிந்து, நிறைந்த நாவிநெய்யையுஞ் சந்தனக்குழம்பையும் அணிந்து, அன்னத்தை நிவேதனஞ்செய்து, நறிய வெற்றிலைபாக்கு அழகிய தூபந்தீபம் முதலாயினவற்றை விரும்பிக்கொடுத்து, எ-று. (கூ)

வாசமலர்கொண்டருச்சித்துவணங்கித்துதித்தானவ்வேலை
யீசன்புதல்வன்வெளிவாக்கான்மூசியுடன்மேலெதிர்ந்தனையேற்
கூசியகலுமாங்கவன்றூன்குலவுமமராவதியிடைநீ
யாசொன்றின்றியிருக்கவெனவறைந்தானிமையோரரசற்கே.

இ-ள். வாசனைபொருந்திய புஷ்பங்களைக்கொண்டு பூசித்து நமஸ்கரித்துத் தோத்திரஞ்செய்தான். அப்பொழுதில் சுப்பிரமணியப்பெருமான் அசரீரிவாக்கினால் இனி நீ மூசி என்பவனோடெதிர்த்தனையாயில், அவன் (மனம்) வெட்கி ஓடுவான்; நீ விளங்குகின்ற விண்ணுலகில் குற்றம் ஒன்றும் இன்றி இருக்குக என்று இந்திரனுக்கு அருளிச்செய்தார். எ-று. (க0)

கேட்டபொழுதிலுவகைமனங்கிடைப்பவுடலம்புளகரும்பி
நாட்டமதனிற்றுளியுறைப்பநின்றுநவில்வானின்னருளே
வேட்டிங்கடைந்தேன்விரைந்தளித்தாயெந்தாய்நாளுமிவண்மேவித்
தாட்டாமரையையலந்தோருக்களித்தியெனவேதாழ்ந்தனனால்.

இ-ள். (குமாரசுவாமி அருளிச்செய்த திருவாக்கைக்) கேட்டபொழுதில் மனத்தில் மகிழ்ச்சி உண்டாக உடம்பு உரோமாஞ்சங்கொண்டு கண்களினின்றும் ஆனந்தபாஷ்பஞ்சொரிய நின்று விண்ணப்பஞ்செய்வான். தேவரீருடைய திருவருளையேவிரும்பி இவ்விடத்தில்வந்தேன். விரைந்து கிருபைபுரிந்தீர். எம்பெருமானே நாடோறும் இவ்விடத்தில் வீற்றிருந்தருளிப் பாதாரவிந்தங்களை துன்பமுற்றடைந்தவர்களுக்குக் கொடுத்தருளுக என்று வணங்கினான். எ-று. (கக)

விடைகொண்டெழுந்தான்விண்ணின்மிசைவிசையிற்பாய்ந்தான்பதிபுகுந்தா, னடலாரிமையோர்படைநெருங்கவயிராவதத்தின்பிடர்மேற்கொண், டொடியாவிறலார்மூசிபடை யொருங்குமடியக்கணையேவிப், படைதோயனையோன்றனைவென்றுமுன்போற்பணிவானுலகளித்தான்.

சுருதிமிருதிநியாயநூறொல்லைமீமாமிசையுணர்ந்த
குருவும்மகவான்றனை நோக்கிக்கூறும்நமக்கேயருளளிக்கும்
பிரமனசுரற்கருள்புரிந்தாற்பிறர்யாரளிப்பார்நங்குலத்துக்
கருள்வைத்தளிக்குங்குமரேசனல்லாலெனவிவ்வகைபணிப்பான்.

இ-ள். வேதங்களையும் மிருதிகளையும் தருக்கசாத்திரங்களையும் பழைய மீமாஞ்சைநூல்களையும் அறிந்த வியாழனும் இந்திரனைப்பார்த்துச்சொல்வான்: எங்களுக்கே கிருபையைப்புரியும் பிரமா அசுரனுக்குக் கிருபைசெய்தால் எங்கள்குலத்திற்குக் கிருபையேவைத்து ரக்ஷிக்கின்ற குமாரசுவாமியன்றிவேறு யார்(நம்மை)ரக்ஷிப்பார் என்று இவ்வாறுகூறுவான். எ-று.()

கந்தக்கடவுடனை வேண்டிலளிப்பன்மனநீகவலலவன்
சொந்தத்தலமாய்ப்புவியிலுறைதொல்லைவீடுபலவவற்றிற்
சிந்தைக்கியைந்தவரம்விரைவிலளிக்கும்மயூரகிரிதிகழு
மந்தக்கிரியினெய்தியவனடிபோற்றுவதேநலமாமால்.

இ-ள். குமாரசுவாமியை வேண்டிக்கொண்டால் (அவர்) கிருபைபுரிவர். நீ மனம்வருந்தற்க. அவருக்கு உரியக்ஷேத்திரங்களாய்ப் பூமியிலிருக்கின்ற பழைய படைவீடுகள் அநேகமாம். அவைகளில் மனத்திற்கியைந்த வரங்களை விரைவிற்கொடுக்கும் மயூரகிரி (மேலாக) விளங்கும். அந்தமலையிற்போய் அவருடையபாதங்களைத் துதிப்பதே நன்மையாம். எ-று. (சு)

இன்னேயெழுகவெனவுரைப்பவெழுந்துவிடைகொண்டாங்ககன்று
மின்னார்மௌலியிந்திரன்றன்மஞ்ஞைவரையிற்றனிமேவி
நன்னீர்மலர்தோய்சரவணத்தின்ணிப்படிந்துபூதியுடன்
பொன்னுருருத்திராக்கமணிபுனைந்தாறெழுத்தும்புகன்றனனால்.

இ-ள். இப்பொழுதே எழும்புக என்று (வியாழன்)கூற, எழும்பி,விடைபெற்று அவ்விடத்தில்நின்று நீங்கி, ஒளிபொருந்திய கிரீடத்தையுடைய இந்திரனானவன் மயூரகிரியிலே தனியேசென்று, நல்ல புட்பங்கள்செறிந்த நீரையுடைய சரவணப்பொய்கையிற்போய் ஸ்நானஞ்செய்து, விபூதியோடு அழகுநிறைந்த ருத்திராக்ஷமணியை அணிந்து சடக்ஷரத்தையும் உச்சரித்தான். எ-று. (எ)

பணையொன்றினிலுற்றென்றின்மிசைக்கமஞ்சூன்மந்திபாயவிழு
மிணையில்பலவின்கனியுடைந்ததீஞ்சாறருவியுடனிழங்குந்
தணவாவலத்தவரைவலங்கொண்டுச்சிமிசைபோய்த்தண்டைசிலம்
பணிபொற்சரணபங்கயத்துமுருகன்றிருமுன்னடைந்தனனால்.

இ-ள். ஒருகொம்பிலிருந்து ஒருகொம்பின்மீது நிறைந்த சூலையுடைய மந்திபாய, விழுகின்ற நிகரில்லாத பலாப்பழம்வெடித்தலினால் வருகின்ற இனிய தேன், அருவி நீருடன்சொரியும் நீங்காத இடங்களையுடைய மலையைப் பிரதக்ஷிணஞ்செய்து சிகரத்தின்மீதுபோய், தண்டையையுஞ் சிலம்

பையும் அணிந்த அழகிய பாதாரவிந்தங்களையுடைய குமாரசுவாமியினது சந்நிதானத்தையடைந்தான். எ-று. வலம்-இடம். (அ)

மறைநூன்மொழிந்தவிதிப்படியைந்தமுதங்கவியமதுவிளநீர்
முறையாலாட்டிக்கலைபலபூண்முருகார்தொங்கலுறப்புனைந்து
நிறையும்புழுகுசாந்தமணிந்தமுதமதனைநிவேதித்து
நறுமெல்லடைகாய்மணித்தூபந்திபமுதலநயந்தளித்தே.

இ-ள். ஆகமங்கூறிய விதிப்படி பஞ்சாமிர்தத்தையும் பஞ்சகௌவியத்தையும் தேனையும் இளநீரையும் முறைப்படி அபிஷேகஞ்செய்து, வஸ்திரத்தையும் பல ஆபரணங்களையும் வாசனைநிறைந்த மாலையையும் மிக அணிந்து, நிறைந்த நாவிநெய்யையுஞ் சந்தனக்குழம்பையும் அணிந்து, அன்னத்தை நிவேதனஞ்செய்து, நறிய வெற்றிலைபாக்கு அழகிய தூபந்தீபம் முதலாயினவற்றை விரும்பிக்கொடுத்து, எ-று. (கூ)

வாசமலர்கொண்டருச்சித்துவணங்கித்துதித்தானவ்வேலை
யீசன்புதல்வன்வெளிவாக்கான்மூசியுடன்மேலெதிர்ந்தனையேற்
கூசியகலுமாங்கவன்றூன்குலவுமமராவதியிடைநீ
யாசொன்றின்றியிருக்கவெனவறைந்தானிமையோரரசற்கே.

இ-ள். வாசனைபொருந்திய புஷ்பங்களைக்கொண்டு பூசித்து நமஸ்கரித்துத் தோத்திரஞ்செய்தான். அப்பொழுதில் சுப்பிரமணியப்பெருமான் அசரீரிவாக்கினால் இனி நீ மூசி என்பவனோடெதிர்த்தனையாயில், அவன் (மனம்) வெட்கி ஓடுவான்; நீ விளங்குகின்ற விண்ணுலகில் குற்றம் ஒன்றும் இன்றி இருக்குக என்று இந்திரனுக்கு அருளிச்செய்தார். எ-று. (கo)

கேட்டபொழுதிலுவகைமனங்கிடைப்பவுடலம்புளகரும்பி
நாட்டமதனிற்றுளியுறைப்பநின்றுநவில்வானின்னருளே
வேட்டிங்கடைந்தேன்விரைந்தளித்தாயெந்தாய்நாளுமிவண்மேவித்
தாட்டாமரையையலந்தோருக்களித்தியெனவேதாழ்ந்தனனால்.

இ-ள். (குமாரசுவாமி அருளிச்செய்த திருவாக்கைக்) கேட்டபொழுதில் மனத்தில் மகிழ்ச்சி உண்டாக உடம்பு உரோமாஞ்சங்கொண்டு கண்களினின்றும் ஆனந்தபாஷ்பஞ்சொரிய நின்று விண்ணப்பஞ்செய்வான். தேவரீருடைய திருவருளையேவிரும்பி இவ்விடத்தில்வந்தேன். விரைந்து கிருபைபுரிந்தீர். எம்பெருமானே நாடோறும் இவ்விடத்தில் வீற்றிருந்தருளிப் பாதாரவிந்தங்களை துன்பமுற்றடைந்தவர்களுக்குக் கொடுத்தருளுக என்று வணங்கினான். எ-று. (கக)

விடைகொண்டெழுந்தான்விண்ணின்மிசைவிசையிற்பாய்ந்தான்பதிபுகுந்தா, னடலாரிமையோர்படைநெருங்கவயிராவதத்தின்பிடர்மேற்கொண், டொடியாவிறலார்மூசிபடை யொருங்குமடியக்கணையேவிப், படைதோயனையோன்றனைவென்றுமுன்போற்பனிவானுலகளித்தான்.

இ-ள். விடைபெற்று எழுந்து, ஆகாயத்தில் வேகமாய்த்தாவிச் சுவர்க்கத்தை அடைந்து, வலிமைமிக்க தேவசேனைநெருங்க ஐராவதயானையின்மத்தகத்தின்மீதேறி, அழியாதவலிமைபொருந்திய மூசி என்னும் அசுரனுடைய சேனைகள் ஒருசேர அழியப் பாணங்களைத்தூண்டி, படைகளையுடைய அவனை வெற்றிகொண்டு முன்போலக் குளிர்ந்த விண்ணுலகை அரசாண்டான். எ-று. (௧௨)

வேறு.

பான்மருள்வெண்கோட்டயிராவதப்பாகன்பூசையினைப்பகர்ந்
தாமிப்பா, ஞாலத்தினிருளறுக்குந்தினமணியின்பூசையினைநவிலு
கிற்பா, மோனமுடனருந்தவஞ்செய்மரீசிமகன்காசிபன்கான்முளை
யாய்வந்தோ, னீனமிலாவிவச்சுவானெனுமுளரிமுறுக்கவிழ்க்குமிர
விச்செல்வன்.

இ-ள். பாலும் அஞ்சும் வெண்மையாகிய தந்தங்களையுடைய ஐராவதயானையை வாகனமாகக்கொண்டு செலுத்தும் இந்திரனது பூசையைச் சொன்னோம். இனி நான்காய்வகுக்கப்பட்ட பூமியிலுள்ள இருளைக்கெடுக்குஞ் சூரியனது பூசனையைச்சொல்வோம், மௌனநிலையுடன் அரியதவத்தைச்செய்கின்ற மரீசிமுனிவனது புதல்வனாகிய காசிபமுனிவனுக்குப் புதல்வனாக அவதரித்தவன் குற்றமில்லாத விவச்சுவானென்னும் தாமரைகளின் கட்டை அலர்த்துஞ் சூரியன். எ-று. (௧௩)

அன்னவன்றேட்டாமகிழ்வினளித்தருளுமறந்கோதையுமுகின்
சாயற், கன்னன்மொழித்துவர்வாய்முத்தனமூரல்விற்புருவக்கணையி
ன்பார்வை, மின்னிடைமென்முளரிமுலைவேயனதோண்மான்குளம்
பின்விளங்குமல்குற், பொன்னனையவுஷாதேவிதன்னைமணமுழல்சா
ன்றூப்புரிந்தான்மன்னோ.

இ-ள். அந்தச்சூரியன், தோட்டாமறு மகிழ்ச்சியுடனேபெற்ற கருமணல்போன்ற கூந்தலையும், அமுதுபோன்ற மென்மையையும், கரும்புபோன்ற சொல்லையும், பவளம்போன்ற வாயையும், முத்துப்போன்ற பல்லையும், விற்போன்ற புருவத்தையும், அம்புபோன்ற கண்ணையும், மின்போன்ற இடையையும், மிருதுவான தாமரை அரும்புபோன்ற முலையையும், மூங்கிலைப்போன்ற தோளையும், மானினது குளம்புபோல விளங்குகின்ற நிதம்பத்தையும் உடைய இலட்சுமிபோன்ற உஷாதேவி என்பவளை அக்கினிசாக்ஷியாகக் கலியாணஞ்செய்தான். எ-று. (௧௪)

சந்துபுனைந்திர்க்குமிடைபோகாநெருங்கியொளிதயங்கியோ
ங்கு, விந்தமெனச்செம்மாந்தவியன்கொண்முலைமார்பினிடைநெரு
ங்கப்புல்லி, நந்தலிமேலுழாமனுவைக்கொடுஞ்சமனையமுனைதனைநய
ப்பினீன்றான், கந்தமலிகருங்கூந்தன்மனையவடன்கணவனுடற்கனல்
பொறாளாய்.

இ-ள். சந்தனக்குழம்பையணிந்து ஈர்க்கும் இடையிற்போகாதபடி நெருங்கி ஒளிபிரகாசித்து உயர்ந்த விந்தகிரியைப்போல இறுமாந்த பெருமை பொருந்திய முலைகள் (தன்) மார்பில் அழுந்தத்தழுவி, கெடுதலில்லாத எழாம் மநுவையும், கொடியயமனையும், யமுனையையும் விருப்புடன்பெற்றான். வாசனைநிறைந்த கரிய அளகத்தையுடைய மனைவியாகிய உஷா என்பவள் தனது நாயகனுடைய உடம்பிலுள்ள உஷ்ணத்தைப்பொறாதவளாய், எ-று.
எழாமநு-வைவச்சுதமநு. (கரு)

தன்னிழலையரசிலையினெழில்கவற்றும்பேரல்குற்றளவமுரல், அன்னமெனவாங்கிருத்திவடாதுகடற்குருகண்டமதனிற்புக்கு, மன்னியொருபெண்பரியின்வடிவாகித்தவம்புரியப்பரிதிவானோன், கன்னன்மொழிச்சாயாதேவியைமனையாளெனக்கலந்துகளித்திட்டானே.

இ-ள். தனதுநிழலை அரசிலையின் அழகைவென்ற பெரிய அல்குலையும், முல்லையரும்புபோலும் பற்களையும் உடைய பெண்ணாக அங்கேயிருத்தி, வடதிசைக்கணுள்ள கடல்சூழ்ந்த குருகண்டத்தை அடைந்திருந்து ஒரு பெட்டைக்குதிரையின் வடிவமாகித் தவஞ்செய்ய, சூரியன், கரும்புபோன்ற சொல்லையுடைய சாயாதேவியையே மனைவியென்றுகருதிப் புணர்ந்து களிப்படைந்தான். எ-று. (கசு)

வெஞ்சனியேமுதன்மூவர்தம்மைமுகம்விளர்ப்பவிடைமெலிவு நீங்கக்,கஞ்சமுகையனையமுலைக்கண்கறுப்பவயிற்கருப்பங்கொண்டு, நெஞ்சுமகிழ்வுமவின்றுடன்புதல்வர்தம்பாலினையங்கூர்ந்து, தஞ்சமெனமுன்னிருந்த புதல்வர்தமைவெறுத்தாடகைமையில்லாள்.

இ-ள். கொடிய சனிமுதலான மூவரை முகம்வெளுக்க, இடைதேய்வுநீங்க, தாமரையரும்புபோன்ற முலைக்கண்கறுக்க, ஆலிலைபோன்றவயிற்றிற் கருப்பங்கொண்டு மனமகிழ்ச்சிமிகப்பெற்றாள். (அங்ஙனம் பெற்றவள்) நடுவுநிலையில்லாதவளாய்த் தன்புதல்வர்களின் அன்புமிக்குத் (தனைத்) தஞ்சமாக முன் கருதியிருந்த புதல்வர்களை வெறுத்திருந்தாள். எ-று.
ஏனை இருவர்-தேவமருத்துவர். (கஎ)

காதளவும்போய்மீண்டுகடைசிவந்துகுவளையெழில்கவற்றுமுண்கண், மாதுசெயும்வஞ்சமுணர்ந்தெப்பகவுஞ்சமமென்றேமதியானின்றூ, ஓதுசிலமைந்தர்தமைவெறுப்பதென்னெனவவன்பாலோதிச்சீறக், கோதையுளநடுநடுங்கியப்புமுனநிகழ்ந்தவெலாங் கூறினளே.

இ-ள். காதுவரைக்கும் ஓடித்திரும்பிக் கடைசிவப்புற்று கருங்குவளைமலரின் அழகைவென்ற மையுண்டகண்ணையுடைய அச்சாயைசெய்யும் வஞ்சகத்தையறிந்து எல்லாப்பிள்ளைகளையுஞ் சமமாகவேகருதாமற் பெற்றவன் சொல்லப்படுஞ் சில புதல்வர்களைவெறுப்பது என்னையென்று அவ

ளிடத்திற் சொல்லிக்கோபிக்க, அப்பெண் மனம்மிகநடுக்குற்று, சூரியனு க்குமுன்னே சம்பவித்த எல்லாவற்றையுஞ்சொன்னாள். எ-று. (கஅ)

என்னுடையமனையவளேயருந்ததியுமொவ்வாதாயெங்குற்றாயா ன், மின்னிடையாயுனையகன்றுமெவ்வணமிவ்வுடலினிடைமேவாநிற் பே,னுன்னெழில்வாயிதழூறநுண்ணவின்னுமோர்காலமுறுமோவெ ன்னப், பன்னியிரங்குற்றுலகமெங்கணுந்தேடிக்காணான்பரிதிச்செல் வன்.

இ-ள். எனதுமனைவியே, (கற்பில்) அருந்ததியும் ஒவ்வாதவளே,எங்கே போயினை; மின்போன்ற இடையையுடையாளே உன்னைப்பிரிந்தும் எவ் வாறு இந்த உடம்பிற்பொருந்திநிற்பேன். உனது அழகிய வாயிலுள்ள அத ரத்தினூறலை உண்ணுதற்கு இன்னும் ஒருகாலம்வருமோ என்று சொல்லிப் புலம்பி, உலகம் அனைத்திலுந்தேடிச் சூரியன் காணாதவனாய், எ-று. (கக)

என்னமுதேயென்வயிற்றினெரிதவழவெங்கொளித்தாயெனமா ல்கொள்ளு, மன்னபொழுதாங்கவன்முன் யானணுகிமனத்தினுறும லக்கண்டீர்த்தி, மின்னவிருமார்த்தாண்டவெந்தலமுமிணையொவ்வா மேன்மைத்தாகிப், பன்னரியவளஞ்சிறக்குந்திருத்தலமொன்றுண்ட தனைப்பகரக்கேணீ.

இ-ள். எனது அமுதமே, என்வயிற்றில் அக்கினிசொலிக்க எங்குப் போய் ஒளித்தாய் என்று மயங்கும் அப்பொழுதில், அவனுக்கு முன்னர் நான்போய் ஒளிவிளங்குஞ் சூரியனே, மனத்திலுள்ள துயரைநீங்குநீ; சகல ஸ்தலங்களு நிகரில்லாத மேன்மையினையுடைத்தாய், சொல்லுதற்கு அரிய வளமிகுந்த அழகியக்ஷேத்திரம் ஒன்று உண்டு; அதனைச்சொல்ல நீகேள். எ-று. (உo)

இந்திரன்றன்முடிதகர்த்தவெறும்வலித்தோட்செழியன்வளமி யைந்தநாட்டிற், கந்தனுறைதருமொகரவெற்பாகுங்கருதுபலங்கண த்தினீயு, மந்தநகரேயடியார்க்கெய்ப்பினில்வைப்பெனவயருமதன் பாற்சென்று, சிந்தைமகிழ்வொடும்பூசைசெய்துநினதுறுதுயரந்தீர் தியென்றேன்.

இ-ள். இந்திரனது முடியைத்தகர்த்த மிக்கவலிமைபொருந்திய புய ங்களையுடைய பாண்டியனது வளஞ்செறிந்தநாட்டிலே குமாரசுவாமி வீற் றிருக்கின்ற மயூரகிரி எனப்படும் நினைத்தபயனைக் கணப்பொழுதிற்கொடுக் கும் அந்தஸ்தலமே, அடியார்களுக்கு ஆபத்துவந்தபொழுது உதவுஞ் சேம நிதிபோல இருக்கும்; அதன்மாட்டுப்போய், மனமகிழ்வோடும் (குமாரசுவா மியைப்) பூசித்து, உனதுபெருந்துன்பத்தை நீங்குதியென்று கூறினேன். எ-று. வெற்பாகும்நகர் எனக்கூட்டுக. (உக)

வேறு.

என்னியற்சொற்கேளாவிழைதாழுங்கொம்மைமுலைக்
கன்னன்மொழிமாதுதனைக்கண்டடைந்தோன்போலாகிப்
புன்னைமலர்பொன்போற்பொடியுதிர்க்கும்பூம்பொழில்சூழ்
வன்னமுறுமஞ்ஞைவரையிடத்துப்புக்கனனே.

இ-ள். எனது ஒழுங்காகிய வார்த்தைகளைக்கேட்டு, ஆபரணந்தங்குகின்ற வட்டமாகியமுலையையும் கரும்புபோலுஞ் சொல்லையுமுடைய தன் மனைவியைக்கண்டு சேர்ந்தவனைப்போலாகிப், புன்னைப்புஷ்பங்கள் பொன்னைப்போலும் மகரந்தங்களைச்சொரிகின்ற பொலிவாகிய சோலைகள்சூழ்ந்த (பல) நிறங்களைப்பொருந்திய மயூரகிரியின்கண்ணே போயினான். எ-று. வன்னம் மஞ்ஞையைவிசேடித்தது. (உஉ)

ஆரேனுமோர்மண்டலம்படியினாங்கவர்தம்
பேராப்பிணியும்பெயர்க்குஞ்சரவணத்தி
னீராடிக்கண்டிகையுநீறுமுடலிற்புனைந்து
சீரார்மலையைவலஞ்செய்துமேற்சென்றனனால்.

இ-ள். எவராயினும் ஒருமண்டலம் ஸ்நானஞ்செய்தால், அவர்களுடைய நீங்காதநோயையும் நீக்குகின்ற சரவணப்பொய்கையில்முழுகி, ருத்திராக்ஷமாலையையும் விபூதியையுஞ் சரீரத்தில் அணிந்து, புகழ்நிறைந்த மலையைப் பிரதக்ஷிணஞ்செய்து மேலேபோயினான். எ-று. (உங)

தோகைமலைமிசையிற்றோன்றியுறுஞ்செவ்வேளை
யாகமநூல்கூறும்விதியாலருச்சித்துத்
தேகமாயைம்புலனாய்ச்சிந்தையாய்நெஞ்சியக்கு
மேகனாய்நின்றோயெனவிறைஞ்சிப்போற்றினான்.

இ-ள். மயூரகிரியில்விளங்கிவீற்றிருக்குங் குமாரசுவாமியை சிவாகமங்கூறிய விதிப்படிபூசித்து, சரீரமாயும், பஞ்சப்புலனாயும், மனமாயும், மனத்தை இயக்குகின்ற ஏகவஸ்துவாயும் நின்றவரே என்று, நமஸ்கரித்துத் தோத்திரஞ்செய்தான். எ-று. (உச)

ஐயாவுனக்கடியனாயினனென்னாரமுதா
மையார்தடங்கண்மனையவடான்சேருமிட
மெய்யாவுரைத்தவள்பான்மேவவருள்செய்தனையே
லுய்வேனலவெனிலோவுய்யேன்மற்றுய்யேனே.

இ-ள். சுவாமீ, தேவரீருக்கு அடியேனாயினேன். எனது அரிய அமுதுபோன்ற மையார்ந்த விசாலித்தகண்ணையுடைய மனைவி இருக்குமிடத்தை, உண்மையாக அறிவித்து அவளிடத்திற் (சிறியேன்) கூடும்படி கிருபைபுரிந்தீராயில் உய்வேன். அங்ஙனஞ்செய்யாதொழியில் உய்யேன் உய்யேன்!! எ-று. (உரு)

என்றுமொழிகூறுமிரவிமுனம்வானவர்க்காக்
குன்றமெறிந்தசுடர்வேலோன்கூறுவா
னின்றனுடற்கனலுக்காற்றளாய்நின்மனையாள்
சென்றுகுருவருடம்பெண்பரியாய்ச்சேர்ந்தனளே.

இ-ள். என்று (இப்படி) விண்ணப்பஞ்செய்யுஞ் சூரியனுக்குமுன்னரே தேவர்களுக்காகக் கிரௌஞ்சகிரியைப்பிளந்த ஒளிபொருந்திய வேற்படையையுடைய குமாரசுவாமி அருளிச்செய்வார்: (சூரியனே,) உன் மனைவியானவள், உனது உடம்பிலுள்ள உஷ்ணத்திற்கு ஆற்றாதவளாய்ப் பெட்டைக்குதிரையாகிக் குருகண்டத்தைப்போய்ச்சேர்ந்தாள். எ-று. (௨௬)

ஆங்கவள்பானீசென்றழைத்தால்வருமவடன்
பாங்குறையினின்வெங்கதிரடக்கல்பண்பாமென்
றோங்குமுரைகூறவுவந்துவிடைகொண்டகன்று
தீங்கில்சுடரோன்குருகண்டஞ்சேர்ந்தனனே.

இ-ள். அவளிடத்தில் நீபோய் அழைத்தால் (அவள்) வருவாள். (இனி) அவளுடையபக்கத்தில் (நீ) இருக்கில் உனது உஷ்ணகிரணத்தை அடக்குதல் குணமாம் என்று, உயர்ந்த திருவாக்கை அருளிச்செய்ய, துயர்நீங்கிய சூரியன்மகிழ்ந்து விடைபெற்றுப்போய், குருகண்டத்தை அடைந்தான். எ-று. ()

வேறு.

பெண்பரிவடிவாய்த்தோற்றபேதையைக்கண்ணுற்றுறை
மொண்பரியுருவெய்திச்சேறலுமவள்கண்டோடத்
திண்பரிவடிவநீங்கித்தினகரவுருவங்காட்டப்
பண்படுகிளவியாளும்பெண்ணுரும்படிவம்வாய்ந்தாள்.

இ-ள். பெட்டைக்குதிரைவடிவமாய்த் தவஞ்செய்த தன்மனைவியைக் கண்டு அழகையுடைய ஆண்குதிரைவடிவத்தைக்கொண்டு செல்லுதலும், அந்த உஷா என்பவள்கண்டு ஓட, திண்ணிய குதிரைவடிவைநீங்கிச் சூரியனாகிய தன்வடிவைக்காண்பிக்க, பண்தோன்றுஞ் சொல்லையுடைய அவளும் (தனக்குரிய) பெண்வடிவத்தைக்கொண்டாள். எ-று. (௨௮)

மோட்டிளங்குரும்பையேய்க்குமுலைமுகடழுந்தப்புல்லிப்
பாட்டளிததையுங்கூந்தற்பணிமொழியவளோடேகிச்
சேட்டிளங்கதிருலகஞ்சென்றனனினையகாதை
கேட்டவர்பிரிதல்செய்யாமனையவட்கிடைத்துவாழ்வார்.

இ-ள். பருத்த இளமையாகிய குரும்பையைப்போலும் முலைகளின் முகடு அழுந்தும்படி தழுவிக் (கீதங்களைப்) பாடும் வண்டுகள்நெருங்குகின்ற அளகத்தையும் பணிவைப்புலப்படுத்திய சொல்லையுமுடைய அவளுடனே போய்ப் பெருமைபொருந்திய இளையகிரணத்தையுடைய சூரியன் (தன்) உலகையடைந்தான். இச்சரித்திரத்தைக் கேட்டவர்கள் பிரிதலில்லாதமனையாட்டியைப்பெற்று வாழுவார்கள். எ-று. (௨௯)

திரளிருட்குறும்புசீய்க்குந்தினகரன்கதையைச்சொற்றுங்
கருகிருட்பகடுதூண்டுங்காளை தன்கதையைச்சொல்வாம்
பருமணிப்பதுமராகப்படலைதாழ்மார்பினற்குத்
திருமகனெனவேவந்துசெனித்துளோன்மதனனென்பான்.

இ-ள். திரண்ட இருளாகிய பகையைக்கெடுக்கின்ற சூரியனது சரித்திரத்தைச்சொன்னோம். கரிய இருளாகிய யானையைச்செலுத்துகின்ற மன்மதனது சரித்திரத்தைக்கூறுவாம். பதுமராகமாகிய பருத்த இரத்தினமாலை தொங்குகின்ற மார்பினையுடைய விட்டுணுவுக்கு அழகிய புதல்வனாகவந்து அவதரித்தவன் மன்மதன் என்பவன். எ-று. (௩௦)

உலகெலாமிகவும்வெல்வானெத்தவமுனூற்றிலிந்தப்
பலமுறுமென்றுநாடிப்பார்ப்பதிமலையமீன்ற
கலவமாமயிற்குச்சாயலுதவியகன்னியீன்ற
குலவுறுகுகனைப்பூசைசெயிற்பலன்குறுகாநிற்கும்.

இ-ள். (அவன்,) உலகமனைத்தையும் மிக வெற்றிகொள்ளும்படி எவ்வகைப்பட்டதவத்தைச்செய்யில், இந்தப்பயன் வருமென்று ஆராய்ந்து, தோகைபொருந்திய நீலமயிலுக்குச் சாயலைக்கொடுத்த இமயமலைபெற்ற பார்ப்பதியாராகிய கன்னிகைதந்த பிரகாசிக்கின்ற குமாரசுவாமியைப் பூசனைபுரியிற் (கருதிய) பயன்வந்தடையும். எ-று. (௩௧)

அன்னவன்றலங்கடய்மிலதிகமாமயூரவெற்பின்
மன்னியவிருப்பினோடும்வைகியேயடியாருள்ளத்
துன்னியவுதவுகின்றானங்குறனலமென்றுன்னிக்
கன்னியர்குழாத்தினோடுங்காதன்மீதூரச்சென்றான்.

இ-ள். அக்குமாரசுவாமி, ஸ்தலங்களில் விசேடித்ததாகிய மயூரகிரியில் நிலையாகிய பிரியத்தோடுவீற்றிருந்து அடியார்கள் மனத்தில் நினைத்தவைகளைக்கொடுத்தருள்கின்றார். (ஆகலால்,) அவ்விடத்திற்போதலே நலமென்று கருதி, பெண்கள் கூட்டத்தோடும் விருப்பம் மிகச் சென்றான். எ-று. (௩௨)

மாமயிலகவுஞ்சோலையுடுத்தவம்மயூரவெற்பிற்
பூமகள்புதல்வன்புக்குப்புனிதநாமகளேபோலத்
தாமரையதனிலன்னந்துயில்சரவணத்திற்றோய்ந்து
தோமறுபூதிசாத்தித்துகளிலாறெழுத்துமெண்ணி.

இ-ள். நீலமயில்கள் ஆடுகின்ற சோலைசூழ்ந்த அந்தமயூரகிரியில் இலக்குமியினுடைய குமாரனாகிய மன்மதன்போய், பரிசுத்தமான சரசுவதிபோல வெண்டாமரைமலர்களில் அன்னங்கள் நித்திரைசெய்கின்ற சரவணப்பொய்கையிலே ஸ்நானஞ்செய்து, அழுக்கை நீக்குகின்ற விபூதியையணிந்து, குற்றமற்ற சடக்ஷரத்தையுஞ்சிந்தித்து, எ-று. (௩௩)

மலைவலங்கொண்டுமேற்போயாகமம்வழங்கும்வண்ணா
நிலவுறுமபிடேகங்கணிவேதனமுறையிற்செய்து
குலமலர்தூவியையன்குரைகழற்பதத்தின்வீழ்ந்து
பலமுறைபழிச்சியுற்றதுரைத்தனனன்பரிவினோடும்.

இ-ள். கிரியைப் பிரதக்ஷிணஞ்செய்து மேலேபோய், ஆகமங்கூறிய
படி, விளங்குகின்ற அபிஷேகங்களையும் நிவேதனங்களையும் முறைப்படிசெ
ய்து, நல்ல புஷ்பங்களைச்சொரிந்து குமாரசுவாமியின் ஒலிக்கின்ற வீரக்
கழலையுடைய பாதங்களிலே நமஸ்கரித்து, பலமுறைதுதித்து, (தன்) வரு
தற்காரணத்தை அன்போடு விண்ணப்பஞ்செய்தான். எ-று. குலமலர் என்
பதற்குத் திரளானமலர் எனினுமமையும். (௬௪)

முருகுவாயுறைப்பவண்டுமூசுபூங்கடம்புபூண்டோன்
அருளொடுங்காயவாக்காலவனைநேர்நோக்கிக்கூறும்
பொருவின்மூன்றுலகுஞ்சென்றுன்பூங்கணைபொழிநீவென்றி
தருதுநாமென்னக்கேட்டுக்கந்தர்ப்பனுவகைசார.

இ-ள். தேன்வாயினிறைய வண்டுகள்மூசுகின்ற கடப்பம்பூமாலையை
யணிந்த குமாரசுவாமி கிருபையுடன் அசரீரிவாக்கினால் அந்தமன்மதனை நே
ரேபார்த்து, (மன்மதனே,) நீ சொல்லப்படும் நிகரில்லாத மூவுலகத்திலும்
போய் உனது பூம்பாணங்களைச்சொரிவாய், நாம் வெற்றியைத்தருதும் என்
றருளிச்செய்ய, (அவன் அதனைக்) கேட்டு மகிழ்ச்சிபொருந்தி, எ-று. (௬௫)

வேறு.

விடைகொடுதிரும்பிவேலினுக்கோலைவிடுத்திடுமதர்த்தகண்மட
வார், படைகண்முன்னடப்பமதிக்குடைநிழற்றப்பூகமென்பாளைகவி
ரட்ட, நடைபயிறென்றற்றேர்மிசையேறியுலகமோர்மூன்றினுநணு
கி, நெடியவிற்கரும்பின் வண்டுநாண்கொளுவி நிலவிதழ்ப்பூங்கணை
பொழிந்தான்.

இ-ள். விடைபெற்றுமீண்டு, வேற்படைக்கு (சமதூவலியை வந்துகா
ண்க என்று) ஓலைவிடுகின்ற மதர்த்தகண்களையுடைய பெண்களாகிய சேனை
கள் முன்செல்ல, சந்திரனாகிய குடை நிழலைச்செய்ய, மிருதுவான கமு
கம்பாளைகளாகிய (சாமரம்) வீச, இயங்குந்தென்றலாகிய தேர்மீதேறி
மூவுலகினும்போய், கரும்பாகிய நெடியவில்லில் வண்டாகிய நாணைப்பூட்
டிப் பிரகாசிக்கின்ற இதழ்களையுடைய பூம்பாணங்களைச்சொரிந்தான். எ-று.
நடைபயில்தென்றல் என்பதற்கு நடையைப்பழகும் இளந்தென்றல் எனி
னும் பொருந்தும். (௬௬)

நிறந்திறந்தேகும் வேற்படைவரினும் விழித்தகண்ணிமைத்தி
டாதிகரின், மறங்கிளர்வீரர்சிவமொண்மேமெய்யர் மற்றவைபொய்
யெனவுணர்ந்த, வறங்கரைநாவின்முனிவரரிமையோர் யாரையுமவ
ன்வசஞ்செய்தான், பிறங்குமங்கவன்றன்புகழினையாவ ரிற்றெனப்
பேசவல்லாரே.

இ-ள். (தம்) மார்பைப்பிளந்துசெல்லும் வேற்படைவரினும் விழித்தகண்ணை இமையாத உவமையில்லாத மறத்தன்மைமிக்க வீரர்கள், சிவம் ஒன்றே உண்மைப்பொருளாக ஏனையவை பொய்யென்றறிந்த தருமத்தைப் பேசும் நாவினையுடைய முனிசிரேஷ்டர்கள், தேவர்கள் ஆகிய அனைவரையும் அந்த மன்மதன்வசப்படுத்தினன். விளங்குகின்ற அவனதுகீர்த்தியை யாவர் இத்தன்மைத்து என்று சொல்லவல்லவர்கள். எ-று. (கூஎ)

இந்திரன்கதையும் ஆதித்தன்கதையும் மன்மதன்கதையும்

உரைத்தசருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் ருகo.

---

## பன்னிரண்டாவது

## பாண்டவச்சருக்கம்.

வேனிலஞ்செல்வன்காதைவிளம்பினமெல்லையின்றால்
வானவர்பரவுஞ்சீர்த்திமயின்மலைப்பெருமையின்னுங்
கானுறைகடப்பந்தண்டார்க்கந்தவேளருளினாலே
நானிலமுய்வானின்பாற்சுருக்கினநவின்றுளேமால்.

இ-ள். (நாரதமுனிவனே) மன்மதனுடைய சரித்திரத்தைக்கூறினோம். தேவர்கள்துதிக்குங் கீர்த்தியினையுடைய மயூரகிரியின்மேன்மை இன்னும் அளவில்லாதன உண்டு. (அவற்றுட்சிலவற்றை) வாசனைபொருந்திய குளிர்ந்த கடப்பம்பூமாலையையணிந்த குமாரசுவாமியினது திருவருளினாலே நான்காய்ப்பகுக்கப்பட்ட பூமியிலுள்ளோர் ஈடேறும்படி உனக்குச் சுருக்கிச்சொன்னோம். எ-று. (க)

யாவையுமொழியவேண்டுமென்னிலோர்கோடியாண்டென்
றாவினாலுரைத்திட்டாலுநவிலொணாவரனேயென்னிற்
றாவிலாதுரைப்பானின்னுமொருகதைசாற்றக்கேண்மோ
பாவலர்புகழுஞ்சீர்த்திப்பார்த்திபன்பாண்டுவென்போன்.

இ-ள். (அக்கிரியின்மகிமை) அனைத்தையுஞ் சொல்லவேண்டுமென்றால் ஒருகோடிவருடம்வரைக்கும் எமதுநாவினாற்கூறினாலும் கூறமுடியா, சிவபெருமானே என்றால் தவறின்றி அருளிச்செய்வர். (ஆயினும்,) இன்னும் ஒருசரித்திரத்தை (யாம்) கூறக்கேள். புலவர்கள் புகழுகின்ற கீர்த்தியையுடைய அரசன் பாண்டு என்பவன். எ-று. (உ)

இந்துவின்குலத்தின்வந்தோன்கண்ணிலான்விதுரனென்னு
மைந்தருநிகர்க்குஞ்செங்கையண்ணறோடிளவலுள்ளான்
வந்திடுந்துருவாசன்பான்மந்திரம்பயின்றுவைகுங்
குந்தியைப்பழுதில்கற்பின்கோதையைமணஞ்செய்தானே.

இ-ள். சந்திரகுலத்தில் அவதரித்தோன்; (அவன்,) திருதராட்டிரன் விதுரன் என்னும் பஞ்சதருவை ஒக்குங் கொடைபொருந்திய சிவந்தகையையுடைய தமையனுந் தம்பியுமுள்ளவன். (தன்மாட்டு) வந்த துருவாசனிடத்தில் மந்திரத்தைப் பழகி இருக்கும் தவறில்லாத கற்பினையுடையபெண்ணாகிய குந்தி என்பவளை விவாகஞ்செய்தான். எ-று. (௩)

தருமனல்வீமன்பார்த்தனகுலன்சாதேவனென்னு
மருமைசால்புதல்வர்ப்பெற்றானன்னவர்தந்தைதன்னோ
டொருவயிற்றுதித்தகண்ணிலானெனுமுரவோன்பெற்ற
மருவலர்பணியுந்தாட்டாமரைச்சுயோதனனுமண்ணல்.

இ-ள். தருமன் நல்ல வீமன் அருச்சுனன் நகுலன் சகாதேவன் என்னும் அருமைமிக்க புதல்வர்களைப்பெற்றான். அப்புதல்வர்களுடைய பிதாவாகிய பாண்டுமகாராசனோடு ஒருவயிற்றில் அவதரித்த திருதராட்டிரன் என்னும் வலியன்பெற்ற பகைவர்வணங்குங் கால்களாகிய தாமரைமலர்களையுடைய துரியோதனன் என்னும் பெருமையிற்சிறந்தோன். எ-று. தந்தைதன்னோடொருவயிற்றுதித்தகண்ணிலான், என்பது உபசாரம். (௪)

கங்கையாறதனில்வெய்யகழுவினைநிரைத்துங்காயும்
பொங்கழன்மனையில்வைத்தும்புனைமலர்க்கரியகூந்த
னங்கைபாஞ்சாலிதன்னைநற்றுகிலுரிந்தும்நீவி
ரிங்கிராதேகுமென்னக்காட்டகத்தெய்தினாரே.

இ-ள். கங்கைநதியிற் கொடிய கழுவைநிரைத்தும், சுடுகின்ற சுவாலிக்கும் அக்கினியை வீட்டிற்கொளுவியும், அலங்கரிக்கப்பட்ட மலரை அணிந்த கரிய அளகத்தையுடைய பெண்ணாகிய திரௌபதியை நல்ல வஸ்திரத்தை உரிந்தும் (இடர்புரிந்து,) நீங்கள் இவ்விடத்தில் இராமற்போங்கள் என்றுகூற (அவர்கள்) வனத்திற்போயினார்கள். எ-று. (௫)

வேறு.

புலனைந்துமெனவுற்றதிறலவர்வனம்வந்துபுகுமாறுணர்ந்
தலையுந்துகடலாடையம்போருகக்கொங்கையறலோர்குழ
னிலமங்கைபொறைதிரவசுதேவனிடைவந்துநெடுமாலவன்
சிலைதங்குதோளைவருறுகானிலன்போடுசென்றானரோ.

இ-ள். ஐந்துபுலனையும்போலப்பொருந்திய வலியினையுடைய பாண்டவர்கள் காட்டில்வந்து புகுமாற்றை அறிந்து, திரைவீசுகின்ற கடலாகிய வஸ்திரத்தையும் தாமரைமொட்டாகிய தனங்களையும் கருமணலாகிய நேரிய கூந்தலையும் உடைய பூமிதேவியின் பாரந்திர வசுதேவனிடத்திலவதரித்த நெடிய கிருட்டிணன், விற்படைபொருந்திய புயத்தையுடைய பஞ்சபாண்டவர்கள் இருக்குங்காட்டில் அன்பினுடன்போயினான். எ-று. (௬)

உடல்கின்றவொன்னார்களுதிரங்குடித்தன்றியுறையிற்புகா
வடிவேல்வலங்கொண்டவிறலவர்மகிழ்நல்வரவென்றுரைத்
தடலாழிபுனைசெங்கையையாநின்னருள்பெற்றுமலைவேங்கொலோ
படமாருமரவுற்றகொடியோனைவெல்லுமாறுபகர்வாயென.

இ-ள். (அப்பொழுது) மாறுபடுகின்ற பகைவர்களுடைய இரத்தத்தைக் குடித்தாலன்றி உறையிற்புகாத கூரியவேலை வெற்றியுடனேந்திய வலிய பஞ்சபாண்டவர்கள் மகிழ்ந்து, (தேவரீரதுவரவு) நல்லவரவென்று கூறி, வலிய சக்கரத்தையேந்திய சிவந்த கரத்தையுடைய தலைவரே தேவரீருடைய இருபையைப்பெற்றும் அலைவோமா!! படம்பொருந்திய பாம்பு எழுதப்பட்ட கொடியினையுடைய துரியோதனனை வெல்லும் உபாயத்தை அருளிச்செய்யும் என்று, எ-று. (எ)

உரைகூறவதுகேட்டுநீரஞ்சலொழிமின்களுயர்மஞ்ஞையாம்
வரையிறுதிதென்பாலிலுவைகிற்றுமுன்னாளம்மலைமேவியான்
பரவாநன்மதனைத்தவெழிலன்மைந்தனொருவற்பயந்தேனவண்
விரவாநன்முருகேசனடிபேணினினைவுற்றவிதியெய்துமால்.

இ-ள். (இச்) சொல்லைக்கூற, (கிருட்டிணன்) அதனைக்கேட்டு, நீங்கள் அச்சங்கொள்ளுதலை விடுங்கள்: உயர்ந்த மயூரகிரியானது முடிவில்லாத தென்றிசையிலிருக்கின்றது. முற்காலத்தில் அந்தமலையில் யான்போய்க் (குமாரசுவாமியைப்) பூசித்து, நல்ல மன்மதனைநிகர்த்த அழகையுடைய ஒருபுதல்வனைப்பெற்றேன். (ஆதலால்,) அவ்விடத்திற்போய் நல்ல குமாரசுவாமியின் பாதங்களை (நீங்களும்) தியானிக்கில் நினைத்தகருமங்கைகூடும். எ-று. (அ)

என்றேறமணித்தேரின்மிசைகொண்டுபலரோனையுடனெய்தவே
சென்றேறுகுடக்கூன்சுரிச்சங்கினினமீன்றதிரண்முத்தமுங்
குன்றாதவிலவிப்பியினமீன்றமுத்துங்கொழிக்குங்கடற்
றுன்றும்வளமுற்றதுவரைப்பெருங்கோலநகர்துன்னினான்.

இ-ள். என்றுகூறி (கிருட்டிணன்) அழகிய தேரின்மீதேறிப் பலசேனைகள் தன்னுடன்வரப் போய், குடம்போன்ற வளைந்த சுரித்தமுகத்தையுடைய சங்கின்கூட்டம் ஈன்ற திரண்ட முத்துக்களையும், குறையாத ஒளியைவீசும் இப்பிக்கூட்டம் ஈன்ற முத்துக்களையுங் கொழிக்கின்ற கடலினது நெருங்கிய மிக்க வளங்கள்நிறைந்த பேரழகினையுடைய துவாரகை என்னும் நகரை அடைந்தான். எ-று. சந்தவின்பங்கருதிச் சுரிச்சங்கு என வல்லொற்றுமிக்கது. (கூ)

பொறைதண்டுசிலைமாகலைக்கொப்புவேறற்றபுதுமட்டுவா
ரிறைகொண்டதார்யார்பரோரைந்துதிறமோருமெழில்கூர்வளங்
குறைவின்றிநிறைகின்றமயில்வெற்பினிற்சென்றுகுறுகாயணித்
துறைகொண்டசெவ்வேடடந்தோய்ந்துநலமுற்றகலைசுற்றியே.

இ-ள். அடக்கம், தண்டு, வில்லு, குதிரை, கலைஞானம் ஆகிய இவற்றிற்கு நிகர் வேறில்லாத புதிய தேன்சொரிதல் நிலைகொண்ட மாலையையணிந்த மார்பினையுடைய பஞ்சபாண்டவர்களும், அழகுமிக்க வளங்குறையாமல் நிறைகின்ற மயூரகிரியிற்போயடைந்து, அழகிய துறைகளையுடைய சரவணப்பொய்கையில் ஸ்நானஞ்செய்து, நல்ல வஸ்திரத்தைப்புனைந்து, எ-று. (க0)

வேறு.

சாவுறுமுடலின்மீதுசாரினுமதனில்வாழ்ந்த
வாவியோர்புரியட்டத்திலமர்ந்துதுன்புறினுஞ்செய்த
பாவமதொழித்துநல்லகதியுறுமினையபண்பார்
திவியபூதிசாத்திச்சிறந்தகண்டிகையும்பூண்டு.

இ-ள். அழிவைப்பொருந்தும் ஸ்தூலசரீரத்திற்சேரினும், அச்சரீரத்தில் வாழ்ந்த ஆன்மா ஒரு புரியட்டதேகத்திற்பொருந்தித் துன்பத்தை அநுபவிக்கினும், அதுசெய்த பாவத்தைநீக்கி நற்கதியை அடையிக்கும் இந்தக்குணம் நிறைந்த நல்ல விபூதியைத்தரித்து, சிறந்த ருத்திராக்ஷவடத்தையும் அணிந்து, எ-று. புரியட்டதேகம் எனினும் சூக்குமதேகம் எனினும் ஒக்கும்.

ஒருதரமுரைக்கிற்கந்தனுயர்ந்தசாலோகஞ்சேர்ந்து
மிருதரமுரைக்கிற்சாமீபந்தனிலிருந்துமூக்கா
லருமையினுரைக்கிற்சாரூபந்தருமிடைவிடாது
புரையறவுரைக்கில்வீடுபுகுத்துமாறெழுத்துமெண்ணி.

இ-ள். ஒருதரம் உச்சரிக்கில் குமாரசுவாமியினது உயர்ந்த சாலோகத்தை அடைவிக்கும் இரண்டுதரம் உச்சரிக்கில் கந்தசாமீபத்தில் இருத்தும் மூன்றுதரம் அருமையாக உச்சரிக்கில் கந்தசாரூபத்தைக்கொடுக்கும் குற்றமற இடைவிடாமல் உச்சரிக்கில் கந்தசாயுச்சியத்தை அடைவிக்கும் சடக்ஷரத்தையுந்தியானித்து, எ-று. செய்யுமென்னும் பெயரெச்சங்களைத் தனித்தனி ஆறெழுத்தென்னும் பெயரோடுகூட்டி முடிக்க. (கஉ)

வெற்பினைவலங்கொண்டேகியாகமம்விதித்தவாறே
கற்புடைமடவாரோடுங்கந்தனைவிதியாற்பூசித்
தற்புளந்தழையப்போற்றியண்ணறன்மேல்பாலாகப்
பொற்புறத்தமதுபேராற்புண்ணியத்தடமுண்டாக்கி.

இ-ள். மயூரகிரியைப் பிரதக்ஷிணஞ்செய்து போய், ஆகமங்கூறியவாறே கற்பினையுடைய இருசத்திகளோடுங் குமாரசுவாமியை விதிப்படிபூசித்து, அன்புமனத்தில் மிக ஸ்தோத்திரஞ்செய்து, குமாரசுவாமிக்கு மேற்குப்பக்கமாக அழகுமிகத் தங்கள் பெயரினாற் புண்ணியதீர்த்தத்தை உண்டாக்கி, எ-று. (கஙு)

ஆங்கிருந்தணிவேற்செங்கையமலனையுளத்திருத்தித்
தீங்கறத்தவத்தைச்செய்தாரவர்தமக்கருள்வான்செவ்வே
ணீங்கரும்விருப்பினோடேயனையவர்நேர்வந்தெய்தி
யோங்குநீர்நினைத்தவண்ணமுடியுமென்றுவப்பினோதா.

இ-ள். அங்கிருந்து அழகிய வேலையேந்திய சிவந்த திருக்கரத்தையுடைய நிருமலராகிய குமாரசுவாமியை மனத்திலேதியானித்துத் தீமைநீங்கத் தவத்தைச்செய்தார்கள். குமாரசுவாமி அவர்களுக்குக் கிருபைபுரியுமாறு நீங்குதல் இல்லாத பிரியத்தோடு அவர்களுக்கு எதிரே வந்துசேர்ந்து, உயர்ந்த நீங்கள்நினைத்தபடி கைகூடும் என்று மகிழ்ச்சியோடு அருளிச்செய்து, எ-று. (கச)

மறைந்துதன்கோயில்புக்கான்மண்டமர்கடந்தவென்றி
நிறைந்தசீரைவர்தாமுமவ்விடைநீங்கிமுன்ன
முறைந்தகானடைந்துகண்ணன்றனையழைத்தவற்றையோதி
யறைந்தநாள்கழித்துத்தூதாயனுப்பிநன்றுடுகேட்டு.

இ-ள். மறைந்து தமது கோயிலுட்புகுந்தருளினர். நெருங்கிய போரைவென்ற வெற்றிநிறைந்த புகழையுடைய பாண்டவரைவரும் அவ்விடத்தினின்று நீங்கி, முன்வசித்த காட்டைச்சேர்ந்து, கிருட்டிணனை அழைத்து அவற்றைச்சொல்லி, (தமக்குநியமித்துக்) கூறியதினங்களைக்கழித்து, (அவனைத்) தூதாக அனுப்பி, நல்லநாட்டைக்கேட்டு, எ-று. (கரு)

மறுத்தபினைவர்வெம்பிச்சிவேதன்பாஞ்சாலன்வாட்கைச்
சிறப்புடையபிமன்வீமன்சிறுவனேமுதலாயுள்ளோர்
நறைத்துழாய்நம்பியேழக்குரோணிமுன்னடப்பச்சென்றே
யிறுத்தனரமர்செய்பாரினிமையவர்துதிப்பமன்றே.

இ-ள். (துரியோதனன்) மறுத்தபின்னர் பஞ்சபாண்டவர்கள்கோபித்து, சிவேதன், திட்டத்துய்ம்மன், வாளைத்தாங்கிய கையையுடைய அழகைப்பொருந்திய அபிமன்னு, கடோற்சகன் முதலாயுள்ளவர்களும், தேனையுடைய துழாய்மாலையை அணிந்த கிருட்டிணனும் ஏழக்குரோணிசேனைகளும் முன்போகப் போய், தேவர்புகழ யுத்தகளத்திலே தங்கினார்கள். எ-று. (கசு)

வீட்டுமன்றுரோணன்கன்னன்சல்லியன்சிந்துவேந்தன்
வாட்டிறலசுவத்தாமன்முதலினோர்வந்துசூழச்
சூட்டரவுயர்த்தோன்பன்னொன்றென்னுமக்குரோணிசூழக்
கோட்டுடைமதமாமான்றேருடனவண்குறுகினானே.

இ-ள். சுடிகையையுடைய பாம்பைக் கொடியாகக்கொண்டமையினால் உயரச்செய்த துரியோதனன் வீட்டுமனும், துரோணனும், கன்னனும், சல்லியனும், சயத்திரதனும், வாள்வலியையுடைய அசுவத்தாமனும் ஆகிய இவர்கள் முதலானோர்வந்துசூழவும், பதினொரு அக்குரோணி என்னுஞ் சேனைசூழவும், தந்தங்களையுடைய யானை குதிரை தேர்களாகிய இவற்றோடு (தானும்) அந்தயுத்தகளத்தை அடைந்தான். எ-று. (கஎ)

வேறு.

அணிவகுத்தனரடற்சிலைகுழைத்தனர்கணை தொடுத்தனரமுறக்கணைவிடுத்தனர்களான், மணிநிறக்களிறுமைப்பகடுமுட்டினதிசாமதமுடைக்கடிவையெட்டுமெதிர்வுற்றவிறலாற், கணைகள்பட்டுடைவிரத்தநதியொத்தொழுகவே கரமடித்துணைமுடித்தலைகளற்றனவிராய்க், குணமிகுத்தவரையொத்தனபல்புட்டிரள்கள்வான் குடையையொத்தனகுறைத்தலைநடித்தசிலவே.

இ-ள். (இருபாலார்களும்) அணியைவகுத்தார்கள். வலியவில்லை வளைத்தார்கள். நாண்பூட்டினார்கள். அக்கினியையொத்த கொடியபாணங்களைச் செலுத்தினார்கள். கரியநிறத்தையுடைய யானைகளும் கரியநிறத்தையுடைய யானைகளும் எதிர்ந்தன. திக்குகளிலுள்ள மதத்தையுடைய யானைகள் எட்டும் அதிர்ந்தன. வலிமையோடு பாணங்கள் உடம்பிற்படுதலால் இரத்தம் நதிபோலச்சொரிய, வெட்டுண்டகைகளும் இருகால்களும் முடியையுடைய தலைகளும் ஒருங்குநெருங்கி அழகுமிக்க மலையைப்போன்றன. பலபகுதி சாலங்கள் ஆகாயத்திலே குடையைநிகர்த்தன. சிலகவந்தங்கள் கூத்தாடின. எ-று. (௧௮)

பொருசிவேதனைநல்வீடுமன்வதைத்தனனெழிற் புகழ்த்தரும
நடாத்தியவருச்சுனன்முதிர், அரியமாசிலைகொள்வீட்டுமனையட்டனன்
வயவபிமன்றனுயிரையாற்றல்கொள்சயந்திரதன்விண், பரவுபார்கதை
கொட்டனனருக்கன்மகனும்பரியவேல்கொடுகடோற்கசனையட்
டனன்மிகுந், துருபதேயனிசைநாட்டியசிவத்தினின்மனத் தொடர்து
ரோணனைமரீஇக்கொலையியற்றினனரோ.

இ-ள். போர்செய்கின்ற சிவேதன் (என்னுஞ்சேனாபதியை) நல்ல வீட்டுமன் (என்னுஞ்சேனாபதி) கொன்றான். அழகிய புகழையுடைய தருமத்தைச்செய்த அருச்சுனன் முதிர்ந்த அரிய பெரியவில்லை வைத்திருக்கின்ற வீட்டுமனைக்கொன்றான். வெற்றிபொருந்திய அபிமன்னுவின் அரிய உயிரை வலியினையுடைய சயந்திரதன் விண்ணுலகத்தார்புகழ்கின்ற நீண்ட தண்டப்படையால்நீக்கினான். கன்னனும் பருத்தவேல்கொண்டு கடோற்கசனைக்கொன்றான். மேலான திட்டத்துய்மன் புகழ்நிறுத்திய சிவபெருமான் மீது மனந்தொடருகின்ற துரோணனைச் சமீபித்துக் கொன்றான். எ-று. இசைநாட்டியதுரோணன் எனவும், சிவத்தினின்மனத்தொடர்துரோணன் எனவும் இயையும். (௧௯)

இரவிகான்முளையைவீதல்செய்சயந்திரதனை யிகல்வலாரிமகனீ
றுறமுடித்தனனியற், றருமராசனுயர்வான்வலிகொண்மத்திரனையத்
தரமளிக்குகெவேவினன்மருத்துமகனும், மரவகேதனவலன்றொரு
வைபொடித்தனன்விசும் பமரர்யாவருநல்லாசையின்மருத்தினர்க
ளொண், கரியமாலுதவியான்முடிகவித்தனன்மகன்கருணையோடுறுத
ராதலமளித்தனனரோ.

இ-ள். கொடையையுடைய கன்னனைச் சயந்திரதனை வலிய அருச்சுனன் (ஆயுசின்) முடிவு உண்டாகக்கொன்றான். சாந்தகுணத்தையுடைய தருமராசன் உயர்ந்த படைவலியையுடைய சல்லியனை வீரசுவர்க்கத்திற் போ என்று அனுப்பினான். வீமனும் துரியோதனனை வலியதொடையை முறித்துக்கொன்றான். (அப்பொழுது) ஆகாயத்திலே நிற்கின்ற தேவர்கள் அனைவரும் நல்லபிரியத்தோடு (பாண்டவர்களைப்) புகழ்ந்தார்கள். (அதன்பின்) தருமன் அழகிய கரிய கிருட்டினனது உதவியினாலே முடிசூடிக் கிருபையுடனே (தான்) பெற்றபூமியைப் பாதுகாத்தான். எ-று. (௨௦)

வேறு.

வீமனைநிகராவுற்றவேந்தைமூப்படையுங்கைக்கொள்
காமனைச்சேயையொக்குங்கந்துகத்தாமன்றன்னைத்
தோமில்வீரர்களையெந்தைதுணையினாற்றருமன்வென்று
பூமியைப்பெற்றான்றெய்வவலிக்கிணைபுகலில்யாவே

இ-ள். வீமனுக்கு ஒப்பாகவிருந்த துரியோதனனையும், மூவகைப்பூம் படைகளையும் கையிற்கொண்ட மன்மதனையுங் குமாரசுவாமியையும் ஒத்த அசுவத்தாமனையும், குற்றம் இல்லாத (ஏனை) வீரர்களையும் குமாரசுவாமியினது உதவியினாலே தருமன் வெற்றிகொண்டு, (இழந்த) பூமியைப்பெற்றுக்கொண்டான். தெய்வத்தால்வந்த வலிமைக்கு உவமைகூறில் எவை உண்டு. எ-று. மூப்படை - கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூவாலாகியபடை. வீமனை நிகராவுற்ற என்பதற்கு வீமனுக்கு எதிரியாக இருந்த எனினும்பொருந்தும். (உக)

அருள்சுரந்தொழுகுகண்ணனறன்மகனவனிகாக்கப்
பெருகினதருமம்வேள்விபெயர்ந்தனபழிகள்பாவ
மொருவினவச்சந்துன்பமோங்கினயோகஞான
மருவுறுமுலகமெல்லாம்வளஞ்சுரந்துயர்ந்தமாதோ.

இ-ள். கிருபைசுரந்து ஒழுகுகின்ற கண்களையுடைய தருமபுத்திரன் பூமியைப்பாதுகாக்க, தருமங்களும் யாகங்களும் விருத்தி அடைந்தன. பழிகளும் பாவங்களும் நீங்கின. அச்சமுந் துன்பமுங்கழிந்தன. யோகமும் ஞானமும் மிக்கன. பொருந்திய உலகங்களெல்லாம் வளங்களைக்கொடுத்து உயர்ந்தன. எ-று. (உஉ)

பாண்டவர்கதையீதாகும்பரமனார்தவத்தால்வந்த
வாண்டவன்மாயைக்கப்பாலமர்ந்திடுந்துரியமூர்த்தி
வேண்டிவந்தருண்மயூரவெற்பினைப்புலரிக்காலை
நீண்டமெய்யன்பினாலேநினைத்திடினீங்கும்பாவம்.

இ-ள். பஞ்சபாண்டவர்களுடையசரித்திரம் இதுவேயாகும். சிவபெருமானது தவத்தால் அவதரித்த ஆன்மநாயகரும், சுத்த மாயாதீதத்தில் விளங்குகின்ற துரியமூர்த்தியும் ஆகிய குமாரசுவாமி விரும்பிவந்து வீற்றிருக்கின்ற மயூரகிரியை வைகறைக்காலத்திலே மிக்க மெய்யன்பினாலே தியானித்தாற் பாவங்கள் கழியும். எ-று. (உங)

அத்தலமதனிற்போந்துசரவணந்தடநீராடிப்
பத்தியாய்முருகற்போற்றிப்பருப்பதம்வலம்வந்தாரேல்
வைத்திடுமடிக்கொன்றாகப்புரவிமாமகப்பேறெய்தி
யுத்தமராகிக்கந்தனுயர்பதமடைவர்மாதோ.

இ-ள். அந்தஸ்தலத்திற்போய், சரவணப்பொய்கையிலே மூழ்கி, அன்புபொருந்திக் குமாரசுவாமியைத்துதித்து, கிரியைப் பிரதக்ஷிணஞ்செய்வ

ராயின், வைக்கின்ற அடிக்கு ஒன்றாகப் பெருமையாகிய அசுவமேதயாக பலனைப்பொருந்தி, உத்தமர்களாய்க் குமாரசுவாமியினது உயர்ந்தபதவியைச்சேர்வர்கள். எ-று. (௨௪)

முற்பிறப்பதனின்மேலாந்தருமத்தைமுயன்றுளோர்க்கே
யிப்பிறப்பதனிலந்தத்தலத்தினுக்கேகல்வாய்க்கு
மப்பருப்பதத்தைநாளுமடைந்துசூழ்வரலுற்றார்கட்
கெப்பயனுறாதவன்னோர்க்கியாவும்வந்தெய்துமன்றே.

இ-ள். முற்பிறப்பிலே மேலாகிய தருமத்தைச்செய்தவர்களுக்கே இப்பிறப்பில் அந்தஸ்தலத்திற்குப்போதல் கைகூடும். அம்மலையை நாடோறும் அடைந்து பிரதக்ஷிணஞ்செய்பவர்களுக்கு எந்தப்பயன் அடையமாட்டா! அவர்களுக்கு அனைத்தும்வந்துசேரும். எ-று. (௨௫)

ஆறுசெல்பவர்யாரேனுமம்மலையதனின்றாங்கர்
நாறிணர்த்தருவினீழல்வைகினர்நடந்திட்டாலு
மூறுசெய்பவங்கடீர்ந்துதாபமதொழிந்துமேலா
மீறிலாச்செல்வமெய்தியின்பமுற்றிருப்பரன்றே.

இ-ள். வழிப்போக்கர்கள் எவர்களாயினும் அந்த மலையின்பக்கத்திலே நறுமணங்கமழ்கின்ற பூங்கொத்துக்களையுடைய விருக்ஷநிழலில் இருந்து போனாலும், (அவர்கள்,) வருத்தத்தைச்செய்யும் பாவங்களினின் நீங்கி, துன்பங்கழிந்து, மேலான அழிவற்ற செல்வத்தைப்பொருந்தி, இன்பத்தை அநுபவித்திருப்பார்கள். எ-று. (௨௬)

வேறு.

அந்தவரைதனிற்புகுந்துவலம்வருதற்கியலாரேதாரதனைச்சூழ்ந்து
வந்தவரைத்தரிசித்தால்வலம்வந்தபயனுதவுமைந்தரின்றேற்
சுந்தரமாமகபெறுவர்தனமின்றேற்றனமுறுவர்சுருதிபோற்றுஞ் [ர்.
கந்தனடிபெறவேண்டிற்சற்குருவினருள்கிடைத்துக் கதியிற்சேர்வா

இ-ள். அந்தமலையிற்போய்ப் பிரதக்ஷிணஞ்செய்தற்கு முடியாதவர்கள் அம்மலையைப் பிரதக்ஷிணஞ்செய்துவந்தவர்களைத் தரிசித்தால், (அத்தரிசனை) பிரதக்ஷிணஞ்செய்த பலனைக்கொடுக்கும். (அஃதன்றி அத்தரிசனையினால்) புதல்வர் இலராயின் அழகையுடைய பெருமைபொருந்திய புதல்வரைப்பெறுவார்கள். செல்வமின்றேற்செல்வத்தைப்பெறுவார்கள். வேதங்கள்துதிக்கின்ற குமாரசுவாமியுடைய பாதங்களைப்பெறவிரும்பினால் நல்ல ஆசாரியருடைய திருவருளைப்பெற்று (அப்பாதங்களை அடைதலாகிய) மோக்ஷத்திற்சேர்வர்கள். எ-று. (௨௭)

ஒருமூன்றுதினம்பகலிலுண்ணலொருமூன்றுநாளிரவிலுண்ண
லொருமூன்றுதினமொருவர்வழங்கிலுணலுதவாரேலுணவுநீர்த
லொருமூன்றுதினமொருவரளித்தாலுமருந்தாமலுறுதலன்றே [ரே
லொருவாதகதியளிக்குங்கிருச்சிரமொன்றெனநூலோருரைசெய்வா

இ-ள். மூன்றுநாள் பகலிற்புசித்தல், மூன்றுநாள் இரவிற்புசித்தல், மூன்றுநாள் ஒருவர்கொடுத்தால் வாங்கிப்புசித்தல் கொடாதொழிவராயிற் புசியாதொழிதல், மூன்றுநாள் ஒருவர்கொடுத்தாலும் புசியாதுவிடல் ஆகிய இவைகளென்ற தவறுதமோக்ஷத்தைக்கொடுக்கின்ற கிருச்சிரவிரதம் ஒன் றென்று பண்டிதர்கள் கூறுவார்கள். எ-று. (உஅ)

ஆயகிருச்சிரமிருபத்தைந்துதவும்பெரும்பலன்றானடல்வெஞ்சூரன்
மாயவடிவேல்விடுத்தவானவர்சேனாபதிவாழ்மயூரவெற்பிற்
றூயசரவணநன்னீர்தோய்ந்திடினுற்றிடுமந்தத்தொல்லைவாவி
நேயமுடன்படிந்துதருப்பணம்புரிந்தோர்க்கநந்தபலனேருமன்றே

இ-ள். அந்தக்கிருச்சிரவிரதம் இருபத்தைந்துகொடுக்கும் பெரியபலன், வலிய கொடியசூரன் அழியக் கூரியவேலைப்பணிகொண்ட தேவசேனாதி பதிவீற்றிருக்கின்ற மயூரகிரியிற்பொருந்திய பரிசுத்தமாகிய நல்ல சரவணப் பொய்கையில் ஸ்நானஞ்செய்யில் வந்துசேரும். அந்தப் பழையபொய்கை யில் அன்பினுடன் முழுகித் தருப்பணஞ்செய்தவர்களுக்கு அநந்தம்பலன் கிடைக்கும். எ-று. (உகூ)

திங்களுறுதினம்வருடமுறுதினமாவபிடேகஞ்சிறப்பச்செய்து
புங்கவர்தம்பெருமாற்குநிறைநிவேதனமுவப்பிற்புரிந்துநீங்காத்[ரே
தங்கியவன்பொடுமலர்கொண் டருச்சித்துப்பதயுகளந் தாழ்ந்துளா
லங்கவர்தாம்பெறுபேற்றைக்கந்தனையல்லால்யாவரறையற்பாலார்.

இ-ள். மாதசங்கிராந்தியாகிய விசேடதினத்திலும்,வருஷப்பிறப்பாகிய விசேடதினத்திலும் மகா அபிஷேகத்தைச் சிறக்ும்படிசெய்து, தேவநாய கராகிய குமாரசுவாமிக்கு நிறைந்த நிவேதனங்களை மகிழ்ச்சியோடு நிவேதி த்து, நீங்காமற்பொருந்திய அன்பினுடனே புஷ்பங்களாலருச்சித்து, இரு பாதங்களையும் நமஸ்கரிப்பராயில், அவர்கள்பெறும்பயனைக் குமாரசுவாமி யேயன்றி வேறுயார்சொல்லும்பகுதியுடையார்! எ-று. (௩௦)

கல்லானற்பணிபுரிந்தோர்கல்லொன்றுக்கொருகற்பங்கந்தவெற்பி
னல்லார்வமுடனிருப்பர்தேரியற்றிவிழவுநனிநடத்தல்செய்தோர்
பல்லாண்டுகுமரனுயர்பதத்திருப்பர்நெய்விளக்குப்பளிததீபம்
வில்லாரும்படிபுரிந்தோர்பலகற்பங்கந்தவரைமேவிவாழ்வார்.

இ-ள். கற்களினால் நல்ல திருப்பணிசெய்வித்தோர்கள் ஒருகல்லுக்கு ஒருகற்பகாலம் நல்லவிருப்புடன் கந்தமலையில் இருப்பார்கள். தேரைச்செய் வித்துத் திருவிழாவை நன்றாய்நடப்பித்தவர்கள் பலவருடங்களுக்கு உயர் ந்த கந்தலோகத்தில் இருப்பார்கள். நெய்விளக்கையும் கர்ப்பூரதீபத்தை யும் ஒளிநிறையும்படி இட்டவர்கள் பல கற்பகாலம்வரைக்கும் கந்தமலையிற் பொருந்திவாழ்வார்கள். எ-று. (௩க)

பத்தியினன்மகரமதிப்பூசமதிற்சரவணநீர்படிந்துவேற்கை
யத்தனையன்பொடுவணங்கிற்கந்தசாயுச்சியத்தையடைவரிந்த
வுத்தமமாமயின்மலையின்பெருமைதனிற்சிறிதறிந்ததுரைத்தேனீது
சத்தியஞ்சத்தியமிவற்றைக்கேட்டோர்கண்முத்திநலஞ்சார்வர்மாதோ.

இ-ள். அன்பினாலே தைமாசத்தில்வரும் பூசத்திற் சரவணப்பொய்கை யிலேமுழுகி, வேலை ஏந்திய திருக்கரத்தையுடைய சகத்பிதாவை அன்போடு நமஸ்கரித்தால், (அவர்கள்) கந்தசாயுச்சியத்தை அடைவார்கள். இந்த உத்தமமாகிய மயூரகிரியின்மகிமையில் (யான்) சொற்பமாய் அறிந்ததைக்கூறினேன். இந்தமகிமைகளைக்கேட்டவர்கள் மோக்ஷ இன்பத்தை அடைவர்கள். இது சத்தியம் சத்தியம். எ-று. (௩௨)

என்றரிவைகண்வலையிலகப்படாவீணைமுனியினிதுகேட்ப,நன்றியுடன்கமலர்மலர்ப் பொகுட்டுறையுநான்முகத்தோ னவின்றனெ ன்னக், குன்றலிலாநைமிசவாரணியமுனிவரர்க்கன்பாற்கூறல்செய் தான், மன்றமறையொருநான்காய்வகுத்தருளும்வியாதமுனிமகிழுஞ்சூதன்.

இ-ள். என்று, பெண்களுடையகண்ணாகிய வலையில் அகப்படாத நாரதமுனிவன் நன்றாய்க்கேட்க, நன்மையோடு தாமரைமலர்ப்பொகுட்டில் வீற்றிருக்கின்ற பிரமன் கூறினான் என்று, தெளிவாக வேதத்தை நான்காய்ப்பகுத்தருளிய வியாசமுனிவன் விரும்புகின்ற (மாணவகனாகிய) சூதமுனிவன் (தவங்) குறைதல் இல்லாத நைமிசாரணியத்தில் இருக்கின்ற இருடிகளுக்கு, அன்பினாற்கூறினான். எ-று. அரிவை - சாதியொருமை. (௩௩)

பாண்டவச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௩௬௩.

---

பதின்மூன்றாவது

அருச்சனைச்சருக்கம்.

முத்தியஞ்செழுத்தாலுளத்திருளறமுயன்று
தத்துவந்தெரிதவத்தினர்மயின்மலைச்சரிதந்
சித்தமார்தரக்கேட்டுநல்லுவகையிற்றிளைத்துப்
பத்திமிக்குமக்குகன்றனைப்பரவியேபகர்வார்.

இ-ள். முத்திபஞ்சாக்ஷரத்தினால் மனமயக்கந்திரமுயன்று உண்மைப்பொருளை அறிந்த முனிவர்கள், மயூரகிரியின் சரித்திரத்தை மனத்திற்பொருந்தக்கேட்டு, நல்ல ஆனந்தக் (கடலிலே) முழுகி, அன்புமிகக் குமாரசுவாமியைத்தோத்திரஞ்செய்து சொல்வார்கள். எ-று. (௧)

அறிவகண்டமாச்சிந்தையையணுவெனவாக்கி
யுறையுஞ்சூதவெத்தலத்தினுமகிமைமிக்குயர்வாங்
குறைவின்மஞ்ஞையம்புரமெனக்கேட்டயாழ்க்கோதி
லிறைவன்செய்திறஞ்சொல்கென்முனிவரனியம்பும்.

இ-ள். அறிவு அகண்டமாக மனத்தை அணுவாக்கி இருக்கின்ற சூத முனிவரரே, குறைவில்லாத மயூரமாநகரம் எத்தலங்களினும் மேன்மை மிக்கு உயர்வாகும் என்று (பிரமா) சொல்லக்கேட்ட, குற்றம் இல்லாத யாழ்வல்ல நாரதமுனிவன் (பின்) செய்தகாரியத்தை அருளிச்செய்க என்று கூற, அம்முனிவரன் கூறுவான். எ-று. அறிவுவிரிய மனத்தை ஒடுக்கினவன் என்பதுகருத்து. (உ)

ஒருவயிற்றினிவ்வுலகெலாம்வைத்தவனுந்திப்
பெரியதாமரைமுளைத்திடும்பிரானடிவணங்கிப்
பொருவினாரதன்மயின்மலைநணுகியான்பூசித்
தருளடைந்திடவேண்டுமென்றார்வமோடறைந்தான்.

இ-ள். (தன்) ஒருவயிற்றில் இந்த உலகமெல்லாவற்றையும் அடக்கிய விட்டுணுவினது பெரிய உந்திக்கமலத்திலே தோன்றிய பிரமாவுடைய பாதங்களை நிகரில்லாத நாரதமுனிவன் நமஸ்கரித்து, மயூரகிரியை அடைந்து அடியேன் பூசனைபுரிந்து (குமாரசுவாமியினது) அருளைப்பெறல்வேண்டும் என்று அன்போடு கூறினான். எ-று. (ங)

புவனம்யாவையும்விகாசநற்றருபத்தாற்பூத்து
நவையிலாதசங்கோசத்தாலடக்கிடுநலங்கூர்
சிவமகன்றிடாச்சத்திதன்வடிவமாஞ்சேயைக்
குவலயந்தருமவன்மனத்திருத்தினன்கூறும்,

இ-ள். சகலபுவனங்களையும் விரித்தல்வேண்டும் என்னும் நல்ல குணத்தினாலே தோற்றுவித்து குற்றம் இல்லாத ஒடுக்கவேண்டும் என்னும் குணத்தினால் (அவற்றை) ஒடுக்குகின்ற நன்மைமிக்க சிவத்தைவிட்டுப்பிரியாத சத்தியின்வடிவாகுங் குமாரசுவாமியை உலகைச்சிருட்டிக்கின்ற பிரமன் மனத்திலே தியானித்துச்சொல்வான். எ-று. விகாசம் - விரிதல். சங்கோசம்- ஒடுங்குதல். தருமம்-குணம். ஆன்மாக்களில்வைத்த அருளினால் அவற்றைச் சிருட்டித்துச் சங்கரிக்கும் சிவம் என்பது கருத்து. ([illegible])

இனிதுகூறினையெம்பிரான்மயின்மலைக்கேகி
நனிவிருப்பொடுபூசனைசெய்கெனநவின்றான்
வினையினீங்கியவிழுத்தவன்விடைகொடுநடந்து
கனியுமன்பொடுங்கந்தவேண்மயின்மலையடைந்தான்.

இ-ள். நன்மையையேசொற்றனை, குமாரசுவாமியினது மயூரகிரிக்குப் போய் மிக்க அன்போடு பூசனையைப்புரிக என்று கூறினான். [illegible] னின்று நீங்கிய சிறந்ததவத்தையுடைய நாரதமுனிவன் விடைபெற்றுப்போய் முதிர்ந்த அன்பினுடன் குமாரசுவாமியினுடைய மயூரகிரியைய

டைந்தான். எ-று. வினையினீங்கிய என்பதற்கு இருவினையினின்று நீங்கிய எனப் பொருள்கொள்ளினுமியையும். (ரு)

கொக்கின்முத்தமுங்கமலமீன்முத்தமுங்கொழிக்குந்
தக்கதெண்டிரைச்சரவணைப்புனிதநீர்படிந்து
செக்கரஞ்சடைச்சிவபிரான்றிருவெண்ணீறணிந்திட்
டக்கமாமணியணிந்தெழுத்தாறுமெண்ணினனால்.

இ-ள். கொக்குகள்தந்த முத்துக்களையுந் தாமரை ஈன்ற முத்துக்களையுங் கொழித்தெறிகின்ற தகுந்த தெளிவான திரையையுடைய பரிசுத்தமாகிய சரவணைப்பொய்கையில் ஸ்நானஞ்செய்து, சிவந்த அழகிய சடையையுடைய சிவபெருமானது திருநீற்றை அணிந்து, பெருமைபொருந்திய ருத்திராக்ஷவடத்தைப்பூண்டு, சடக்ஷரங்களையுந்தியானித்து, எ-று. முத்துண்டாகும் இடங்களுள்ளே கொக்கின்கண்டமும் ஒரு இடமாதலாற் கொக்கின்முத்தமும் என்றார். "இருசிறைக்கொக்கின்கண்டம்" என்பதனாற் கொக்கின்கழுத்தும் முத்து உண்டாதற்கு இடமாதலறிக. (சு)

அரவமீன்றநன்மணியினையஞ்சிறைக்கலுழன்
மருவுதன்மனைக்கிடுசுடராகவைவைக்கும்
பெரியமாமலைவிதியுடன்வலங்கொண்டுபின்னர்
முருகவேளுறைசினகரமடைந்தனன்முனிவன்.

இ-ள். பாம்புகள் ஈன்ற நல்லரத்தினங்களை அழகிய சிறையையுடைய கருடன், இருக்கின்ற தன்கூட்டிற்கு ஏற்றப்படுந் தீபமாகவைக்கின்ற பெரிய விசேடத்தையுடைய கிரியை விதிப்படி பிரதக்ஷிணஞ்செய்து, பின் குமாரசுவாமிவீற்றிருக்கின்ற கோயிலை நாரதமுனிவன் அடைந்தான். எ-று. (எ)

கார்கொடெண்கடலெலிக்குழாமடிதரக்கலக்கும்
பேரராவெனச்சூர்ப்படைப்பெருங்கடல்கலக்கும்
வீரவாகுவாமெந்தையைவிருப்பினுற்பூசித்
தீரமிக்குறப்பழிச்சியேயிறைஞ்சியுள்ளெய்தா.

இ-ள். கரிய தெளிந்தசமுத்திரத்தைப்போன்ற எலிக்கூட்டம் அழியுமாறு கலக்குகின்ற பெரிய சர்ப்பத்தைப்போலச் சூரனுடையசேனையாகிய பெரிய கடலைக்கலக்கிய வீரவாகுதேவர் என்னும் எம்பெருமானைப் பிரியத்தோடு பூசனைபுரிந்து, அன்புமிக ஸ்தோத்திரஞ்செய்து வணங்கி உட்புகுந்து, எ-று. (அ)

கந்தவேடிருமுனஞ்சென்றுகாதன்மீதூர
வைந்துதீஞ்சுவையமுதமேமுதலவற்றாட்டிச்
சுந்தரஞ்செறிதுகிலழகார்ந்திடப்புனைந்து
சந்துபன்மலர்மாலைபூணலம்பெறச்சாத்தி.

இ-ள். குமாரசுவாமியினது சந்நிதியிற்போய், அன்புமிக இனியசுவையையுடைய பஞ்சாமிர்தம்முதலியவற்றினால் அபிஷேகஞ்செய்து, அழகு

மிக்க வஸ்திரத்தைச் சிறப்புமிகச்சேர்த்தி, சந்தனக்குழம்பையும் மலர்ப்புஷ்பமாலைகளையும் ஆபரணங்களையும் அழகுண்டாக அணிந்து, எ-று. (௯)

அங்கபூசனைநிவேதனமழகுறச்செய்து
சிங்கலில்லதோர்தூபமுந்தீபமும்வளைத்துக்
கொங்குவிம்மியமலர்களாற்கோதையர்தம்மோ
டெங்களைதனையருச்சனையினிதியற்றினனால்.

இ-ள். (பாதமுதற் சிரம்வரைக்குஞ் செயற்பாலதாகிய) அங்கபூசனையையும் நிவேதனத்தையும் அழகுமிகச்செய்து, குறைவில்லாத தூபத்தையுந் தீபத்தையுஞ்சுற்றி, நறுமணம் மிக்கபுஷ்பங்களால் இருசத்திகளோடும் நமது தலைவராகிய குமாரசுவாமியைநன்றாய் அருச்சனைசெய்தான். எ-று. ()

வேறு.

பூரணமாய்ச்சுகமயமாயழிவிலதாய்நின்றபரம்பொருளேபோற்றி
காரணமாமலத்தழுந்துமுயிர்க்கருள்வான்சகளமதாங்கடவுள்போற் [றி
நாரணனுமளிகொழுதமருவுயிர்க்குஞ்செந்தோட்டுநளினமேய
வாரணனுமினிதிருப்பவசுரர்குலம்வேரறுத்தவையாபோற்றி.

இ-ள். பரிபூரணமாய், சுகசொரூபமாய், அழிவற்றதாய்நின்ற பரம்பொருளே ஸ்தோத்திரம் (பிறவிக்குக்) காரணமாகிய மலத்தில் அழுந்துகின்ற ஆன்மாக்களுக்கு அருள்புரியும்படி சகளீகரித்துவந்த கடவுளே ஸ்தோத்திரம். விட்டுணுவும் வண்டுகள்குடைய வாசனையைவீசுஞ் சிவந்த இதழ்களையுடைய தாமரைப்பூவில்வீற்றிருக்கின்ற பிரமாவும் சுகத்தோடு இருக்கும்படி அசுரகுலத்தை மூலத்தோடு களைந்த தலைவரே ஸ்தோத்திரம். எ-று. ()

வேடனெனவுருவெடுத்துமான்மகட்காய்வனம்புகுந்தவிமலாபோற்
நாடுமடியாருளமாநளினமலரினிதுறையுநாதாபோற்றி [றி
யேடுடையமலர்க்கடம்புதேனொழுகப்புனைமார்பத்திறைவாபோற்றி
நீடுகலைக்குறையுளெனுமீசனுக்குங்குருவானநிமலாபோற்றி.

இ-ள். விட்டுணுவினுடைய புதல்வியாராகிய வள்ளிநாயகியாருக்காக வேடனைப்போலவடிவங்கொண்டு வனத்திற்போனமலரகிதரே ஸ்தோத்திரம். (தேவரீரைத்) தியானிக்கின்ற அன்பர்களின் இருதயமாகிய தாமரைமலரில் மகிழ்ச்சியுடன் வீற்றிருக்கின்றதலைவரே ஸ்தோத்திரம். இதழ்களையுடைய கடப்பம்பூமாலையைத் தேன்சொரிய அணிகின்ற திருமார்பையுடைய கடவுளே ஸ்தோத்திரம். பெருமையாகிய கலைஞானங்களுக்கு இருப்பிடமாகிய சிவபெருமானுக்கும் ஆசாரியராகிய மலரகிதரே ஸ்தோத்திரம். எ-று. (௧௨)

திருகுசினப்பசுங்கோகைமஞ்ஞைபெறுகொடுஞ்சாபந்தீர்த்தாய்போற்றி, மருவிரியும்பசுந்துளபமாயனுக்குமகவளித்தவரதாபோற்றி, பெரியதவவசிட்டமுனிமைந்தர்துயரகற்றிவிடும்பெருமான்போற்றி, பொருவரியகோசிகற்குமெய்ஞ்ஞானமளித்தருளும்புனிதாபோற்றி.

இ-ள். மாறுபட்ட கோபத்தையுடைய பசிய தோகைபொருந்திய மயில் பெற்ற கொடியசாபத்தை நீக்கியருளினவரே ஸ்தோத்திரம். வாசனைவிரியும் பசிய துழாய்மாலையையணிந்த கிருட்டிணனுக்குப் புதல்வனைக்கொடுத்தருளிய வரதரே ஸ்தோத்திரம். பெருமையாகிய தவத்தையுடைய வசிட்டமுனிவனது புதல்வர்களின் துக்கத்தை நீக்கியருளிய பெருமையுடையவரே ஸ்தோத்திரம். ஒப்பில்லாத விசுவாமித்திரமுனிவனுக்கு மெய்ஞ்ஞானத்தை உபதேசித்தருளிய பரிசுத்தரே ஸ்தோத்திரம். எ-று. (கங)

பூசையுனக்கிலதாகவென்றுமுட்டாட்டாமரையின்பொகுட்டிலோனை
யீசனிடுங்கொடுஞ்சாபமகற்றிநலமளித்திட்டவிறைவாபோற்றி
வாசவன்றன்மூசியெனும்வல்லசுரற்கிகலழிந்துவந்துபோற்ற
நேசமுடனவனைவெலும்வலியுதவிப்புரந்தருளுநிமலாபோற்றி.

இ-ள். முட்செறிந்ததாளையுடைய தாமரைப்பொகுட்டில் இருக்கின்ற பிரமனை உனக்குப் பூசையில்லாமற்போகக்கடவது என்று சிவபெருமானிட்ட கொடியசாபத்தைநீக்கிப் (பூசை உனக்கு உண்டாக என்று) நன்மையைக்கொடுத்தருளிய தலைவரே ஸ்தோத்திரம். இந்திரன் மூசி என்கின்ற வலிய அசுரனுக்குப் போரிலேதோற்றுவந்து பூசிக்க, அன்பினுடன் அந்த அசுரனைவெல்லும் வலியைக்கொடுத்து (அந்த இந்திரனைக்) காத்தருளிய மலரகிதரே ஸ்தோத்திரம். எ-று. (கச)

இந்நிலத்திலடியவர்கள்குறைதவிர்ப்பான்மஞ்ஞைவரையிருந்தா
ய்போற்றி, சென்னிநதிமதிபுனைந்தோனுமையவளோரிருவருக்குஞ்
செல்வாபோற்றி, நின்னடியைக்கருதியுயர்வீடுபெறுநிலைகாணாநீங்கி
ளைகு, மென்னையுமோரடியனெனவருளுதவியாட்கொண்ட விறை
வாபோற்றி.

இ-ள். இப்பூமியில் அடியார்களுடையகுறையை நீக்கியருளும்படி மயூரகிரியில்வீற்றிருந்தருளினவரே ஸ்தோத்திரம். சடையிலே கங்கையையும் சந்திரனையும் அணிந்த சிவபெருமான் பார்ப்பதியார் என்னும் இருவருக்கும் புதல்வரே ஸ்தோத்திரம். தேவரீருடையபாதங்களைத்தியானித்து உயர்ந்த முத்தியைப்பெறாமல் இக்காலம்வரைக்கும் (தேவரீரை) நீங்கியிருக்கும் நாயேனையும் ஒரு அடியனைப்போலக்கருதித் திருவருள்புரிந்து ஆட்கொண்டருளிய தலைவரே ஸ்தோத்திரம். எ-று. (கரு)

வேறு.

நாரதன்றுதித்தல்வேற்கைநம்பிகேட்டுவந்துநோக்கி
யோரிலென்பாளீரைந்தகேயநுதுக்குவமையன்றோ
சீருடைமுனிவவேண்டும்வரமெவன்செப்புகென்னப்
பேரறிவுடையவிணைமுனிவரன்பேசுகின்றான்.

இ-ள். நாரதமுனிவன் (இவ்வாறு) ஸ்தோத்திரஞ்செய்தலை வேலேந்திய திருக்கரத்தையுடைய குமாரசுவாமி திருச்செவிசாத்திமகிழ்ந்து, திரு

நோக்கஞ்செய்து, ஆராயில் எம்மாட்டு நீவைத்த அன்பினுக்கு நிகர் உண்டா! புகழையுடைய முனிவனே வேண்டியவரம் என்னை? விண்ணப்பஞ்செய்க என்றருளிச்செய்ய, பேரறிவினையுடைய வீணையில்வல்ல நாரதமுனிவரன் விண்ணப்பஞ்செய்கின்றான். எ-று. (கசு)

இருவினைவேண்டேனென்னையிழத்தலால்வீடும்வேண்டே
னருளுறுமந்தமெய்யேவேண்டுவனளித்தல்வேண்டு
மருவுருவென்கொலென்றுமதித்துடல்வெறுத்தபோழ்திற்
பொருவிலின்னின்பவாரிபொருந்துறவருள்செய்வாயே.

இ-ள். நல்வினை தீவினையென்னும் இருவினையையும் விரும்பேன்; (அங்ஙனமாயின் முத்தியைவிரும்புகின்றேனோ என்றால்) நானென்பதும் இறத்தலால் அதனையும்விரும்பேன்; அருள்மிக்க அந்த அன்பையே (தேவரீரிடத்தில்) வேண்டுகின்றேன் (அதனையே) அருள்புரிதல்வேண்டும். (வினைக்கீடாக) வந்த இந்த உடம்பு என்னபயனையுடைத்து என்று கருதி இவ்வுடலைத்தள்ளியபொழுதில் ஒப்பில்லாத தேவரீரது இன்பக்கடலைப்பொருந்தும்படி கிருபைபுரிக, எ-று. என்னை இழத்தலால் வீடும்வேண்டேன், அருளுறுமந்தமெய்யேவேண்டுவன் என்பதன்கருத்தைக் "கோலநீடியகிரிபதிவாழ்க்கையுங்குறியேன்" என்னுஞ் செய்யுளானும், "அந்தநல்வரமுத்தியிலரியதொன்றதனைச், சிந்தைசெய்திடுதவத்தரும்பெறுகிலர்" என்னுஞ் செய்யுளானும், கந்தபுராணத்தில் கச்சியப்பசிவாசாரியர் விரித்து வெளிப்படுத்தியிருக்கின்றனர். (கஎ)

என்னவுங்கந்தன்மற்றையெவற்றினும்பற்றுநீங்கி
மன்னியவெம்மேலன்புவைத்துநீயென்றும்வாழ்தி
யின்னுநான்முனிவவென்றுவிளம்பினன்வீணைவேந்த
னன்னவனருளைவாழ்த்தியவ்வரையமர்ந்தான்மன்னே.

இ-ள். என்று நாரதமுனிவன் விண்ணப்பஞ்செய்தலுங் குமாரசுவாமி, பிரகாசிக்கின்ற உபவீதத்தையணிந்த முனிவரனே, பிற எவற்றினும் பற்றற்று நிலையான நம்மாட்டு அன்பைவைத்து நீ என்றைக்கும்வாழ்க என்று அருளிச்செய்தார். வீணைக்கு அதிபனாகிய அம்முனிவரன் அவருடைய கிருபையைத்துதித்து அந்த மயூரகிரியிலிருந்தான். எ-று. கந்தன் விளம்பினன் என இயையும். (கஅ)

மயின்மலைதோன்றுமாறுங்குகனதின்வைகுமாறு
நயமுடைத்தீர்த்தந்தோன்றுநன்மையுமயில்சாரூபம்
வியனுறவெய்துமாறுங்கார்த்திகைவிரதம்வைகு
மியலுநல்வெள்ளிவாரமிருந்திடும்விதியின்பண்பும்.

இ-ள். மயூரகிரிதோன்றுமாற்றையும், குமாரசுவாமி அதில் வீற்றிருக்குமாற்றையும், நயத்தைச்செய்கின்ற தீர்த்தந்தோன்றிய நன்மையையும், மயில் கந்தசாரூபத்தைப் பெருமைமிக அடையுமாற்றையும், கார்த்திகை

விரதத்தை அநுட்டிக்கும் இயல்பையும், நல்ல சுக்கிரவாரவிரதத்தை அநுட்டிக்கும் விதியினது குணத்தையும், எ-று. (க௯)

சட்டியின்விதியுமோங்குதமிழ்முனிகதையுமிக்க
வுட்டெளிவசிட்டன்பூசையுஞற்றியவழியுஞானஞ்
சிட்டனாங்கௌசிகற்குச்செப்பியதிறனும்வாச
மட்டவிழ்மலரோன்வந்துபூசித்துவணங்குமாறும்.

இ-ள். சட்டிவிரதத்தின்விதியையும், உயர்ந்த அகத்தியமுனிவனது சரித்திரத்தையும், மேலாகிய மனந்தெளிந்த வசிட்டமுனிவன் பூசைசெய்த படியையும், ஞானத்தைச் சன்மார்க்கனாகிய விசுவாமித்திரமுனிவனுக்கு உபதேசித்ததன்மையையும், நறுமணத்தையுடைய தேன்பொருந்திய விரிந்த தாமரையாசனனாகிய பிரமா வந்து பூசனைசெய்து வணங்குமாற்றையும், எ-று. (உ0)

பச்சைமாலூர்தியாகுங்கலுழன்பூசனையின்பண்பும்
கச்சமார்வெள்ளையானைக்காவலன்றுதித்தவாறு
மிச்சையினிரவிபூசையியற்றியபண்புமாரன்
முச்சகம்பெரிதுவெல்வான்முயன்றிடும்பூசைப்பண்பும்.

இ-ள். பச்சைநிறத்தையுடைய விட்டுணுவினது வாகனமாகிய கருடனது பூசனையின்தன்மையையும், கழுத்திற்கயிற்றைப்பூணும் ஐராவதயானையையுடைய இந்திரன் பூசித்ததன்மையையும், அன்போடு சூரியன் பூசைசெய்ததன்மையையும், மன்மதன் மூவுலகத்தையும் மிகவெல்லும்படி செய்த பூசையின்தன்மையையும், எ-று. (உக)

தருமன்மாமதலைவந்துதாரிணிவேண்டிப்பூசை
பரிவுடன்புரிந்துநாடுபண்புடன்பெற்றவாறு
மருமைசாறிவவுநல்யாழருந்தவனருச்சித்தான்ற
பிரிவிலாநேயத்தோடும்வைகியபெற்றிதானும்.

இ-ள். பெருமைபொருந்திய தருமபுத்திரன்வந்து பூமியைவேண்டிப் பூசனையை அன்புடன்செய்து அதனைக் குணத்தோடுபெற்றவாற்றையும், அருமைமிக்க முறுக்காணிபொருந்திய நல்ல யாழையுடைய நாரதமுனிவன்பூசித்து மாட்சிமைப்பட்ட நீங்காத அன்போடும் (மயூரகிரியில்) இருந்ததன்மையையும், எ-று. (உஉ)

உரைத்தனம்வெகுளிகாமமயக்கம்விட்டொழிந்துநல்ல
கருத்தொடுதவஞ்செய்கின்றகருதருந்தவத்திர்நீவிர்
மருத்தழைகடம்பனுடன்மகிழ்ந்தனிர்கேட்டவாற்றாற்
பெருத்திடுந்தவத்திராகிவாழியபெரிதுமன்றே.

இ-ள். கூறினேம்; கோபம், காமம், மயக்கம் ஆகிய முக்குற்றத்தையும் நீங்கி நல்லமனத்தோடு தவத்தைச்செய்கின்ற மதித்தற்கரிய முனிவர்களே, நீங்கள் நறுமணம்மிக்க கடப்பம்பூமாலையையணிந்த குமாரசுவா

மியினது திருவிளையாடலை மகிழ்ந்து சேட்டமையினால் மிக்கநலத்தையு டையீராய் நெடுங்காலம்வாழுக. எ-று. செய்யுளாதலிற் காமமுதலியவற் றை முறைபிறழவைத்தார். (உங)

இந்தயாக்கதையைக்கேட்டோர்யாவரேயெனினுமாகச்
செந்திருவாயுள்கல்விஞானமோடுநலஞ்சேர்ந்தே
யிந்திரரிவரேயென்னவிம்மையிலினிதுவாழ்ந்து
கந்தவேளடிநிழற்கீழ்க்கலந்திநிருப்பர்மன்னோ.

இ-ள். இந்தப் பெருமைபொருந்திய புராணத்தைக்கேட்டவர்கள் எவ ராயினுமாக, (அவர்கள்) செல்வம் தீர்க்காயுசு கல்வி ஞானம் முதலியவ ற்றை அடைந்து, இந்திரர் இவர் என்று சொல்லும்படி இம்மையில் நன்றாய் வாழ்ந்து, (மறுமையில்) குமாரசுவாமியினது பாதநிழலின்கீழ் இரண்டறக் கலந்து நித்தியானந்தராயிருப்பார்கள், எ-று. (உச)

என்றுநற்றவர்கள்கேட்பவியம்பினன்புலனைந்தும்
வென்றிடுஞ்சூதன்கேட்டவிழுத்தவர்யாருமோகைத்
துன்றிருங்கடலில்வீழ்ந்துகுகனடிதொழுதுவாழ்த்தி
நன்றுறைந்தனர்களந்தநைமிசவனத்தின்மன்னோ.

இ-ள். என்று, புலன்கள் ஐந்தையும் வெற்றிகொண்ட சூதமுனிவரன் நல்ல தவத்தையுடைய முனிவர்கள்கேட்க அருளிச்செய்தான். (அதனைக்) கேட்ட சிறந்ததவத்தையுடையோர் அனைவரும் சந்தோஷமாகிய நெருங் கிய பெருங்கடலில் அமிழ்ந்தி, குமாரசுவாமியைவணங்கித் தோத்திரஞ்செ ய்து, அந்த நைமிசாரணியத்திற் சுகமாயிருந்தார்கள். எ-று. (உரு)

கந்தவேண்முகங்கள்வாழிகரங்கள்பன்னிரண்டும்வாழி
பைந்தொடைமார்பம்வாழிபங்கயச்சரணம்வாழி
யிந்திரன்புதல்விவாழியெயினர்தங்குமரிவாழி
மைந்துடைமஞ்ஞைசேவல்வாழிமெய்யடியார்வாழி.

இ-ள். குமாரசுவாமியினுடைய திருமுகங்களாறும்வாழுக. திருக்கர ங்கள்பன்னிரண்டும்வாழுக. பசியமாலையையணிந்த திருமார்புவாழுக. செந் தாமரைமலர்போன்ற இருபாதங்களும்வாழுக. தெய்வநாயகியார்வாழுக. வள்ளிநாயகியார்வாழுக. (வாகனமும் கொடியுமாகிய) வலியினையுடைய மயிலும் கோழிச்சேவலும்வாழுக. மெய்யன்பர்கள்வாழுக. எ-று. (உசு)

அருச்சனைச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் ருஅக.

---

மயூரகிரிபுராணமுற்றுப்பெற்றது.

---

திருச்சிற்றம்பலம்.

வேலுமயிலுந்துணை.

# பிழை திருத்தல்.

—:*:—

| பக்கம் | வரி. | பிழை. | திருத்தல். | சேர்த்தல். |
|---|---|---|---|---|
| ௬ | ௨௯ | காச்சி | காய்ச்சி | |
| ௮ | ௨ | மிருப்பிடமே | மிடமே | |
| ௧௫ | ௨௯ | பாஞ்சசன்னிய | (பாஞ்சசன்னிய) | |
| ,, | ௩௫ | னனுச | னநுச | |
| ௧௭ | ௧ | எங்களுடையவரவை | (எங்களுடையவரவை) | |
| ,, | ௬ | அது வெளியேவந்து எங்களை | (அது வெளியேவந்து எங்களை) | |
| ௪௮ | ௧௩ | தம்பதம் | தன்பதம் | |
| ,, | ௨௮ | கூட்டு. | கூட்டுக. | |
| ௨௧ | ௧௩ | வுரைதது | வுரைத்து | |
| ௨௨ | ௧௯ | விழுங்கிப் | விழுங்கி | |
| ௨௯ | ௩௬ | கோதாவிரி | கோதாவரி | |
| ௨௭ | ௧ | கோதாவிரி | கோதாவரி | |
| ௩௦ | ௩௬ | மைஞ் | மஞ் | |
| ௩௩ | ௩௯ | ... ... ... | ... ... ... | அரசமரமென்பதற்கு அரனுடைய சமரமெனினும் பொருந்தும். |
| ௩௬ | ௩௬ | சிவபெருமானுடைய | சுப்பிரமணிய சுவாமியினுடைய | |
| ௩௫ | ௩௧ | சிறயை | சிறையை | |
| ௬௦ | ௨௨ | வனுச | வநுச | |
| ௬௯ | ௨௬ | ஆயுதங்களையும்சிறந்த | ஆயுதங்களிற்சிறந்த | |
| ,, | ௩௨ | சாமரை | சாமர | |
| ௬௭ | ௭ | உடன்பட, | உடன்பட | |
| ௫௧ | ௩௨ | பிரதட்சணம் | பிரதக்ஷிணம் | |
| ௫௨ | ௨௦ | பிரதட்சணஞ் | பிரதக்ஷிணஞ் | |
| ௫௮ | ௩ | மனுதி | மநாதி | |
| ௯௯ | ௨ | கேழ்வனுஞ் | கேள்வனுஞ் | |
| ௯௮ | ௧௫ | கிரீச்சரஞ் | கிருச்சிரஞ் | |
| ,, | ௧௯ | கிரீச்சரம் | கிருச்சிரம் | |
| ௭௩ | ௩௯ | ... ... ... | ... ... ... | சாந்தநெஞ்சுமென்பதற்கு சாந்தகுணமமைந்த இருதயமும் எனினும்பொருந்தும், |
| ௭௬ | ௧௩ | தெக்கணங் | தெக்கிணங் | |
| ,, | ௧௭ | மலரும், விளங்குகின்ற | மலர்மாலை விளங்குகின்ற | |
| ௭௯ | ௧௫ | சடாட்சர | சடக்ஷர | |
| ,, | ௨௭ | மெஞ்ஞானம் | மெய்ஞ்ஞானம் | |
| ,, | ௨௮ | சாக்கான | சாகான | |
| ௭௭ | ௨௫ | குற்றமின்றி, | குற்றமின்றி | |

| பக்கம் | வரி. | பிழை. | திருத்தல். | சேர்த்தல். |
|---|---|---|---|---|
| எஅ | க | ... ... ... | ... ... ... | நோய்நண்ணு ரச்சமின்றி என்பதற்கு நோயடையார். பயமின்றி எனினும் பொருந்தும். |
| அச | கஅ | பத்துபலம் | பத்துப்பலம் | |
| அஅ | உரு | கரங்களிற்பொருந்திய | கரங்களிற் | |
| அகூ | ௩எ | ஒளிபொருந்திய முகமும் | ஒளிபொருந்திய ஒரு திருமுகமும் | |
| கூக | உரு | ... ... ... | ... ... ... | மக்களைப் பெறுவர் எனமுடித்துஎன்றுமென்பதை அடைவர் என்பதனோடியைத்துப் பொருள் கொள்ளினுமமையும். |
| கூ௩ | உ௩ | சடாட்சரத்தை | சடக்ஷரத்தை | |
| கூச | அ | சச்சிதானந்த | ஞானானந்த | |
| கூரு | ௩உ | விளக்குருப் | விளங்குருப் | |
| கூசா | ரு | வின்னேன்னைப | லிங்கோன்னைப | |
| க௦௦ | சா | உண்டாக்கிகொடுத்தது | உண்டாக்கிக்கொடுத்தது | |
| க௦க | கஎ | தட்சண | தக்ஷிண | |
| க௦ச | ௩உ | மகிழும் | மருளும் | |
| ,, | ௩எ | மகிழ்ச்சி | மயக்கங் | |
| க௦அ | உ௩ | யென்னுவினவ | யென்றுவினவ | |
| கக௦ | அ | சுயேச்சையினால் | (சுயேச்சையினால்) | |
| ககக | கசா | ரில்லைத் | ரில்லை | |
| ககச | ச | றருளவந்தோர் | றருளிவந்தே | |
| ,, | கூ | (யான்) கூற, | யாம் கூறித்திரும்பினேம். | |
| கஉரு | ரு | சிருட்டித்தேன், | சிருட்டித்தேன். | |
| க௩சா | அ | மாறு | மாநா | |
| ,, | கசா | செலுத்திபோருக்கு | செலுத்திப்போருக்கு | |
| கச௦ | கக | ரோட்டா | ஞெட்டா | |
| ,, | உச | தோட்டாமது | தொட்டா | |
| கசகூ | உ௩ | என்றுகூறி | என்றுகூறிக் | |
| கசா௩ | ச | யெனினுமாகச் | யெனினுமாக | |